# கர்ம யோகம்

அருளியது :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு R. வரதராஜன், B. A., B. T.,







வெளியிடுவோர் :

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா.

விலை ] 1981 [ ரூ. 4-00

# முகவுரை

அளவு கடந்த தெய்வீக ஞானத்திற்கும், தெய்வீக அமைதிக்கும் தெய்வீக பேரானந்தத்திற்கும், முக்திக்கும் இருப்பிடமாகிய பரம்பொருளைப் போற்றி வணங்குகிறேன். நம் வாழ்க்கையின் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கங்கள். அவருடைய பேரருள் உங்கள் உலகியல் மற்றும் ஆன்மீக வாழ்க்கையில் முன்னேற்றமும், வளமும், வெற்றியும் வாரி வழங்கட்டும்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குரு மகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞான யக்ஞப் பணியில் இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முன்னணியில் இருக்கின்றது. திருவள்ளுவர், கம்பர், அறுபத்து மூன்று நாயன்மார், பன்னிரண்டு ஆழ்வார்கள், பட்டினத்தார், ஔவையார் ஆகிய புகழ்பெற்ற பெரியோர்கள் தோன்றிய புண்ணிய பூமியில் வசிக்கும் ஆன்மீக உள்ளம் படைத்த எண்ணற்ற மக்களுக்கு குருதேவரின் உணர்ச்சியூட்டக் கூடிய போதனைகளை வழங்குவதில் வெற்றி பெற்றுள்ளது. இராசிபுரம் சிவானந்த யோகாசிரமத்தில் இந்த ஞான யக்ஞப் பணி முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடைபெறுகிறது. அதனால் தமிழ் நாட்டிலும், வெளி நாடுகளில் தமிழர்கள் வாழும் பகுதிகளிலும் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்கள் ஆகியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்டு, வாழ்வில் மறுமலர்ச்சியுண்டாக்கும் தார்மீகமும், ஆன்மீகமும் போதிக்கும்

நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புகள் இன்று இருக்கின்றன. இதற்கு யோகி சந்திரசேகரன் அவர்கள், அவருடைய ஆன்மீக சகோதரர்கள், நலம் நாடுபவர்கள், மற்றும் இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் இந்த நற்பணிக்கு உதவி செய்பவர்கள் ஆகியவர்களின் தளராத, மனப்பூர்வமான முயற்சிகள் தாம் காரணம். மொழிபெயர்ப்பாளர்கள், இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்பணிக்கு ஒத்துழைப்பும், தவருத உதவியும், வியக்கத்தக்க முறையில் செய்துவரும் சேலம் லிட்டரரி பிரஸ் ஆகியவர்கள் ஒன்று சேர்ந்து செய்யும் இந்த இராசிபுரம் ஞான யக்ஞப் பணி அனைவரும் மெச்சத் தகுந்த முறையில் விளங்குவதோடு, பொது மக்களுக்கு நீதி நெறியிலும், ஆன்மீகத் துறையிலும் சிறப்பான முறையில் பயன்படும்படி மேன்மையான தொண்டாகவும் அமைந்துள்ளது. இந்த நூல்கள் ஆன்மீகப் பொக்கிஷமாகும். இந்தப் புனிதமான பணியைச் செய்வதற்கு மிகவும் சுறுசுறுப்போடு ஒன்ருகச் சேர்ந்து ஒருவருக்கொருவர் உதவி செய்த நல்ல ஆன்மாக்கள் அனைவருக்கும் இறைவன் பேரின்பத்தையும், பொருளையும் வாரி வழங்கவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

இவ்வாண்டுக்கான ஞான யக்ஞத் தொடரில் "கர்ம யோகம்" என்ற நூலை திரு. R. வரதராஜன், B. A., B. T. அவர்கள் மிக அற்புதமாகத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

இந்த நூல் இவ்வுலக மக்களின் அன்ருட வாழ்க்கைக்கான நடைமுறைச் செயல் முறைகளுக்கு இன்றியமையாதவை ஆகும். எனவே இந்த நூல்

மிகவும் மதிப்புள்ளது. மக்களுக்கு அன்றாட வாழ்க்கையில் பற்பல துறைகளில் அதிக அளவு பயன்படும். இந்த நூலைப் பெரும்பாலான மக்கள் படித்துப் பயன் பெற வேண்டுமென விரும்புகிறேன். இந்தப் புனிதப் பணியில் ஈடுபட்டுள்ள அனைவருக்கும் இறைவன் தெய்வீக அருளைப் பொழிவாராக. இப்பணி தொடர்ந்து முன்னேற்றமும் வெற்றியும் பெற வாழ்த்துகிறேன். இந்த ஆன்மீகப் போதனைகளைப் படிப்பவர் அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழியவேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda
ॐ

சிவானந்தா ஆசிரமம்
முனி - கி - ரேதி
ரிஷிகேசம் - 24-4-81

# பொருளடக்கம்

## கர்ம யோகம்

ஓம்

# கர்ம யோகம்

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | பெயரும், விலாசமும் | | ரூபாய் |
|---|---|---|---|
| 1. | 'ஞானதான வள்ளல்' திரு. S. கோவிந்தசாமி முதலியார் & திருமதி தனலக்ஷ்மி அம்மாள், ஈரோடு. | ... | 101 |
| 2. | திரு. T. S. A. முருகேசன், மளிகை கிழக்கு ரத வீதி, திருச்செங்கோடு. | ... | 51 |
| 3. | 'முருகனடிமை' திரு. அ. அன்புமணி, ஸ்ரீ முருகன் ஸ்டோர்ஸ், திருச்செங்கோடு. | ... | 101 |
| 4. | Sri. K. Harihararaman, B. A., B. Com. Auditor, Erode-1. | ... | 50 |
| 5. | திரு. P. கணபதி கவுண்டர் 'முன்சீப் தோட்டம்' அரியாகவுண்டம்பட்டி, சேலம் Dt. | ... | 101 |
| 6. | திரு. C. அன்புமலர், B. Com., S/o. S. சின்னுசாமி, B. A., B. L., ஈரோடு. | ... | 100 |
| 7. | திரு. M. R. கணபதி, ஆசிரியர், மேல் நிலைப்பள்ளி, தொ. ஜேடர்பாளையம், சேலம் Dt. | ... | 100 |
| 8 | திரு. R. V. P. சாரதி, 'வள்ளலார் பணி மன்றம்' இராசிபுரம். | ... | 50 |
| 9. | திரு. A V தனுஷ்கோடி M. C. C. தெரு, விருதுநகர். | ... | 101 |

10. திரு. P. M. மாரிமுத்து முதலியார்,
நூல் வியாபாரம், துறையூர், திருச்சி Dt. ... 100

11. திரு. T. பிரபு S/o. திரு. V. மூர்த்தி,
இராமநாதபுத்தூர் (P. O.) சேலம் Dt. ... 50

12. திருமதி ரேவதி சிவப்பிரகாசம்,
'ஜோதி பாலமந்திர்' காமராஜ் நகர் காலனி,
சேலம்-14. ... 100

13. 'குருபக்தி ரத்ன' திரு. V. A. அண்ணாமலை,
இரும்பு & பெயிண்ட் வியாபாரம்,
மதுரை-1. ... 100

14. 'அமரர்' திரு. K. நாராயணசுவாமி அய்யர்
நினைவாக 'பேராசிரியர்'
திருமதி சரஸ்வதி இராமநாதன், M. A.
பள்ளத்தூர், இராமநாதபுரம் மாவட்டம். ... 100

15. 'சிவானந்த பக்தன்' விருதுநகர். ... 108

16. திரு. T. R. இராமநாதன்,
'கற்பகம் கார்டன்' அடையாறு,
சென்னை-20. ... 101

17. Sri. A. R. M Manickavachagam Chettiar,
Metal Wares Emporium, Bangalore-53. ... 51

18. திரு. M. பாலதண்டபாணி,
Prop: Karnataka Metal Stores,
பெங்களூர்-53. ... 100

19. Sri. S. P. Janarthanan,
The Soba Trading Co, Bangalore-53. ... 50

20. Sri. V. Jagannathan & Sons,
Banana Commission Agents, Bangalore-2. ... 101

21. திரு. ம. இராஜரத்தினம், B. A., B. T., தலைமை ஆசிரியர் & யோகாசன ஆசிரியர், அரசினர் உயர்நிலைப்பள்ளி, சேலம் Dt. ... 50

22. திரு. M. தங்கமணி, M. Sc. போட்டோ சென்டர், திண்டுக்கல், மதுரை Dt. ... 100

23. 'குருபக்தி ரத்ன' திரு. A. S. தனுஷ்கோடி, Prop: நவஜீவன் போட்டோ ஸ்டுடியோ, தேனி, மதுரை மாவட்டம். ... 200

24. ஸ்ரீ சுவாமி நிர்மலானந்தா, சிவானந்தா நகர், ரிஷிகேஷ் (இமயமலை). ... 300

25. ஸ்ரீ ஆண்டாள் & கோ, கொமாரபாளையம்-638 183 ... 100

26. திரு. D. ஜெயராமுலு நாயுடு, B. A., B. L., அட்வகேட், நாமக்கல். ... 50

27. டாக்டர். K. ஜெயராமசந்திரன், M. B. B. S., நாமக்கல். ... 50

28. திரு. M. பாலசுப்பரமணியம், Prop: அசோக் லாட்ஜ், நாமக்கல். ... 100

29. ஸ்ரீ மாதாம்பா ஸரஸ்வதி, ஸ்ரீ பரிமள ராஜராஜேஸ்வரி நிலையம், வேலூர், சேலம் ஜில்லா. ... 51

30. திரு. M. தனகோபால், ஷராப் வியாபாரம், இராசிபுரம். ... 50

31. திரு. S. மல்லி செட்டியார், தலைவர், ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த தவ இல்லம் வனவாசி (P. O.) சேலம் Dt. ... 100

32. திரு. N. P. S S. நடராஜ நாடார், தி ஓரியண்டல் லித்தோ பிரஸ், சிவகாசி ... 100

33. திரு. L. தர்மராஜன் &
திருமதி L. அம்சவேணி, ஆசிரியர்கள்,
அரசினர் மேல் நிலைப் பள்ளி,
சிங்களாந்தபுரம், சேலம் Dt. ... 50

34. பகவான் ஸ்ரீ ஞானானந்தர் அடிமை,
இராசிபுரம். ... 50

35. திரு. A. O. கெங்காதர செட்டியார் &
திருமதி சின்னம்மாள், இராசிபுரம். ... 50

36. திருமதி K. சூரியகுமாரி,
R. S. புரம், கோவை-2. ... 50

37. திரு. மனம்சேர சந்திரகாசன், M.A.,B.Ed.,
தலைவர், சேலம் மாவட்ட இந்து சமய மன்றம்,
சேலம்–7. ... 50

38. திருமதி பாவாயம்மாள்
பழனியப்ப செட்டியார்,
வியாபாரம், இராசிபுரம். ... 50

39. திரு. மு. கண்ணப்பர்,
பவானி-638 301. ... 50

40. திரு. A. ராமையா நாடார்,
பெருமாள் குளம், ஆசீர்வாதபுரம் (P.O.)
நெல்லை Dt. ... 52

41. Sri V. Soundappan,
Yogamaya Textile Agency,
Vembadithalam-637 504, Salem Dt. ... 100

42. திரு. M. S. K. அப்பாவு செட்டியார் &
கம்பெனி
கைத்தறி ஜவுளி வியாபாரம், இராசிபுரம். ... 100



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

உ

# கர்ம யோகம்



## 1. கர்ம யோகத்தின் சாரம்

கர்ம யோகம், பக்தி யோகம், ராஜ யோகம், ஞான யோகம் ஆகிய நால்வகை யோகங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை. கர்ம யோகம் பக்தி யோகத்துக்கும், பக்தி யோகம் ராஜ யோகத்துக்கும், ராஜ யோகம் ஞான யோகத்துக்கு மாகப் படிப்படியாக அழைத்துச் செல்கின்றன. ஞானம்தான் பராபக்தி. பக்தி என்பது ஞானத்தி லிருந்து வேறுபட்டதல்ல. இதை நாம் எப்பொழுதும் நினைவில் கொள்ளவேண்டும். உண்மையில் ஞானம் பக்தியை பெருக்கிக்கொள்ள உதவும்.

கர்ம யோகம் உள்ளத்தைத் தூய்மைப் படுத்து கிறது. பக்தி யோகம் மனம் இங்குமங்கும் அலைந்து திரிவதைத் தடுக்கிறது. ராஜ யோகம் மனதைக் கட்டுப்படுத்தி பல்வேறு வகைப்பட்ட சங்கல்பங் களாகிய ஆசைகளை அழித்துவிடுகிறது. ஒவ்வொரு வகை யோகமும் அதற்கு முந்தைய யோகத்தின் முடிவேயாகும். கர்ம யோகத்தின் நிறைவு பக்தி யோகம்; பக்தி யோகம், கர்ம யோகம் ஆகிய வற்றின் நிறைவு ராஜ யோகம்; ஞான யோகம் மேலே கூறப்பட்ட மூன்று யோகங்களின் முடிவாகும்.

கர்ம யோகப் பயிற்சி ஒரு சாதகனை ஆன்மீக ஞானத்தைப் பெறுவதற்கேற்ற முறையில் தயார் செய்கிறது; வேதாந்தத்தை கற்பதற்குரிய சாதகனாக ஆக்குகின்றது. இதையறியாதவர்கள்

கர்மயோகத்தைப் பற்றிய அடிப்படைப் பயிற்சி இல்லாமலே ஞான யோகத்தை நேரடியாக நாடிச் செல்கிறார்கள். அதன் காரணமாக சத்தியத்தை அறியமுடியாமல் வருந்தத்தக்க முறையில் தோல்வி அடைகிறார்கள். மனதில் மாசுகள் ஒளிந்திருக் கின்றன. மனம் விருப்பு, வெறுப்புக்கள், பொறாமை ஆகியவைகளால் நிரம்பி இருக்கிறது. பிரம்மத்தைப் பற்றி பேசுகிறார்களே தவிர பல வகையான பயனற்ற தர்க்கங்கள், வாதப் பிரதிவாதங்கள், கருத்து வேறு பாடுகள், முடிவற்ற பேச்சுக்கள் ஆகியவைகளில் தான் ஈடுபடுகிறார்கள். அவர்கள் தத்துவம் உதட்டளவில் நின்றுவிடுகிறது. அவர்களை வாய் வேதாந்திகள் என்று கூறலாம். ஆனால் இடை விடாத தன்னலமற்ற சேவையாகிய நடைமுறை வேதாந்தம்தான் உண்மையில் தேவை.

''எவ்வித நோக்கமுமின்றி, வேலைக்காகவே வேலையைச் செய்,'' என்று சொல்லும் போது மிகவும் நன்றாகத்தான் இருக்கின்றது. ஆனால் ஒருவர் செயலில் இறங்கி, நடைமுறையில் பயில முயற்சிக்கும் போது, ஒவ்வொரு நிலையிலும் இடை யூறுகளை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கிறது. ஒரு ஞானி முற்றிலும் தன்னலமற்று, எவ்வித நோக்கும் இன்றி செயலாற்றலாம். உலகத்தைத் துறந்த துறவி ஒருவர் தன்னலமற்ற செயல்களைச் செய்யமுடியும். இல்லறத்தானின் மனதில் பல் வேறு வகையான ஆசைகள் நிறைந்திருக்கின்றன. தான் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் ஒரு பயனை எதிர்பார்க்கிறான். ஆனால் அவ்வாறு பயன் கருதாமலிருக்குமாறு தன் மனதை அடக்க அவனாலும் முடியும். மனதைக் கட்டுப்படுத்துவதால் அவ்வாறு செய்யலாம். அதனால் தன்னலம் கருதும் இயல்பு சிறிது சிறிதாக அழிந்துவிடும். நிஷ்காம்ய கர்மத்தின் (தன்னலமற்ற சேவையின்) சிறப்பை

அவன் உணர்வான். அதன் பின்னர் எவ்வித நோக்கமுமின்றியும், பயன் கருதாதும் அவன் செயலாற்றுவான். ஆனால் அதற்குச் சிறிது கால மாகலாம். அதுவரை பொறுமையுடனும் விடா முயற்சியுடனும் இருக்கவேண்டும்.

கர்மயோகப் பயிற்சிக்கு இரண்டு விஷயங்கள் இன்றியமையாதவை. கர்மயோகி செயல்களின் பயனில் பற்றற்று இருக்கவேண்டும். அவன் உலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் இறைவனின் தோற்றங்களே என்ற உணர்வுடன் தான் செய்யும் செயல்களை இறைவன் திருவடிகளில் அர்ப்பணிக்க வேண்டும். பற்றற்ற தன்மையால் துயரத்தி னின்றும் அச்சத்தினின்றும் விடுதலை கிடைக்கும். பற்றற்ற தன்மை ஒருவனை முற்றிலும் நெஞ்சுர முள்ளவனாகவும் அச்சமற்றவனாகவும் செய்யும். ஒருவன் தன் செயல்களனைத்தையும் இறைவனின் திருவடிகளில் சமர்ப்பிக்கும்போது, இறைவனிடம் பக்தி மேலிட்டு இறைவனுக்கு அருகில் நெருங்கு கிறான். இறைவன் அவனுடைய ஐம்பொறிகளின் வாயிலாக நேரடியாகச் செயல்படுவதை படிப்படி யாக உணரத் தொடங்குகிறான். தன்னுடைய கடமைகளை ஆற்றுவதில் அவன் எவ்வித பளுவையோ, துன்பத்தையோ உணர்வதில்லை. அவனுக்கு எல்லாம் எளிதாகத் தோன்றுகிறது. பொய்யான எண்ணத்தின் காரணமாக முன்பு அவனுக்குப் பளுவாகத் தோன்றிய உணர்வு இப்பொழுது மறைந்து விட்டது.

கர்மத்தின் தத்துவம் வேதாந்தத்தில் ஒரு முக்கியமான அங்கமாகும். அது வாழ்க்கை, பிரபஞ்சம் ஆகியவற்றின் விந்தையான மர்மத்தை விளக்குகின்றது. அது அனைவருக்கும் ஆறுதலும், தேறுதலும், அமைதியும் அளிக்கின்றது. அது

தாஞகவே எளிதில் யாவருக்கும் விளங்கும் உண்மைப் பொருள். அதிர்ஷ்டவசமாக, மேலே நாட்டினரும் அதன் இன்றியமையாத தன்மையையும் உண்மை நிலையையும் உணரத் தொடங்கியுள்ளனர். அமெரிக்க நாட்டினருக்குக்கூட இந்தக் கொள்கையில் முழுநம்பிக்கை ஏற்பட்டுள்ளது. அறிவுள்ள எந்த மனிதனும் அதை ஏற்றுக்கொண்டு தான் ஆகவேண்டும். கர்மத்தின் சிறப்பைப்பற்றி நன்கு அறிந்துகொள்வதற்கு வேறெந்த வழியும் இல்லை. ''நீ எதை விதைக்கின்ருயோ, அதையே அறுவடை செய்வாய்,'' என்ற பழமொழி பௌதிக உலகியலுக்கு மட்டுமின்றி ஒழுக்க நெறிக்கும் ஏற்ற தாகும். உன்னுடைய ஒவ்வொரு எண்ணமும் ஒவ்வொரு செயலும் உன்னிடம் சில இயல்புகளை உண்டாக்கும். அந்த இயல்புகள் இவ்வுலகத்தில் உன் வாழ்க்கையையும் அதற்குப் பின்னருள்ள நிலையையும் பாதிக்கும். தன்னலம் கருதா உணர்வுடன் நல்ல செயல்களைச் செய்தால் நீ மேன்மை பெற்று பேரானந்தமும், அமைதியும் நிறைந்துள்ள உலகை அடைவாய். ஆன்மீக ஏணியின் அடியிலுள்ள முதற்படிதான் கர்மா அல்லது செயல் எனப்படுவது. ஆனல் அது நம்மை வாய்ச் சொற்களால் விவரிக்கவொண்ணுத மேலான நிலைக்கு உயர்த்திவிடும். அதன் பெருமையை வர்ணிக்க முடியாது. அது கர்வம், அறியாமை தன்னலங் கருதுதல் ஆகிய இயல்புகளை அழித்து விடுகிறது. அது மிகச் சிறந்த விளைவுகளை உண்டாக்குகிறது. அது வளர்ச்சிக்கும் பரிணும மாறுதலுக்கும் உதவுகிறது.

விடுதலை மனிதனுடைய பிறப்புரிமை. அதுவே வாழ்வும், அறிவும் எல்லையற்ற பேரின்பமும் ஆகும். விடுதலை என்பது அழியாத அமர நிலையாகும்; அமைதியும் அதுவே. உணர்ந்தோ, உணராமலோ,

அறிந்தோ, அறியாமலோ மக்கள் அனைவரும் இந்த விடுதலையைப் பெற முயலுகிறார்கள். விடுதலை பெறுவதற்காக நாடுகள் போர்க்களங்களில் போராடுகின்றன. தேவையிலிருந்து விடுதலை பெறுவதற்காக, திருடன் திருடுகிறான். ஆனால் அவன் மேற்கொள்ளும் வழி குறுகிய மனப்பான்மை யுடன் கூடியது; சுற்றிவளைத்துச் செல்வது. நீ எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடியும் இறைவனை யும் விடுதலையையும் நோக்கி இருக்கிறது.

இறையுணர்வு பெறுவதான இலட்சியத்தை அடைய நீ வெவ்வேறு பாதைகளின் வழியே செல்லலாம். கைலாய கிரியை அடைவதற்கு பத்ரி நாராயண், அல்மோரா, கங்கோத்ரி, லடாக் ஆகிய வெவ்வேறு வழிகளில் பிரயாணம் செய்வதைப் போல், வாழ்க்கையின் இலட்சியத்தை அடைய கர்ம யோகமாகிய செயல் வழி, பக்தி யோகமாகிய அன்பு வழி, இராஜ யோகமாகிய மனதை கட்டுப் படுத்தும் வழி, ஞான யோகமாகிய தன்னாராய்ச்சி மூலம் ஞானம் அடையும் வழி ஆகியவற்றைப் பின் பற்றலாம். கல்கத்தாவை அடைய், ரயில், கார், கப்பல், ஆகாய விமானம் ஆகியவைகளில் செல்ல லாம். அம்மாதிரியே வாழ்க்கையின் இலட்சியம் அல்லது ஆன்மீக இலட்சியத்தை அடைய இந்த நால்வகைப் பாதைகளில் எதை வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்.

பகவான் கீதையில் இதையே சொல்கிறார் :

"பார்த்தா! மனிதர்கள் என்னை எவ்வாறு அணுகினாலும் நான் அவர்களை வரவேற்கிறேன். ஏனெனில் மக்கள் வரும் எந்தப் பாதையும் என்னுடையதே ஆகும்."

இந்த நான்கு பிரிவுகளும் முற்றிலும் வெவ் வேறானவை அல்ல. அவைகளுக்கிடையே எவ்வித

மான வரையறையும் இல்லை. அவைகள் ஒன்றுக் கொன்று தொடர்பில்லாமல் உள்ளவையுமல்ல. ஒவ்வொருவரிடத்திலுமுள்ள இயல்பு, மனநிலை ஆகியவைகளுக்கேற்ப இந்த நெறிகள் அமைக்கப் பட்டுள்ளன. அவைகள் வெவ்வேருனவை அல்ல. செயலாற்றல் உள்ளவர்களுக்கு செயல்படும் நெறி பொருத்தமானது. உணர்ச்சி வசப்படுபவனுக்கு அன்பு நெறி ஏற்றது. மர்மமான மன நிலையுள்ள வருக்கு ராஜ யோகம் தகுந்தது. உள்ள உறுதியும் பகுத்தறிவும் ஆற்றலும் உள்ளவருக்கு ஞான யோகம் மிகவும் பொருத்தமானது. ஒவ்வொரு நெறியும் ஒரு வகையில் மற்ற நெறியோடு கலந்து விடுகிறது. முடிவில் இவை நான்கும் இணைந்து ஒன்ருகவே ஆகிவிடுகின்றன. ''ராஜ யோகம் எங்கு முடிகிறது? ஞான யோகம் எங்கு தொடங்குகிறது?'' என்று சொல்வது மிகவும் கடினம். வெவ்வேறு நெறிகளில் செல்லும் சாதகர் கள் முடிவில் ஒரு பொதுவான மேடை அல்லது சந்திப்பில் ஒன்று சேர்கின்ருர்கள்.

அற்பமான தன்னை அழித்துக் கொள்வதற்காக ஒரு கர்ம யோகி தன்னலத் தியாகத்தைப் பயில்கிருன். ஒரு பக்தன் தன் அகந்தையை அழிப் பதற்காக தன்னையே அர்ப்பணித்துக்கொள்வதைப் பயில்கிருன். ஞானி தன்னல மறுப்பைப் பயில்கிருன். வழிகள் வெவ்வேருனவை. ஆனுல் அவை எல்லாம் மனித குலத்தின் துன்பத்துக்கு மூல காரணமாக இருக்கும் அற்பமான ஆனுல் அகந்தை மிக்க ''நான்'' என்பதை அழிக்கவே விரும்புகின்றன. இந்த வேலை நிறைவு பெற்றவுடன், அவைகள் ஒரே இலட்சியத்தில் கூடுகின்றன.

பகவான் கீதையில் சொல்கிருர் :

''பார்த்தா! செயல்கள் அனைத்தும் முடிவில் ஞானத்தில் நிறைவு பெறுகின்றன''

அவ்வாறே பக்தனும் ஞானத்தை அடைகிறான். கண்ணன் கீதையில் இதைப் பற்றி கீழ்க் கண்டவாறு சொல்கிறார்.

''எக்காலத்திலும் ஒருமனப்பட்டு, அன்பினால் வழிபாடு செய்யும் இந்த பக்தர்களுக்கு நான் பகுத்தறியும் யோகத்தை வழங்குகிறேன். அதன் காரணமாக அவர்கள் என்னையே வந்தடைகிறார்கள்.''

பதினெட்டாம் அத்தியாயத்தில் பகவான் மேலும் சொல்கிறார் :

''ஒருவன் பக்தியின் காரணமாக என் உண்மையான நிலையை உணர்கிறான். நான் யார் என்பதையும் எத்தன்மையன் என்பதையும் உள்ளபடி உணர்ந்தபின் விரைவில் என்னை அடைகிறான்.''

கர்ம யோகம், பக்தி யோகம், ராஜ யோகம் ஆகியவை ஒரு முடிவை அடைவதற்குரிய வழிகளாகும். ஞானம்தான் முடிவு. ஆறுகளெல்லாம் கடலில் கலப்பதுபோல் கர்மயோகம், பக்தி யோகம், ராஜயோகம் ஆகியவை ஞானமாகிய கடலில் கலக்கின்றன.

கர்மயோகம் ஞானமாகிய ஒளியைப் பெறுவதற்கு மனதைத் தயார் செய்கிறது. அது உள்ளத்தை விரிவடையச் செய்து, ஒற்றுமை அல்லது ஒருமைப்பாட்டை அடைவதற்குத் தடையாக இருப்பவைகளை உடைத்தெறிகிறது. பக்தியும் தியானமும்கூட மனதில் நடக்கும் கர்மாக்களே. ராஜயோகம் இல்லாவிடில் ஞானம் இருக்காது. இப்பொழுது நால்வகை யோகங்களின் தன்மையும் அவைகளுக்கிடையேயுள்ள தொடர்பும் உனக்கு விளங்கி இருக்கும்.

ஒவ்வொரு செயலும் நன்மை தீமை ஆகிய இரண்டும் கலந்ததே. முற்றிலும் நல்லதாகவோ அல்லது முற்றிலும் தீயதாகவோ எந்த செயலும் இவ்வுலகில் இருக்கமுடியாது. இந்த பௌதிக உலகம் பொருள்கள் ஒன்றோடொன்று தொடர்புள்ள வகையில் அமைந்துள்ளன. நீ ஒரு செயலைச் செய்யும்போது அதனால் ஒரு பக்கத்தில் நன்மையும் மற்றொரு பக்கத்தில் தீமையும் விளைகிறது. எனவே அதிக அளவு நன்மையும் மிகக் குறைந்த அளவு தீமையும் உண்டாக்கக் கூடிய செயல்களையே செய்ய முயலவேண்டும். அறச் செயல்களால் நற்பயன்களும், தீய செயல்களால் தீய பயன்களும் விளையும். கர்மயோகத்தின் நுணுக்கத்தை, செயலாற்றுவதன் இரகசியத்தை — நீ அறிந்திருந்தால், செயல்களின் பந்தத்தினின்றும் விடுபட்டிருப்பாய். எவ்விதமான பற்றும் இல்லாமலும், அகந்தையில்லாமலும் செயலாற்றுவதே அதிலுள்ள இரகசியமாகும். செயலில் பற்றற்ற நிலையுடனிருக்கவேண்டுமென்பதே கீதையின் மையமான போதனையாகும்.

எனவேதான் பகவான் அர்ச்சுனனுக்கு வற்புறுத்திக் கூறுகின்றார். ''அர்ச்சுனா! இடைவிடாது செயல்புரிவாயாக! எப்பொழுதும் வேலை செய்ய வேண்டியதுதான் உன் கடமை. ஆனால் பயனை எதிர்பார்க்காதே. பயனை எதிர்பார்க்கும் மனிதனுடைய நிலை மிகவும் வருந்தத் தக்கது. அவன்தான் இந்த உலகத்திலேயே மிகுந்த துன்பத்தை அனுபவிக்கும் மனிதனாகிறான்.''

இந்த உலகத்திலுள்ள தீமைகளை எல்லாம் நீக்கிவிட முடியாது. வாயுப்பிடிப்பு கீல்வாதம் ஆகிய நோய்களில் வலியும் வீக்கமும் ஒரு மூட்டிலிருந்து இன்னொரு மூட்டுக்கு மாறிக்கொண்டே இருக்கும். அம்மாதிரியே நாம் ஓரிடத்திலுள்ள

தீமையை நீக்கினுல், வேருேரிடத்தில் மற்ருெரு தீமை தோன்றும்.

சமூகநல ஊழியர்கள், இளம் விதவைகளின் நிலைக்கு இரங்கி, விதவைகளின் மறுமணத்தை ஆதரிக்கிருர்கள். அதனுல் தாங்கள் நாட்டுக்கு நன்மை செய்வதாக நினைக்கிருர்கள். ஆனுல் வேருெரு தீமை முளைக்கிறது. மற்ற பெண்களின் திருமணம் ஒரு பிரச்சினையாகிறது. அவர்களுக்குத் திருமணம் நடைபெறுவதில்லை. இது மற்ருெரு தீமை. சமூகநல ஊழியர்கள் விபசாரத்தை ஒழிக்க முயலுகிருர்கள். இது மிகவும் போற்றத்தக்க பணிதான். ஆனுல் காமம் என்பது ஆற்றல் மிக்கதாயும், அடக்க முடியாததாயும் இருப்பதால், திருமணம் செய்துகொள்ள முடியாதவர்கள் இல்லறத்திலுள்ள மற்ற பெண்களை இரகசியமாகத் துன்புறுத்தி அவமானப்படுத்துகிருர்கள். எனவே சட்டபூர்வமாகக்கூட இதைத் தடுக்க முடியவில்லை. இரகசியமாகவும் இழிவான முறையிலும் அதிக அளவில் நடைபெறுகிறது.

இந்த உலகம் மிகவும் குறுகிய மனப்பான்மையுடையது. அது நாய் வாலைப் போன்றது. ஒரு நாயின் வாலை நிமிர்க்க முயற்சி செய்யும்போது, கைகளை எடுத்தால், மீண்டும் வளைந்துபோகிறது. உலகத்தின் இயல்பும் அம்மாதிரியே இருக்கின்றது.

எண்ணற்ற அவதாரங்கள், யோகிகள், ஆசான்கள், முனிவர்கள், தீர்க்கதரிசிகள், இங்கு தோன்றி, உபதேசம் செய்திருக்கிருர்கள். அப்படியிருந்தும் இவ்வுலகம் குறுகிய மனப்பான்மையோடு முன்பிருந்தவாறே இருக்கின்றது. ஆகையால் இந்த அறிவற்ற உலகத்தைச் சீர்திருத்தவேண்டுமென்று சிரமப் படாதே. அதை எப்பொழுதும் செய்ய முடியாது. முதலில் உன்னையே சீர்திருத்திக்கொள்.

பிறகு உலகம் முழுவதையும் சீர்திருத்தம் செய்ய லாம். நீ பலமில்லாமலும் அறியாமையுடனும் இருக்கும்போது உலகத்துக்கு உன்னுல் என்ன செய்ய முடியும்? அது ஒரு குருடன் மற்ருெரு குருடனுக்கு வழிகாட்டுவதைப் போன்றதே. இருவரும் சேர்ந்து ஆழமான படுகுழியில் விழவேண்டியதுதான்.

இந்த உலகத்துக்கு நீ செய்யக் கூடிய பெரிய உதவி அதற்கு இறைவனைப்பற்றிய அறிவை ஊட்டுவதுதான். ஆன்மீக உதவிதான் நீ மனித குலத்துக்குச் செய்யக் கூடிய மிகப் பெரிய சேவையாகும். மக்களின் துன்பத்திற்கு மூலகாரணம் அவித்யா அல்லது அறியாமையே ஆகும். இந்த அறியாமையை உன்னுல் நீக்க முடியுமானுல், மனிதன் எப்போதும் மகிழ்ச்சியோடு இருக்க முடியும். அறியாமையைப் போக்க முயலும் ஞானியே உலகத்துக்கு மிகப் பெரிய உதவியைச் செய்பவராவார். ஒரு மனிதனுக்கு உணவளித்து அவன் பசியைப் போக்குவாயானுல், அது உடலுக்குத் தற்காலிகமாகச் செய்யும் உதவியாகும். மூன்று மணி நேரத்துக்கு உடலின் தேவையைப் போக்கும் செயலாகும். மீண்டும் பசி தோன்றுகிறது. அந்த மனிதன் மீண்டும் பழைய மாதிரியே துன்பப் படுகிறுன். மருத்துவமனைகள், சத்திரங்கள், சாவடிகள் ஆகியவற்றைக் கட்டுவதும், உணவும், துணிமணிகளும் இலவசமாக வழங்குவதும் மிகவுயர்ந்த தொண்டுகள் எனச் சொல்ல முடியாது. அவற்ருல் துன்பங்கள் முற்றிலும் நீக்கப்படுவதில்லை. பல்லாயிரக்கணக்கான மருத்துவமனைகளையும், சத்திரங்களையும் கட்டிய பிறகும், உலகத்தில் துன்பங்கள் நிறைந்துதான் காணப்படும். பிரம்ம ஞானத்தை (தெய்வீக ஞானத்தை) அடைந்து, அதை உலகெங்கும் பரவச்செய்து, மக்களிடமுள்ள

அறியாமையைப்போக்கு. அப்பொழுதுதான் எல்லா வகையான துன்பங்களும், தீமைகளும், துயரங்களும், குழப்பங்களும் முற்றிலும் நீங்கும்.

உலகுக்குத் தொண்டு செய்யும் ஒருவன் உண்மையில் தனக்கே தொண்டு செய்து கொள்கிறுன். மற்றவர்களுக்கு உதவும் ஒருவன் தனக்கே உதவி செய்துகொள்கிறுன். மற்ளுெரு விஷயமும் இங்கு கவனிக்க வேண்டும். உலகியல் மனநிலையுள்ள மனிதர்கள் பொதுவாக அகந்தை நிறைந்தவர்கள். அவர்கள் மற்றவர்களுக்கு ஏதாவது உதவி செய்யும்போது, கர்வம் தலைக்கேறி விடுகிறது. இந்த உலகுக்கு எவருடைய உதவியும் தேவை இல்லை. இந்தப் பிரபஞ்சத்தைக்காத்து ரட்சிக்கும் சர்வ வல்லமை படைத்த ஈசுவரன் ஒருவன் இருக்கிறுன். திலகர், நியூடன், வால்மீகி, ஷேக்ஸ்பியர், நெப்போலியன், யுதிஷ்டிரர் போன்ற மக்களை ஆயிரக்கணக்கில் உடனே உற்பத்தி செய்துவிடுவார். அவர் எதை வேண்டுமானுலும் செய்யலாம். நீ ஒருவருக்கு சேவை செய்யும்போது, உன்னை மேன்மையுறச் செய்துகொள்ளவும், திருத்திக்கொள்ளவும், நன்முறையில் அமைத்துக் கொள்ளவும் இத் தொண்டின் மூலம் இறைவன் உனக்கொரு வாய்ப்பை அளித்திருக்கிறுர் என்றே எண்ணிக்கொள். அவ்வாறு சேவை செய்வதற்கு உனக்கு வாய்ப்பை அளிக்கும் அந்த மனிதனிடம் நன்றியுடையவனுயிரு.

பெரியதும் சிறியதுமான செயல்களின் எண்ணங்கள் ஒன்றுபட்டு இயல்புகள் உருவாகின்றன. இவைகள் மனிதனுடைய பண்பை வளர்க்கின்றன. இந்தப் பண்பு அவனுடைய உள்ளத்தை உருவாக்குகின்றது. ஒரு மனிதனுக்கு உறுதியான குணமிருந்தால், அவனுக்கு உறுதியான உள்ளமும் இருக்கும். கர்மம் குணத்தை உண்டாக்குகிறது.

குணம் உள்ளத்தை உருவாக்குகிறது. மிக உறுதியான உள்ளம் படைத்த மனிதர்கள் அதைப் பல பிறவிகளில் தாங்கள் செய்த கர்மத்தின் காரணமாக வளர்த்திருக்கிறார்கள். ஒரே பிறவியில் உள்ள உறுதியைப்பெற முடியாது. பல பிறவிகளில் நற்செயல்களைச் செய்து, அவற்றின் ஆற்றல்கள் ஒன்று சேர்ந்து, பின்னொரு பிறவியில் ஒரு ஆற்றல் மிக்க மனிதனாக, புத்தரைப்போல், இயேசுவைப்போல், சங்கரரைப்போல் ஆகிவிடுகிறான். எச் செயலும் வீணாகப் போவதில்லை. எந்த இழப்பும் இல்லை. பொறுமையான, தளராத முயற்சி தேவை. மக்கள் பலவித நோக்கங்களோடு வேலை செய்கிறார்கள். சமுதாயத்தில் பேரையும் புகழையும் பெறுவதற்காகச் சிலர் வேலை செய்கிறார்கள். சிலர் பொருளுக்காக வேலை செய்கிறார்கள். சிலர் பதவிக்காக வேலை செய்கிறார்கள். வேறு சிலர் வானுலக இன்பம் பெறுவதற்காக வேலை செய்கிறார்கள். தத்தம் பாவங்களைக் கழுவிக்கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் சிலர் கோயில்களைக் கட்டுகிறார்கள். சிலர் மக்கட்பேறு அடைவதற்காக வேள்விகளைச் செய்கிறார்கள். தாங்கள் இறந்த பிறகும் தங்கள் பெயர் நிலைத்திருக்கும் என்பதற்காகக் கிணறுகளை வெட்டுகிறார்கள். தாங்கள் இறந்த பின் விண்ணுலகில் அழகான மலர் வனங்களில் தங்கி இன்பம் பெறலாம் என்ற நம்பிக்கையுடன் அழகான மலர் வனங்களை அமைக்கிறார்கள். மறு பிறவியில் மிக்க செல்வம் படைத்த நிலக்கிழார்களாகப் பிறக்க வேண்டும் என்ற ஆசையுடன் அறம் செய்கிறார்கள்.

ஏவ்விதமான பயனும் கருதாமல் தன்னலமற்ற சேவை செய்கின்றவன் ஆற்றல் மிக்க யோகியாக ஆகிறான். கர்மயோகிக்கு செயலாற்றுவதின் இரகசியம் தெரியும். தேவையில்லாமல் தன் ஆற்றலை சிறிதளவுகூட வீணாகப் போவதற்கு

அனுமதிக்க மாட்டான். தன் ஆற்றலை சேமித்து, மேலான தேவைகளுக்கு அதைப் பயன்படுத்துவான். தன்னடக்கமாகிய கலை அவனுக்கு நன்கு தெரியும். அவன் எண்ணற்ற மக்களுக்கு மிக அதிக அளவில் நன்மைபயக்கும்படி தன் ஆற்றலைப் பயன் படுத்துவான்.

கர்மயோகி உறுதியான உள்ளத்தையும் குண நலத்தையும் வளர்த்துக்கொள்வான். பொறுமை இருந்தால்தான், ஒருவர் அளவு கடந்த நன்மையைப் பெற முடியும். பொதுவாக மக்கள் பொறுமை யற்றவர்கள். அவர்கள் சிறித்தளவு தன்னலமற்ற சேவை செய்தவுடனேயே அதிக ஆற்றலை எதிர் பார்க்கிறார்கள். உண்மையான கர்மயோகி அடக்கத்துடனும் தெய்வீக உணர்வுடனும் மக்களுக்குத் தொண்டு செய்து உலகையே ஆளும் நிலை பெறுகிறான். அவன் மக்களால் போற்றிப் புகழப்படுகிறான். போற்றுதல் அவனிடம் தானாகவே வருகிறது. தன்னலமற்ற சேவையில் மறைமுகமான ஆற்றல் ஒன்று இருக்கின்றது.

## 2. தொண்டு எனும் யோகம்

சேவை அல்லது தொண்டின் நோக்கம் என்ன? ஏழைகளுக்கும் எளியவர்களுக்கும் நீ ஏன் தொண்டு செய்யவேண்டும்? துன்பப்படும் மனித குலத்துக்கு நீ ஏன் சேவை செய்கிறாய்? சமுதாயத்துக்கும் நாட்டுக்கும் நீ ஏன் தொண்டாற்றுகின்றாய்? தொண்டு செய்வதால் உன் உள்ளத்தைத் தூய்மைப் படுத்திக்கொள்கிறாய். உன்னிடமுள்ள அகந்தை, வெறுப்பு, பொறாமை, உயர்வு மனப்பான்மை மற்றும் இவைகளோடொத்த எதிர் மறை இயல்பு கள்மறைந்துவிடுகின்றன. அடக்கம், தூய அன்பு, பரிவு, சகிப்புத்தன்மை, கருணை ஆகியவை

பெருகுகின்றன. தனித்தன்மையாகிய உணர்வு அழிக்கப்படுகிறது. தன்னல உணர்வு முற்றி லும் நீக்கப்படுகிறது. வாழ்க்கையில் பரந்த, தாராள மனப்பான்மை ஏற்படுகின்றது. ஒன்று பட்ட இணைந்த உணர்வைப் பெறுகிறாய். இறுதியில் ஆன்மாவைப் பற்றிய ஞானத்தை அடைகிறாய். இறைவனிடத்தில் எல்லாப் பொருள்களும் அடங்கி யிருப்பதையும், எல்லாப் பொருள்களிடத்திலும் இறைவன் இருப்பதையும் அறிகிறாய். எல்லையிலாப் பேரானந்தம் உனக்குக் கிட்டுகிறது.

சமுதாயம் என்பது என்ன? தனி நபர்கள் ஒன்று சேர்ந்ததுதான் அது. உலகம் என்பது இறைவனின் பல் வகையான தோற்றங்கள் அடங்கியதுதான். உண்மையில் மனித குலத்துக்கும் நாட்டுக்கும் செய்யும் சேவைதான் இறைவனுக்குச் செய்யும் சேவை. சேவைதான் வழிபாடு. ஆனால் ஒருவர் தெய்வீக உணர்வோடு சேவை செய்ய வேண்டும். அப்பொழுதுதான் உள்ளத் தூய்மையும் இறையுணர்வும் விரைவில் ஏற்படும்.

தனித்து வாழும் உணர்வு ஒரு பெரிய விலங்கு போன்றது. இறைவனோடு ஒன்று படுவதாலும், இருமைப் பாடற்ற உணர்வை வளர்த்துக் கொள்வதாலும், தன்னலமற்ற சேவையாலும் இதை போக்கிவிடலாம். இந்த தனித்து இயங்கும் பொய்யுணர்வு பிரபஞ்ச அறியாமையாகிய மாயையால் ஏற்படுகின்றது.

விருப்பு வெறுப்பற்றதும், தன்னமைமற்ற முறையிலும் தொண்டு செய்வதற்கான மனப்பான் மையை வளர்த்துக்கொள். எல்லோரிடமும் கருணை யும் அன்பையும் காட்டு. அனைவருக்கும் சேவை செய். அனைவரிடத்திலும் சகிப்புத்தன்மையோடும் பெருந்தன்மையுடனும் நடந்துகொள். மக்களிடம்

குடிகொண்டுள்ள இறைவனுக்குத் தொண்டு செய். இதுதான் இலட்சியத்தை அடைவதற்குரிய வழி.

ஒன்பது குழந்தைகளை இழந்த தாய் எப்படி மீதியிருக்கும் ஒரு குழந்தையை அதிக அன்புடன் நேசிப்பாளோ, அம்மாதிரியே உயிர்கள் அனைத்திடத்திலும் எல்லையற்ற அன்பைச் செலுத்துவதற்குப் பழகவேண்டும். ஒரு சாதகனுக்குரிய முதன்மையானதும் இன்றியமையாததுமான தகுதி இதுதான். இவ்வாறு அளவுகடந்த அன்பு செலுத்தும் ஒரு மனிதன் அவன் இறந்தபிறகு மகத்தான வர்ணிக்கமுடியாத தெய்வீகச் சுடரொளியுடன் விளங்குவான்.

எப்பொழுதும் தன் இன்பத்தையும் வசதிகளையும் புறக்கணித்து, மற்றவர்களுக்கு உதவ முயற்சி செய்யும் ஒருவன் உண்மையில் ஆன்மீக நெறியில் முன்னேற்றமடைந்துள்ள மாணவனாவான். ஆன்மீகப் பேரின்ப உலகத்தின் பூட்டைத் திறக்கும் ஆற்றல் மிக்க திறவுகோல் அவனிடம் இருக்கின்றது.

நெருக்கடியான நேரங்களில் விரைவில் சிந்தித்து சிறிதுகூடத் தவறில்லாமலும் மனதை ஒருமுகப் படுத்தியும் செயல்படக்கூடிய ஆற்றல் உனக்கிருக்கவேண்டும். ஆத்திரத்துடனும் அலட்சியத்துடனும் செயல்படாமல் கவனமாக இருக்கவேண்டும். அமைதியுடனும் பொறுமையுடனும் இருக்கவேண்டும்.

இக்காலத்திலுள்ள சாதகர்களில் பெரும்பாலோர் எழுதுதல், பூஜைக்கு மலர் சேகரித்தல், நூலகத்தில் புத்தகங்களை அடுக்குதல், தட்டச்சு பிரதி தயாரித்தல், ஏதாவது மேற்பார்வை அல்லது நிர்வாகம் செய்தல்போன்ற எளிய வேலைகளைச் செய்யவே விரும்புகின்றனர். நீர் இறைத்தல், விறகு வெட்டுதல், பாத்திரங்களைக் கழுவுதல், துணி

துவைத்தல், தரை மெழுகுதல், சமைத்தல், நோயாளிகளின் கழிவுப் பாத்திரங்களைக் கழுவி அவர்களுக்குச் சேவை செய்தல் ஆகிய வேலைகளை அவர்கள் விரும்புவதில்லை. இந்த வேலைகளை அவர்கள் மிகவும் இழிந்ததாகக் கருதுகிறார்கள். இந்த மாதிரி சாதகர்கள் கர்மயோகம், வேதாந்தம் ஆகியவற்றின் உண்மையான பொருளை உணர்ந்து கொள்ள முயற்சி செய்வதில்லை. அவர்கள் இன்னும் உயர்ந்த நிலையிலேயே இருக்கிறார்கள். அவர்களுக்குக் கடுமையான கட்டுப்பாடும் பயிற்சியும் தேவை. இந்த உடல் வளையாத சாதகர்களை ஓராண்டு காலம் நோயாளிகளின் மலம் நிறைந்த வாளிகளைச் சுமந்து செல்லும் வேலைக்கும், மற்றொரு ஆண்டு காலம் பாத்திரம் கழுவவும், மூன்றாம் ஆண்டில் அறைகளைப் பெருக்கவும், நோயாளிகளின் துணிகளைத் துவைக்கவும் செய்கிறேன். அப்போதுதான் அவர்கள் தியானத்தையும் ஆன்மீகப் பயிற்சிகளையும் தொடங்குவதற்குத் தயாராக இருப்பார்கள்.

ஒரு ஆசிரமம் நல்ல முறையில் நடத்தப்படாவிட்டால் அதன் சமையல் அறை ஒரு போர்க்களமாக இருக்கும். சமையல் அறையில் எல்லாவிதமான மயக்கமும் இருக்கின்றது. சாதகர்கள் இங்குதான் சண்டை போடுகிறார்கள். ''எனக்கு இன்று நெய்யோ, காய்கறிகளோ உணவில் கொடுக்கவில்லை,'' என்று ஒரு சாதகன் சொல்கிறான். மற்றொருவன் ''பருப்புக் குழம்பு இன்று ஒரே தண்ணீராக இருந்தது. விசுவரஞ்சன் குழம்பில் கங்கா ஜலத்தை நிறைய ஊற்றிவிட்டான், அவனுக்கு என்னைக் கண்டால் பிடிப்பதில்லை,'' என்று சொல்கிறான். இந்த இளைஞர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கு நன்றாகத் தேர்ச்சி பெற்ற கர்மயோகி ஒருவர் இருப்பாரானால், உண்மையான

அத்வைத வேதாந்தம் ஆசிரமத்திலுள்ள சமையலறையில் தொடங்கி இமாலயத்திலுள்ள குகையில் நிறைவு பெறும். சகிப்புத்தன்மை, அடக்கம், பொறுமை, கருணை, அன்பு, பரிவு, சரிக்கட்டும் தன்மை, தொண்டு மனப்பான்மை ஆகிய குணங்களை வளர்த்துக்கொள்வதற்குரிய பள்ளி அல்லது பயிற்சிக்களம் சமையல் அறையே ஆகும். உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவும், ஒருமைப் பாட்டுணர்வை பெறவும் மிகச் சிறந்த இடம் அதுதான். சமையல் செய்வதற்கும், பரிமாறுவதற்கும் ஒவ்வொரு சாதகனுக்கும் தெரிந்திருக்க வேண்டும்.

உன்னுடைய குருவுடன் இருக்கும்போது உனக்குக் கொடுக்கப்படும் எந்த வேலையையும் விருப்பமுடன் செய்வதற்குத் தயாராக இருக்க வேண்டும். உனக்குப் பிடிக்காத வேலையைச் செய்வதில் ஓர் ஊக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால், பின்னுல் எந்த விதமான வேலையிலும் உனக்கு விருப்பம் ஏற்படும். அவ்வாறு செய்வதால் உன் மனவுறுதி அதிகமாகும் என்பதில் ஐயமில்லை.

மனதில் சமநிலையோடு இருப்பது கட்டுப்பாடுள்ள மனிதனுக்கு உண்மையானதும் நிலையானதுமான இன்பத்தைக் கொடுக்கும். அது சந்தையில் வாங்கக்கூடிய ஒரு பொருளல்ல. உண்மையில் நீண்ட காலத்திற்கு தன்னலமற்ற சேவையை தெய்வீக உணர்வு, சமநோக்கு, புலன் உறுப்புக்களின் கட்டுப்பாடு, தன்னடக்கம் ஆகியவற்றோடு தொண்டு செய்யும்போது மற்றவர்களை அனுசரித்துப் போதல், பரந்த சகிப்புத்தன்மை, பொறுமை, அறிவு, அமைதி, மனநிலையைக் கட்டுப் படுத்தல் ஆகியவைகளை உண்டாக்கிக் கொண்டும், கவலை, வருத்தம், அச்சம், மனத்தளர்ச்சி ஆகியவற்றைப் போக்கிக்கொண்டும், ஆன்மீகப்

பயிற்சிகளை மேற்கொண்டும் ஒருவர் பெறக் கூடிய அரிய வரப்பிரசாதம் அல்லது பெரும் பேறு ஆகும். அமைதியும் சமநிலையோடு கூடிய மன நிலைதான் ஒரு மனிதனுக்கு உண்மையான நீடித்த இன்பத்தைத் தரும். அமைதி, சமநிலை ஆகியவற்றோடு கூடிய மனநிலையுள்ள மகாத்மா ஒருவர் பெறும் பேரின்பத்துக்கு ஈடாக மூவுலகங்களிலுமுள்ள செல்வத்தைக் கூடச் சொல்ல முடியாது. எனவே சற்று சிந்தித்துப் பார்த்து நியாயமாகச் சொல்லுங்கள். எங்கே பேரின்பம் இருக்கிறது? யார் பெரிய மனிதர்? அரண்மனையில் கட்டுக் கடங்காத மனத்துடன் செல்வச் செருக்குடன் வாழும் அரசனா அல்லது வியத்தகு மன அமைதியும் சமநிலையோடு கூடிய மனமும் பெற்று கங்கைக் கரையில் புல்லால் வேய்ந்த குடிசையில் வாழும் ஏழையான ஞானியா ?

நீ ஒருவருக்கு உண்மையான தொண்டு செய்ய விரும்பினால், அவரை எல்லா விதங்களிலும் திருப்தி செய்ய முயல வேண்டும். உனக்கு மட்டும் விருப்பமான செயல்களைச் செய்யக் கூடாது. அவருக்கு மிக அதிகமான மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய செயல்களைச் செய்யவேண்டும். இதுதான் உண்மையான தொண்டு. ஆனால் பொதுவாக மற்றவர்களுக்குத் தொண்டு செய்யும் பாவனையில் தங்கள் விருப்பத்தையே நிறைவேற்றிக்கொள்கிறார்கள். இது மிகவும் மோசமான தவறு. ஒரு கத்தியின் கூரான முனையைத் தான் பிடித்துக்கொண்டு அதன் கைப்பிடியை மற்றவரிடம் எவன் நீட்டுகிறானோ அவனே உண்மையான தொண்டு செய்பவன். ஒரு உண்மையான தொண்டன் துன்பத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்கிறான். அவன் பொறுப்புள்ளதும், மிக்க கடுமையானதும், சிரமம் நிறைந்ததும், சுவையில்லாததுமான வேலைகளைத்

தன் தோள்களின் மீது சுமந்துகொண்டு, மற்றவர் களை மகிழ்விப்பதற்காகத் தன்னையே அழித்துக் கொள்கிறான். மற்றவர்களுக்குத் தொண்டு செய்ய வும், மகிழ்விக்கவும் தான் விருப்பத்துடன் துன்பத்தையும் துயரத்தையும் ஏற்றுக்கொள்கிறான்.

கும்பகத்தின் மூலம் இரண்டு மணி நேரம் மூச்சை அடக்கியிருப்பதும், இருபத்து நான்கு மணி நேரம் ஜெபமாலையை உருட்டிக்கொண்டிருப்பதும், பூமிக்கடியிலுள்ள அறையில் நாற்பது நாட்கள் நாவையடக்கியும், உணவில்லாமலும் கேசரி முத்திரையைப் பயின்றும் சமாதியிலிருப்பதும், பொசுக்கும் கோடை வெயிலில் ஒரே காலில் நிற்பதும், நடுப்பகலில் கதிரவனைக் குறித்து திரிதிகைப் பயில்வதும், அமைதியான மக்கள் சஞ்சாரமில்லாத நடுக்காட்டில் ஓம்! ஓம்! ஓம்! என்று உச்சரித்துக்கொண்டிருப்பதும், பக்திப் பாடல்களைப் பாடும்போது கடல் மடைதிறந்தாற் போலக் கண்ணீர் வடிப்பதும் — ஆகிய இவையெல் லாம்-எல்லா உயிர்களிடத்திலும் குடிகொண்டுள்ள இறைவன்பால் ஆர்வத்தோடு அன்பு செலுத்தா விட்டாலும், மக்களிடம் வாசம் செய்யும் இறை வனுக்கு ஆர்வத்தோடு தொண்டு செய்யா விட்டாலும் எந்த விதத்திலும் பயனுள்ளவை யாகா. இக்காலத்திலுள்ள சாதகர்கள் இவ்விரண்டு இன்றியமையாத தன்மைகளுமில்லாமல் வருந்தத் தக்க நிலையில் இருக்கிறார்கள். அதன் காரணமாகத் தான் அவர்கள் தனிமையில் மேற்கொள்ளும் தியானத்திலும் எவ்விதமான முன்னேற்றமும் அடையாமலிருக்கிறார்கள். அந்தக்கரணம் என்னும் அடிப்படை நிலையை அவர்கள் முதலிலிருந்தே நீண்டகால அன்பு, தொண்டு ஆகியவற்றின் அடிப்படையில் தயார் செய்ய வில்லை. இம்மாதிரியான பக்தர்கள் பலரை நான்

என்னுடைய அனுபவத்திலேயே பார்த்திருக்கிறேன். கழுத்திலும் கையிலும் டஜன் கணக்கில் மணிமாலைகளை அணிந்துகொண்டு ''ஹரே ராமா, ஹரே கிருஷ்ணா'' என்று இரவு பகல் எந்நேரமும் உச்சரித்துக் கொண்டே இருப்பார்கள். சாகுந் தருவாயிலிருக்கும் நோயாளியைக்கூட அவர்கள் அணுகி ஒரு துளி தண்ணீரோ, பாலோ அவன் வாயில் ஊற்றமாட்டார்கள். ''உனக்கு என்ன வேண்டும்? நான் உனக்கு ஏதாவது உதவி செய்யட்டுமா?'' என்று கூடக் கேட்க மாட்டார்கள். எதையோ தெரிந்துகொள்ளும் ஆவலுடன் சிறிது தூரத்திலிருந்தே அவனைப் பார்த்துக்கொண்டே இருப்பார்கள். இவர்களை இறைவனின் உண்மையான பக்தர்கள் என்று சொல்ல முடியுமா? அவர்களுடைய பக்தியாலும் தியானத்தாலும் ஒரு துளியாவது உண்மையான பயன் கிட்டுமா? இறைவனின் தோற்றம் அவர்களுக்கு எதிரில் இறக்கும் தருவாயில் இருக்கும் நோயாளி உருவத்தில் காணப்படுகின்றது. அவனுடைய உயிர் ஊசலாடிக் கொண்டிருக்கும் அந்த நெருக்கடியான நிலையில் கூட அவனருகில் சென்று உதவி செய்யவோ அல்லது அன்போடு உற்சாக மூட்டும் ஒரு சில வார்த்தைகளைப் பேசவோ அவர்கள் எண்ணவில்லை. கல்லாலான இதயத்தைப் படைத்த அவர்கள் பரம கருணாமூர்த்தியான இறைவனுடைய தோற்றத்தைக் காணலாமென்று எவ்வாறு எதிர்பார்க்க முடியும்? எல்லா உயிர்களிடத்திலும் வாசம் செய்யும் இறைவனைக் காண முடியாதவர்களும், இந்த உயிர்களின் வடிவத்திலுள்ள இறைவனுக்குத் தொண்டு செய்ய ஆர்வமில்லாதவர்களுமான இவர்கள் எவ்வாறு இறையுணர்வு பெறமுடியும்?

ஞானமும் பக்தியுமுள்ள ஒருவனால்தான் நாட்டுக்கும் மக்களுக்கும் உண்மையான பயனுள்ள

தொண்டு செய்ய முடியும். ஞானமும் பக்தியும் கர்மயோகத்தின் அடிப்படையாக அமைய வேண்டும். ஆரம்பத்தில் ஞானம் கர்மயோகத்துடன் இணைந்திருப்பதோ அல்லது பக்தியோகமும் கர்மயோகமும் இணைந்திருப்பதோ பயனுள்ளதாகும். ஞான — கர்மயோகி தன்னுடைய ஆன்மாவுக்குத் தொண்டு செய்வதாக நினைத்தும் உணர்ந்தும் அத்வைத உணர்வைப் பெறுகிறான். பக்தி — கர்மயோகி தன்னுடைய இறைவனுக்குத் தொண்டு செய்வதாக நினைத்தும் உணர்ந்தும் இறையுணர்வு பெற்று, இறைவனையே காண்கிறான். பக்தியும் ஞானமும் இல்லாமல் பரிவினால் மட்டும் செய்யக்கூடிய அறச்செயல் சமுதாயத்தைச் சீர்திருத்தும் செயலாக மட்டுமே அமையும். அது யோகமோ வழிபாடோ ஆகாது. அது கீழ்நிலையில் உள்ள ஒன்றாகும். அது மனிதனை உயர்த்த உதவாது. அதில் முன்னேற்றம் என்று ஏதாவது சொல்ல முடியுமானால், அதுவும் மிகவும் மெதுவாகவும் சுவையற்ற வகையிலுமே இருக்கும். மனப்பாங்கு அல்லது தெய்வீக உணர்வினால்தான் அதிக நன்மை விளையும் என்பதை எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

ஆரம்பத்திலிருந்தே தன் வேலைகள் எல்லாவற்றையும் இறைவனுக்குச் செய்யும் வழிபாடாகவே கருதிக்கொண்டு, எப்பொழுதும் தன் உடல், மனம், ஆன்மா. செயல்கள் ஆகிய அனைத்தையும் இறைவனுடைய திருவடிகளில் அர்ப்பணித்துவிட்டு, இறைவனையே இடைவிடாது தியானித்துக்கொண்டு இறைவனிடத்திலேயே ஒன்றியிருக்கும் கர்மயோகி ஒருவன் தன்னை முற்றிலும் அர்ப்பணித்துக்கொண்டு (பரிபூரண சரணாகதியில்) இறையுணர்வில் தன்னைப்பற்றியே மறந்துவிடுகிறான். இறைவனைப்பற்றிய எண்ணத்திலேயே

ஆழ்ந்துவிடுகிறான். அவனுடைய உள்ளம் இறைவனுடைய உள்ளத்தோடு ஒன்றுபடுகிறது. இதுவே அவனுடைய முடிவான முதிர்ந்த நிலை. இந்த உலகில் நடக்கும் ஒவ்வொரு செயலும் இறைவனுடைய லீலை (தெய்வீக விளையாட்டு) என்று அவன் உணர்கிறான். தான் இறைவனோடு ஒன்றுபட்டு இருப்பதையும், இறைவனுடைய லீலையில் தானும் ஒரு கூட்டாளி என்பதையும் தெளிவாக உணர்கிறான். இறைவனுக்காகவே வாழ்கிறான்; அவரைப்பற்றியே சிந்திக்கிறான். அவனுடைய எண்ணங்களும் செயல்களும் இப்பொழுது இறைவனைப்பற்றியதாகவே இருக்கின்றன. அவன் கண்களை மறைத்திருந்த திரை அகன்று விட்டது. தனிப்பட்ட உணர்வு முழுவதும் அழிந்து விட்டது. இப்பொழுது அவன் இறைவனுடைய ஆன்மீகச் செல்வத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிறான்.

மருத்துவசாலையில் பணிபுரியும் மருத்துவர் ஒருவர் அங்குள்ள நோயாளிகள் அனைவரையும் இறைவனுடைய தோற்றங்களாகவே கருத வேண்டும். ''மனித உடல் நடமாடும் கோவில்; மருத்துவசாலை ஒரு பெரிய கோவில் அல்லது பிருந்தாவனம் அல்லது அயோத்தி,'' என்றே எண்ண வேண்டும். ''என்னுடைய செயல்கள் அனைத்தும் இறைவனுடைய விருப்பத்தை நிறைவேற்றத்தான்; என்னுடைய மேல் அலுவலர்களின் மனநிறைவுக்காக அல்ல'' என்று அவன் எண்ணவேண்டும். ''தனக்குள்ளே இருந்து ஆள்பவர் இறைவன்; தன்னுடைய உறுப்புக்களை இறைவன் பின்னேயிருந்துகொண்டு இயக்குகிறார்; அவர்தான் சூத்திரதாரி (தன்னை ஆட்டுவிக்கிறார்),'' என்று அவன் கருதவேண்டும். இறைவன் திட்டமிட்டுள்ள இந்த மாபெரும் பணியில் அவருடைய

திருவுள்ளப்படியே தான் செயல்படுவதாகவும் அவன் உணரவேண்டும். நற்செயலோ அல்லது தீய செயலோ எதுவாயினும் அதை இறைவனுடைய திருவடிகளில் சமர்ப்பித்து புனிதப்படுத்த வேண்டும். இதுதான் கர்மபலனை அழித்து, உள்ளத் தூய்மையையும், ஆன்ம ஞானத்தையும், இறுதி விடுதலை அல்லது மோட்சத்தையும் அளிக்கவல்ல ஞானக்கினி (ஞானத்தீ) அல்லது பக்திக்கனல் ஆகும். ''இந்த சிறந்த செயல்களை நான்தான் செய்தேன். வானுலகத்தில் எனக்கு ஒரு உயர்ந்த பதவி கிடைக்கும். அடுத்த பிறவியில் நான் ஒரு செல்வந்தனாகப் பிறப்பேன்,'' என்று கனவு கூடக்காணக்கூடாது. இந்த மாதிரி இடைவிடாது பயில்வதால், தான் செய்யும் வேலை அல்லது கர்மத்தின் மீது பற்றற்ற நிலை அவனுடைய மனதில் படிப்படியாக உண்டாகும்.

ஒரு பெண் தன் வீட்டு வேலைகளை செய்யும் போதுகூட இதே மனநிலையில் இருக்க வேண்டும். இம்மாதிரி எல்லா வேலைகளையும் ஆன்மீக மயமாக ஆக்கலாம். அப்போது செயல்கள் அனைத்தும் இறை வழிபாடாகும். இம்மாதிரி சரியான மனப் பாங்கோடு வேலை செய்தால் வாழ்க்கையில் எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும் இறைவனுடைய தோற்றம் அங்கிருப்பதை உணரலாம்.

பிருந்தாவனத்தில் குழலூதி மகிழ்வித்தவனும் இராதையின் காதலனும், தேவகியின் பேரானந்த மும் ஆகிய இறைவன் நமக்கு சரியான நம்பிக்கை யும் தூய அன்பும், நேர்மையான மனநிலையும், உலகுக்கு தன்னலமற்ற சேவை செய்வதற்கேற்றபடி உள்ளத்தில் ஆன்மீக உறுதிப்பாடும் அளித்து நாம் எல்லா உயிர்களிலும் வாசம் செய்யும் இறை வனுக்குத் தொண்டு செய்தும், இறைவனையே

எப்பொழுதும் தியானித்துக் கொண்டும், நம் செயல்கள், உடல், மனம், ஆன்மா ஆகியவற்றை இறைவன் திருவடிகளில் சமர்ப்பித்துக்கொண்டும் நிஷ்காம்ய கர்மத்தில் ஈடுபடுமாறு இறைவன் நமக்கு அருள்வாராக.

ஹரி, ஹரன் ஆகிய இருவரின் ஆசிகள் நம் எல்லோருக்கும் எப்போதும் கிட்டுவதாக !

## 3. நிஷ்காம்ய கர்மயோகம்

நேரான வழியில் சிந்தி. உன்னுடைய பகுத்தறிவையும் பொது அறிவையும் பயன்படுத்து. மறைநூல்களில் கூறப்பட்டுள்ள கட்டளைகளைப் பின்பற்று. உனக்கு ஐயமேற்படும் போதெல்லாம் மனுவின் விதிகளையும் யாக்ஞவல்கியருடைய ஸ்மிருதிகளையும் பார். நீ சரியாக நடந்து கொள்கிறாயா அல்லது தவறாக நடந்துகொள்கிறாயா என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ''மறைநூல்கள் கணக்கற்றவை. அவை பெரிய கடலைப் போன்று இருக்கின்றன. அவைகளில் அடங்கியுள்ள உண்மைகள் எனக்கு விளங்கவில்லை. அவற்றின் பொருளை அறிந்துகொள்ள முடியவில்லை. அவைகள் முன்னுக்குப்பின் முரணாக இருப்பதால், எனக்குக் குழப்பமும் திகைப்பும் ஏற்படுகின்றது,'' என்று நீ நினைத்தால் ஒரு குருவின் அறிவுரைகளைச் சரியாகப் பின்பற்று. அவரிடம் நீ நம்பிக்கை வை. மூன்றாவது வழி இறைவனுக்குப் பயந்து நடந்து கொள்வதாகும். உன்னுடைய மனசாட்சியைக் கேள். உனக்குள் இருக்கும் அந்த நேர்மையான குரல் உனக்கு வழிகாட்டும். அதைக் கேட்டவுடன் ஒரு கணமும் தாமதிக்காதே. உடனே வேறு எவரையும் கேட்காமல் அக்கரையுடன் செயல்படத் தொடங்கு. விடியற்காலை 4 மணிக்கு அந்த உட்குரலைக் கேட்கும் பயிற்சியில் ஈடுபடு. அச்சமும்,

வெட்கமும், ஐயம், மனசாட்சியின் உறுத்தலும், மனத்தில் அமைதியின்மையும் இருக்குமானால், நீ தவறான செயலைச் செய்கிறாய் என்று உணர்ந்து கொள். மனமகிழ்ச்சியும், அளவிலா ஆனந்தமும், திருப்தியும் இருக்குமானால் சரியான செயலைச் செய்கிறாய் என்பதை அறிந்துகொள்.

நிஷ்காம்ய கர்ம யோகத்தைப் பயிலும்போது உன் முயற்சிகள் எதுவும் வீணாவதில்லை. இதில் சிறிதளவு ஞானமும் அல்லது சிறிதளவு பயிற்சியும் கூட உன்னைப் பிறப்பு இறப்பு என்னும் அச்சத்தினின்றும் அதனுடைய விளைவுகளிலிருந்தும் காப்பாற்றும். நீ கர்மயோக நெறியின் பயனாகிய ஞானத்தைப் பெறுவாய் என்பதில் எவ்விதமான சந்தேகமும் இல்லை. இதில் எவ்விதமான உறுதியற்ற நிலையும் இல்லை. பொருள், ஆற்றல் ஆகியவை அழியத்தக்கவை அல்ல. சரியான மன நிலையோடு சிறிதளவு பயிற்சிகூட உன் மனத்தைத் தூய்மையாக்கும். அறச் செயல்களின் உருவங்கள் உள் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிடுகின்றன. அவைகள் அழியாமல் நிரந்தரமாக இருக்கும். அவைகள்தான் உனக்கு ஒப்பற்ற உண்மையான சொத்துக்களாகும். அவைகள் நீ தவறான செயல்கள் செய்யும்போது உன்னைத்தடுக்கும். தன்னலமற்ற செயல்களைச் செய்யுமாறு உன்னைத்தூண்டும். உன்னுடைய இலட்சியத்தை நோக்கி உன்னை நடத்திச் செல்லும்.

தன்னலமற்ற பணிகள் ஞானமாகிய விதையை ஏற்றுக்கொள்வதற்கேற்ற முறையில் அந்தக்கரணமாகிய விளை நிலத்தைப் பண்படுத்தும். கர்மயோக நெறி முடிவில் எல்லையற்ற ஆன்மீகப் பேரானந்தத்தை அடைவதற்காக உன்னை அழைத்துச் செல்லும்.

விருப்பு வெறுப்பற்று, தன்னலங்கருதாது பணியாற்று. உன் நோக்கங்களை எப்பொழுதும் ஆராய்ந்து பார். உன் நோக்கம் தூய்மையாக இருக்கவேண்டும். செயல்களின் பயன்கள் நோக்கத்திற்குத் தக்கவாறு மாறுபடும். உதாரணமாக இந்தக் கதையைப் பாருங்கள். கங்கை நதியில் அனுமான் கட்டத்தில் இரண்டு பெண்கள் நீரில் மூழ்கும் தருவாயில் தத்தளித்துக்கொண்டிருந்தார்கள். இரண்டு இளைஞர்கள் உடனே கங்கை நதியில் குதித்து அவர்களைக் காப்பாற்றினார்கள். அவர்களுள் ஒருவன் அந்தப் பெண்களுள் ஒருத்தியை மணம் செய்துகொள்ளுமாறு கேட்டான். மற்றவனோ "நான் என் கடமையைச் செய்தேன். தொண்டு செய்து முன்னேற்றம் பெறும் வாய்ப்பை இறைவன் கொடுத்தார்," என்றான். அவனுக்கு உள்ளத்தூய்மை இருந்தது. இருவரும் ஒரே செயலைத்தான் செய்தார்கள். ஆனால் நோக்கங்கள் வெவ்வேறாக இருந்தன. அதனால் பயன்களும் வெவ்வேறாகத்தான் இருக்கும். உன்னுடைய செயல்களின் பலன்களைப்பற்றிக் கவலைப்படாதே. அதனால் சோம்பலுக்கோ, செயலற்ற நிலைக்கோ இடம் கொடுக்காமலிரு. மக்களுக்கும் நாட்டுக்கும் சேவை செய்வதற்காக உன் ஆற்றலைச் செலவிடு. தன்னலமற்ற தொண்டில் முழுமனதோடும் ஆற்றலோடும் மூழ்கிவிடு.

இறைவனுடைய திருவடிகளில் உன் மனதைச் செலுத்து. கைகள் வேலை செய்யட்டும். வேலை செய்துகொண்டிருக்கும் சமயத்திலும், உன்னுடன் பேசிக்கொண்டே தட்டச்சு பணியாளரும், ஆர்மோனியம் வாசிப்பவரும் தத்தம் வேலையைக் கவனிப்பதுபோல நீயும் வேலை செய். பேசிக் கொண்டே நூலைப் பின்னும் பெண்ணைப்போல் நீ உன் வேலையில் ஈடுபடு. உன் கைகள் வேலை செய்து

கொண்டே இருக்கும் போது, உன் மனம் இறைவனுடைய திருவடிகளோடு இணைந்திருக்கட்டும். தலையில் நீர்க் குடத்தைச் சுமந்து கொண்டு செல்லும் ஒரு பெண் தன் தோழிகளோடு சிரித்துக் கொண்டும் பேசிக்கொண்டும் நடந்துகொண்டே இருந்தாலும் அவளுடைய மனம் நீர்க் குடத்தின் மேல் தான் இருக்கும். படிப்படியான பயிற்சியின் காரணமாக நீ ஒரே சமயத்தில் இரண்டு வேலைகளைச் செய்யலாம். உடலால் செய்யும் வேலை இயந்திரம் போல், தன்னிச்சையாக, தானாகவே நடைபெறும். மனதின் ஒரு பகுதி வேலையில் ஈடுபட்டிருக்கும். மற்ற பகுதி இறைவனைப் பற்றிய தியானத்திலும் ஜெபத்திலும் ஈடுபட்டிருக்கும். வேலை செய்துகொண்டிருக்கும் போதும் இறைவன் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டிரு. அஷ்டாவதானி என்பவர் ஒரே சமயத்தில் எட்டு வேலைகளைச் செய்வார். சீட்டு, சதுரங்கம் விளையாடிக்கொண்டும், ஒருவருக்கு எழுதுவதற்கு விஷயங்களைச் சொல்லிக்கொண்டும், மற்ருெருவரிடம் பேசிக்கொண்டும் இம்மாதிரி எட்டு வகையான வேலைகளைச் செய்வார்கள். இது மனதிற்குப் பயிற்சி அளிப்பதால் கைகூடும். இம்மாதிரியே மனதிற்குப் பயிற்சி அளித்துக் கைகளால் வேலை செய்து கொண்டு மனதால் இறைவனைப் பற்றிச் சிந்திக்கும்படி செய்யலாம். இது கர்ம யோகம், பக்தியோகம் ஆகிய இரண்டும் இணைந்தது.

''ஆகையால் எப்பொழுதும் என்னைப்பற்றியே நினை; என்னிடத்தில் உன் மனதையும் அறிவையும் வை: அப்பொழுது சந்தேகமின்றி நீ என்னை வந்தடைவாய்,'' என்று பகவான் கண்ணன் கீதையில் சொல்கிருர்.

பசு தன்னுடைய கன்றை விட்டுப்பிரிந்து சென்று மேய்ச்சல் தரையில் மேய்ந்துகொண்டு

இருக்கின்றது. ஆனால் அதன் மனம் எப்பொழுதும் தன் கன்றைப்பற்றியே நினைத்துக்கொண்டிருக்கிறது. அவ்வாறே நீ ஜெபம் செய்யும்போது உன் மனத்தை இறைவனிடம் செலுத்தி, கைகளுக்கு வேலை கொடு. அதுவும் இறைவழிபாடே ஆகும். பற்றுக்கள் எல்லாவற்றையும் துறந்துவிடு. வெற்றி அல்லது தோல்வி, லாபம் அல்லது நஷ்டம், இன்பம் அல்லது துன்பம் ஆகியவைகளில் சமநிலையோடு இரு. உன் மனதிற்குக் கவனமாகப் பயிற்சி கொடு. பேரின்ப உலகின் வாயிலைத் திறக்க உதவும் மாயத் திறவுகோல் இது தான். கர்ம யோகத்தின் இரகசியம் இதுதான். யோகத்தில் வெற்றி பெறுவதற்குரிய இரகசியமும் இதுவே.

இன்னொரு உதாரணத்தைக் கவனியுங்கள். ஒரு செவிலித்தாய் தற்காலிகமாகத் தன் எஜமானியின் குழந்தையைக் கொஞ்சி சீராட்டிக் கொண்டிருந்தாலும் அவள் மனம் எப்போதும் தன்னுடைய சொந்தக் குழந்தையைப்பற்றியே எண்ணிக்கொண்டிருக்கும். ஒரு காதலியின் மனம் அவள் வீட்டு வேலையைச் செய்து கொண்டிருக்கும் போதுகூட அவளுடைய காதலனைப்பற்றியே எண்ணிக்கொண்டிருக்கும். மனதை இறைவன் திருவடிகளில் செலுத்தி, கைகளை உலகியல் வேலைகளைச் செய்வதற்குப் பயன்படுத்து. இந்த வழியைப் பின்பற்றினால் இவ்வுலகிலிருக்கும்போதே இறையுணர்வு பெறலாம். அப்போது இமயமலையிலுள்ள குகைகளையும் காடுகளையும் நாடிச் செல்ல வேண்டியதில்லை. அதனால்தான் கிருஷ்ண பகவான் பகவத் கீதையில், ''கர்மத்தைத் துறப்பதும், கர்ம யோகமும் மிகவுயர்ந்த பேரின்பத்துக்கு அழைத்துச் செல்லும்; இவை இரண்டில் கர்மயோகம், கர்மத்தைத் துறப்பதைவிட உண்மையில் மேலானது.''

செயல்களின் பயன்களில் பற்றுவைப்பாயானல் பிறப்பு இறப்பு ஆகிய சுழலில் சிக்கிக் கொள்வாய். அமரத்வம் அல்லது இறுதி விடுதலையை உடனே அடையலாமென்று எதிர்பார்க்க முடியாது.

உன் செயல்களின் பயன்களை எதிர்பார்க்காமலோ அல்லது செயல்களுக்குப் பரிசுகளை வேண்டாமலோ செயல் புரியும்படி உன் மனம் அமைக்கப்படவில்லை. உன் நண்பனைப் பார்த்துச் சிரிக்கும்போது அவனும் பதிலுக்குச் சிரிக்கவேண்டுமென்று நீ எதிர்பார்க்கிருய். யாருக்காவது ஒரு கோப்பை தண்ணீர் கொடுத்தால் அதற்குப் பதிலாக அவனிடமிருந்து எதையாவது எதிர்பார்க்கிருய். தெருவில் போய்க்கொண்டிருக்கும் உன் நண்பனுக்கு வணக்கம் செலுத்திஞல், அவன் உனக்குத் திருப்பி வணக்கம் செலுத்தவேண்டுமென்று எதிர்பார்க்கிருய். இதுதான் உலகியல் மனப்பான்மையுள்ள மனிதர்களின் பிறவிக் குணமாகும். விருப்பு வெறுப்பற்று செயல்படுமாறு உன் மனதிற்குப் பயிற்சி அளிக்க வேண்டும். உன் மனதைக் கவனத்துடனும், பொறுமையுடனும் விடா முயற்சியுடனும் பழக்க வேண்டும். உலகியல் மனப்பான்மையுள்ள மனிதர்களின் மனத்தில் தூய்மையற்ற எண்ணங்கள் நிறைந்திருப்பதால், அவர்களால் நிஷ்காம்ய கர்மம் என்பதன் பொருளை உணர முடியாது. சிறிது காலம் தொண்டு செய். அதன் பிறகு நிஷ்காம்ய கர்மத்தின் தன்மையை நன்ருக அறிந்து கொள்வாய்.

ஆரம்பத்தில் உன் செயல்கள் அனைத்தும் தன்னலத்துடன் இருக்கலாம். ஆனால் இரண்டு ஆண்டு காலம் நிஷ்காம்ய கர்மமாகிய களத்தில் கடினமாக உழைப்பாயானல், அவற்றில் ஐந்து சதவீதம் தன்னலமற்றும் மீதி தொண்ணூற்றைந்து சதவீதம்

தன்னலத்தோடும் இருக்கும். உன்னுடைய நோக்கங்களை ஆராய்ந்து, தூய்மைப்படுத்திக் கடினமாக உழைக்கவேண்டும். பின்னர் சில ஆண்டுகள் இடைவிடாது போராடினால், ஐம்பது சதவீதம் தன்னலமற்று இருக்கும். உன் செயல்களில் நூறு சதவீதமும் தூயவையாக தன்னலமற்று இருக்கும் நல்ல காலமும் வரும். நீ ஜனகராஜனைப் போல் முழுநிறைவு பெற்ற கர்மயோகி ஆவாய். இந்த குறிக்கோளை உனக்கு முன்னர் வைத்துக்கொண்டு, தினந்தோறும் அதை அடைவதற்காக கடினமாகப் போராடி, உன்னுடைய குறிக்கோளை அடைவதில் அக்கரையுடனும் உண்மையுடனும் இருப்பாயானால், அந்த நாள் வெகு தூரத்தில் இல்லை.

பயன் கருதாதும், இறைவனுக்காகவும், வேலையை இறைவழிபாடாகக் கருதியும், உன் செயல்களனைத்தையும் இறைவனுக்கே அர்ப்பணித்தால் உன் மனம் முற்றிலும் தூய்மையானதாக விளங்கும். நீ மூச்சு விடுவதும் வாழ்வதும் வேலை செய்வதும் ஒவ்வொரு கணமும் இறைவனுக்காகவே என்றும் அவனில்லாவிட்டால் உன் வாழ்க்கை எவ்விதப் பயனுமில்லை என்றும் எண்ணி நன்கு சிந்தித்து உணர்வாயாக. வேலை செய்யும்போது ஒரு கணத்தில் சிறிதளவு அவனை மறந்திருந்தால்கூட அவனுடைய பிரிவுத் துன்பத்தினால் நீ ஏக்கம் கொள்ளவேண்டும்.

## 4. ஒரு கர்ம யோகியின் தகுதிகள்

ஒரு கர்மயோகிக்கு காமம், பேராசை, கோபம், அகந்தை ஆகிய தீய இயல்புகள் ஒருசிறிதும் இருக்கக் கூடாது. இவற்றின் சிறு அறிகுறிகள் இருந்தால் கூட அவற்றை நீக்கிக்கொள்ள முயலவேண்டும். அவன் செயல்களுக்கு இவ்வுலகிலும் மறு பிறவியிலும் எவ்வித பலனையும் எதிர்பார்க்கக் கூடாது. பெயர்,

புகழ், பாராட்டு, அங்கீகாரம், கை தட்டல், மதிப்பு, நன்றி ஆகியவைகளைப் பெற எவ்விதமான ஆசையும் அவனுக்கு இருக்கக்கூடாது. மாசுமறுவற்ற குணம் அவனுக்கு இருக்க வேண்டும். இதைப் படிப் படியாகப் பெற அவன் முயல வேண்டும். அடக்கத் துடனும், வெறுப்பு, கடுமை, பொறுமை ஆகிய தன்மைகள் நீங்கியவனாகவும் இருக்க வேண்டும். அவன் எப்பொழுதும் இனிய சொற்களையே பேச வேண்டும். கர்வமும் பொறுமையும் நிறைந் தவனும், மற்றவர்களிடம் தனக்கு மதிப்பும் மரியாதையும் எதிர்பார்ப்பவனும் எவ்வாறு மற்ற வர்களுக்குத் தொண்டு செய்யமுடியும்? அவனுக்குச் சிறிதளவுகூட அச்சமிருக்கக் கூடாது. கோழையான ஒரு மனிதன் கர்மயோகத்துக்கு முற்றிலும் தகுதி யற்றவன். காலையில் தன் மனைவிக்கு உதவியாகச் சமையல் அறையில் பாத்திரங்களைக் கழுவவும், மாலையில் அவள் துணிகளைத் துவைத்துப் போடவும் தான் அவன் தகுதியானவன். கர்மயோகப் பாதையில் அச்சம் என்பது பெரும் தடையாக இருக்கும்.

கர்மயோகி பண்புடையவனாகவும், அன்புடனும் மற்றவர்களிடம் தாராளமாகப் பழகும் இயல் புடையவனாகவும் இருக்க வேண்டும். ஜாதி, மதம், நிறம் ஆகிய வேற்றுமைகளைப் பாராட்டாமல் அனைவரிடமும் சமமாகக் கலந்து பழகும் தன்மை யுடையவனாக இருக்க வேண்டும். அவரவர்க்கு ஏற்ற முறையிலும், கருணையுடனும் பரந்த அன்புடனும் நடந்து கொள்ள வேண்டும். சகிப்புத் தன்மையும் பரிவும் உடையவனாக விளங்க வேண்டும். மற்றவர்களுடைய பழக்க வழக்கங்களை அனுசரித்துப் போகின்ற இயல்பும் அவனுக்கு இருக்க வேண்டும். எல்லாவற்றையும் தழுவிச் செல்பவனாகவும் எல்லா விஷயங்களையும் மனதில்

அடக்கியவனுகவும் அவன் இருக்கவேண்டும், சந்தர்ப்பத்துக்கேற்ற அறிவுக் கூர்மையும், சமநோக்கும் அவனுக்கு வேண்டும். அடக்கமான, அமைதியான மனம் படைத்தவனுக அவன் இருக்க வேண்டும். மற்றவர்களின் நல்வாழ்வில் அவன் மகிழ்ச்சி அடையவேண்டும். எளிதில் எரிச்சலும் மனக் கலக்கமும் அடைபவனும், அற்ப விஷயங் களுக்குக் கூடக் குற்றம் காண்பவனும் கர்மயோக நெறிக்குச் சிறிதும் தகுதியற்றவன். அவன் புலன் களனைத்தையும் அடக்கியிருக்க வேண்டும்; எளிய வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும். ஆடம்பர வாழ்க்கையை நடத்தவும், எல்லாவற்றையும் தானே அடையவும் விரும்பும் ஒருவன் தன் உடைமைகளை மற்றவர்களுடன் எவ்வாறு பங்கிட்டுக் கொள்வான். அவன் தன்னல உணர்வை வேரோடு எரித்துவிட வேண்டும். இதன் தொடர் பாக கீதையிலுள்ள வாக்கியத்தை எண்ணிப் பாருங்கள்.

''புலன்களைக் கட்டுப்படுத்தியும், வென்றும், எல்லாப் பொருள்களையும் சமமாகக் கருதியும், உயிர்கள் எல்லாவற்றின் நல்வாழ்விலும் மகிழ்ச்சி அடைந்தும் உள்ள ஒருவன் என்னை வந்தடை கிருன்'' என்பது பகவான் வாக்கு.

கர்மயோகி நல்ல, ஆரோக்கியமான, வலிமை யோடு கூடிய உடலைப் பெற்றிருக்கவேண்டும். மோசமான உடல் நிலையும் சீர்குலைந்த உருவமும் அவனுக்கு இருந்தால், அவனுல் மற்றவர்களுக்கு எவ்வாறு தொண்டு செய்ய முடியும்? உடலைப்பற்றி அதிக கவனம் செலுத்த வேண்டும். ஆனுல் அதன் மேல் சிறிதளவுகூடப் பற்று இருக்கக் கூடாது. ''இந்த உடல் என்னுடையது,'' என்று அவன் ஒருபொழுதும் சொல்லக்கூடாது. நரிகளும் மீன்களும்கூட ''இந்த உடல் எங்களுடையது''

என்று சொல்கின்றன. ஒருவன் ஒரு உயர்ந்த குறிக்கோளுக்காக தன் உடலை எப்பொழுதும் தியாகம் செய்யத் தயாராக இருக்க வேண்டும். உடலை நல்ல வலுவான நிலையில் வைத்திருப்பதற்கு பிராணாயாமமும், உடற் பயிற்சியும், ஆசனங்களும் ஒழுங்காகச் செய்துவர வேண்டும். அவன் நல்ல, தூயதான, வலிமையைக் கொடுக்கும் சத்துள்ள உணவைச் சாப்பிட வேண்டும்.

ஒரு கர்மயோகி, இகழ்ச்சி, அவமரியாதை, அவமதிப்பு, கடுஞ்சொல், குற்றச்சாட்டு, பழி, வெப்பம், குளிர், நோய், துன்பம் ஆகியவற்றைப் பொறுத்துக்கொள்ள வேண்டும். அவனுக்குப் பொறுமை வேண்டும். தன்னிடத்திலும், இறைவனிடத்திலும், நீதி நூல்களிலும், குருவின் சொற்களிலும் முழு நம்பிக்கை இருக்க வேண்டும். அப்படிப்பட்டவன்தான் நல்ல கர்மயோகியாக இருக்க முடியும். அப்படிப்பட்ட மனிதனால்தான் நாட்டுக்கும் துன்பப்படும் மனித சமுதாயத்துக்கும் உண்மையான, பயனுள்ள சேவை செய்ய முடியும். இம்மாதிரி நிறைவுபெற்ற சாதகனைப் பார்ப்பது மிகவும் கடினம். மேற்கண்ட பண்புகளில் உனக்கு ஒரு சில இருந்தால்கூடப் போதும். மற்றவை நீ கர்மயோகத்தில் அக்கறையுடன் ஈடுபடும்போது தாமாகவே வந்து விடும். மனம் தளர்ச்சி அடையக் கூடாது. இறைவனுக்குத் தொண்டு செய்வதில் ஈடுபடு. உடலை மறந்துவிடு. களத்தில் மனவுறுதியுடனும் துணிவுடனும் இறங்கிச் செயல்படு. ''இப்பொழுதே நான் சிறந்த கர்மயோகி ஆக வேண்டும்,'' என்ற உணர்வுடன் துணிந்து செல். எல்லாப் பண்புகளும் தாமாகவே உன்னிடம் வந்து சேர்ந்துவிடும். இந்தக் கணத்திலிருந்தே அக்கறையுடன் செயல்படத் தொடங்கு. ஜனகர், புத்தர்

ஆகியவர்களைப் போன்று சிறந்த கர்மயோகியாக மாறிவிடு.

சிறிதளவு அன்பு, கருணை, பரிவு ஆகியவைகளை மூலதனமாகக் கொண்டு பணியைத் தொடங்கு. கர்மயோகமாகிய களத்தில் உடனே நுழைந்து விடு. அங்குள்ள தலைவர்களிடமிருந்து உனக்கு உற்சாகம் பிறக்கும். கண்ணுக்குத் தோன்றாமலிருக்கும் ஆவியுலக நண்பர்களும் நிரந்தரமாக முழுமை பெற்ற யோகிகளும் உன் முன்னேற்றத்துக்கு உதவுவார்கள். உன்னுடன் பணி செய்பவர்கள் உனக்கு உற்சாகமாக உதவுவார்கள். சிறிது காலத்திற்குப் பிறகு நீ வியக்கத்தக்க கர்ம யோகியாக மாறிவிடுவாய். அச்சமற்ற தன்மை, அடக்கம், இன்னும் மற்ற பண்புகளும் உன்னிடம் குடிகொண்டு தாமே சுடர்விட்டுப் பிரகாசிக்கும்.

இறைவனருளால் மனவலிமை, நம்பிக்கை, மற்று எல்லா நற்பண்புகள் ஆகியவற்றைப் பெறுவாயாக. தன்னலத்தைத் தியாகம் செய்யும் உணர்வை இறைவன் உனக்கு அருள்வாராக.

## 5. வேலையே வழிபாடு

வேலையே வழிபாடு. வேலையே தியானம். ''நான் செய்கிறேன்'' என்ற கர்த்தா மனப்பான்மையில்லாமல் பயன்களையோ பரிசையோ எதிர்பாராமல் தீவிரமான அன்புடன் தொண்டு செய். நீ இறைவனை அறிந்து கொள்வாய். மக்களுக்குச் செய்யும் சேவையே மகேசனுக்குச் செய்யும் சேவையாகும்.

சரியான உணர்வோடு, மற்றும் கர்வமும் இல்லாமல் செய்யும் பணி ஒருவரை மேன்மையுறச் செய்யும். நீ பக்தி நெறியைப் பின்பற்றினால்,

இறைவனுடைய கைகளில் நீ ஒரு கருவிதான் என்று உணர். ஞானயோக நெறியில் சென்றால், 'இயற்கைதான் எல்லாவற்றையும் செய்கிறது. நீ ஒரு சாட்சிதான்' என்பதை உணர்ந்துகொள். எல்லா வேலைகளும் புனிதமானவை. இறைவன் நோக்கிலிருந்தும் கர்மயோகக் கண்ணோடும் மிக உயர்ந்த நிலையிலிருந்து பார்க்கும்போது எந்த வேலையும் இழிந்ததல்ல. மேலே சொன்னபடி சரியான மனப்பாங்கோடு செய்தால் ஒரு தோட்டியின் வேலைகூட இறைவனை அடைவதற்குரிய யோகச் செயல் ஆகும்.

தன்னலம் காரணமாக உன் உள்ளம் மிகவும் வருந்தத்தக்க முறையில் சுருங்கிவிட்டது. தன்னலம் தான் மனித வாழ்க்கைக்குள்ள சாபக்கேடு. தன்னலம் அறிவை மறைத்து விடுகிறது. தன்னலம் என்பது குறுகிய மனப்பான்மை. புலனின்பம் தன்னலத்தை வளர்க்கிறது. மனித குலத்தின் துன்பங்களுக்கெல்லாம் அதுதான் மூல காரணம். உண்மையான ஆன்மீக முன்னேற்றம் தன்னலமற்ற தொண்டின் மூலம் தான் தொடங்குகிறது.

பரதேசிகளுக்கும், துறவிகளுக்கும், சுவாமிகளுக்கும், பக்தர்களுக்கும் நோயாளிகளுக்கும் தெய்வீக உணர்வுடனும், அன்புடனும், பக்தியுடனும் தொண்டு செய். இறைவன் எல்லா உயிர்களின் இதயங்களிலும் அமர்ந்திருக்கிறான்.

''அர்ச்சுனா! இறைவன் எல்லா உயிர்களின் இதயங்களிலும் அமர்ந்திருக்கிறான். அவன் தன் மாயையினால் உயிர்கள் அனைத்தையும் குயவன் சக்கரத்தில் ஏற்றிவைத்திருப்பதைப்போல் சுழலச் செய்கிறான்'' என்று பகவான் கீதையில் சொல்கிறார்.

சேவை உணர்ச்சி உன் எலும்புகளிலும், உயிரணுக்களிலும், தசை நார்களிலும், நரம்பு களிலும் ஊறி இருக்கவேண்டும். அதன் பயன் ஒப்பற்றது. அதைப் பயின்று பிரபஞ்சத்தின் பரந்த தன்மையை உணர்ந்து பேரின்பம் பெறுவாய். வேதாந்தமும், வீண்பேச்சும் எதற்கும் பயன் படாது. பணி செய்வதற்கு அளவற்ற ஊக்கத்தை யும் உற்சாகத்தையும் காட்டு. சேவை செய்யும் உணர்வில் தீவிரமாக இரு.

படிப்படியான பயிற்சியின் விளைவாக ஒரே சமயத்தில் இருவகையான வேலைகளைச் செய்ய முடியும். வேலை செய்யும்போது இறைவன் திருநாமத்தை உச்சரித்துக்கொண்டே இரு. பொது வாக கர்மயோகத்தை பக்தியோகத்தோடு இணைக்க லாம். ஒரு கர்மயோகி தான் எதைச் செய்தாலும் அதை இறைவனுக்குத் தன் உறுப்புக்களால் செய் யும் வழிபாடு என்றே அர்ப்பணிக்கிறான்.

ஒரு கர்மயோகி தான் தொண்டு செய்யும் மனிதர்களிடமிருந்து தன் சேவைக்குப் பதிலாக அன்போ, பாராட்டுதலோ, நன்றியோ, போற்றுதலோ எதையும் எதிர்பார்ப்பதில்லை.

ஆரம்பத்தில் உன் செயல்கள் அனைத்தும் ஆசை களில்லாமல் முற்றிலும் தூய்மையானவையாக இல்லாமற் போகலாம். அவற்றில் சில பலனை எதிர்பார்ப்பவையாகவும், வேறு சில ஆசை களற்றவையாகவும் இருக்கலாம். செயலில் இறங்கும்போது உன்னுடைய நோக்கங்களை ஆராய்ந்து பார்ப்பதில் மிகவும் விழிப்புடன் இருக்க வேண்டும். எப்பொழுதும் உன் மனதை ஆராய்ந்து கொண்டே இருக்க வேண்டும். இடைவிடாத வேலையின் காரணமாக உன் உள்ளம் மேலும் மேலும் தூய்மை பெறுகிறது. நாளடைவில் உன்

செயல்கள் விருப்பு வெறுப்பு அற்றவையாகவும், தன்னலமற்றவையாகவும் மாறிவிடும்.

மனதில் மூன்று வகையான குற்றங்கள் இருக்கின்றன. அவையாவன மலம் (காம, குரோத, லோபங்கள் போன்ற அழுக்குகள்), விட்சேபம் (மனத்தின் அலைவுகள்), ஆவரணம் (அறியாமை என்னும் திரை). அவற்றுள் மலம் என்பது நிஷ்காம்ய கர்ம யோகத்தாலும், விட்சேபம் என்பது வழிபட்டாலும், ஆவரணம் என்பது வேதாந்த நூல்களைப் படிப்பதாலேற்படும் ஞானத்தாலும் நீங்கும். கர்ம யோகத்தினால் மனம் தூய்மை யடைகிறது. அது உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, மனத்தில் ஞானம் தோன்றுவதற்கு உதவி செய்கிறது.

தன் தேவைகளைக் குறைத்துக்கொண்டு, புலன்களை அடக்கியுள்ள ஒருவனே கர்ம யோகத்தில் ஈடுபடமுடியும். ஆடம்பரமாக வாழ்ந்துகொண்டு, புலன்களை அடக்காமல் திரியவிட்டுக்கொண்டிருக்கும் ஒருவனால் எவ்வாறு மற்றவர்களுக்கு சேவை செய்ய முடியும்? அவன் எல்லாவற்றையும் தானே அடைய விரும்புகிறான். மற்றவர்களை ஏமாற்றி அவர்களை அடக்கியாள விரும்புகிறான். அவன் மனதில் சமநிலையோடு இருக்க வேண்டுமென்பது மற்றொரு தேவையாகும். அவன் விருப்பு வெறுப்பு அற்றவனாகவும் இருக்க வேண்டும். அதையே "தனக்கென்று விதிக்கப்பட்ட செயலை ஒருவன் பயன் கருதாமலும், பற்றற்றும், விருப்பு வெறுப்பற்ற நிலையிலும் செய்யும்போது அச்செயல் தூய்மையானது என்று சொல்லப்படும்" என்று கண்ணபிரான் கீதையில் கூறுகிறார்.

செயலின் பயனை விட்டு விடுதல் அல்லது அதில் பற்றற்று இருத்தல் என்பதன் இரகசியத்தைத் அறிந்துகொள்ள வேண்டும். அது மிகவும் நீண்ட,

கடுமையான பயிற்சியினுல்தான் முடியும். கடுமை யானதும் ஆர்வமுள்ளதுமான உழைப்போடு, அதன் பயனைப்பற்றி பொருட்படுத்தாத நிலை இணைந் திருந்தால்தான் அது முடியும்.

பேராசையையும், வாழ்க்கை, வசதிகள் ஆகிய வற்றின் மேலுள்ள ஆசையையும் ஒழித்துவிடு. பெரு விருப்போடு இலட்சியத்திற்காக உழைப்பவர் போல் செயல்படு. வாழ்க்கையில் பற்றுள்ளவர்களைப் போல் அதை மதித்து நட. மகிழ்ச்சிக்காக வாழ்பவர்களைப் போல் மகிழ்ச்சியோடிரு.

இந்த இரு வேறுபட்ட தன்மைகள் இணைந் திருக்கச் செய்வதுதான் பற்றற்ற தன்மை என்ப தாகும். பதவி, நல்வாழ்வு, வசதி முதலியவைகளை நாடுபவர்கள் அனைவரும் இந்தப் பயன்களை அடைந்து இன்பம் பெறுவதற்காகவே செயல் படுகிருர்கள். தங்கள் செயல்கள் அனைவற்றையும் அந்த நோக்கத்துடன் மேற்கொள்கிருர்கள். பயன் தான் முயற்சியின் நோக்கம். அதை அடைய வேண்டும் என்ற அவாதான் ஒருவர் செய்யும் முயற்சிக்கு ஊக்கம் அளிக்கிறது.

சாதகர்கள் இவ்வுலகில் வாழும் சிறு குழந்தை களைப்போல் உற்சாகத்துடன் வேலை செய்ய வேண்டும். ஆனுல் அவர்களுடைய நோக்கம் மட்டும் மாறுபட்டதாக இருக்க வேண்டும். இறை வனுடைய விதிகள் நிறைவேற்றப்படவும், இறை வனுடைய நோக்கம் பலிக்கவும், எல்லா இடங் களிலும் இறைவனுடைய திருவுளப்படியே செயல் கள் நடந்தேறவும் பணியாற்ற வேண்டும். அவர்கள் இறைவன் ஒருவனுக்காகவே செயல் படுகிருர்கள். இதுதான் நம்மைக் கட்டுப்படுத்தும் ஆற்றலாகிய புதிய நோக்கமாகும். இவ்வாறு செயல்படுவதால், அவர்களுக்கு எவ்விதமான

பந்தமும் ஏற்படுவதில்லை. ஆசைதான் பந்தங்கள் அல்லது தளைகளை ஏற்படுத்துகின்றது.

பற்றற்ற தன்மையை அடைவது கடினமானது. அதற்கு நீண்டகாலத்துக்குப் பொறுமையோடு கூடிய பயிற்சி தேவை. பயிற்சியாளர் ஆரம்பத்தில் தன்னுடைய செயல்களால் தனக்கேற்படும் பயன்களைப்பற்றி கவலைபடாமலிருக்க முயல்வார். தன்னாலியன்ற அளவு பணியாற்றிவிட்டு, அதனால் தனக்கேற்படும் விளைவுகளைப்பற்றிய உணர்வில்லாமல், கிடைத்த பயனை சமநிலையோடு ஏற்றுக் கொள்வார். வெற்றிகிட்டினால், தனக்கேற்படும் அதிக மகிழ்ச்சியை அடக்கிக்கொள்வார். தோல்வி வருமானால், மனத் தளர்ச்சி ஏற்படாமல் காத்துக் கொள்வார்; தன்னுடைய முயற்சிகளை விடாது மீண்டும் மீண்டும் மேற்கொண்டு படிப்படியாகத் தன் தோல்விகளைப்பற்றிக் கவலைப்படாத நிலை அடைந்திருப்பதை உணர்வதோடு தன்னுடைய ஆற்றலிலும், முயற்சியிலும் ஒருசிறிதும் குறையாமல் பணியாற்றுவார். அவர் தாமாகவே வெளிப்படையாக எவ்வித செயல்களையும் நாடிச் செல்ல மாட்டார். தானாகவே எதிர்ப்படும் ஒவ்வொரு செயலையும் மிகச் சிறந்த முறையில் செய்து முடிப்பார். அச்சமயத்தில் மிகமேலான ஆற்றலையும், பற்றற்ற ஆன்மீக நிலையையும் குறிக்கும் சமமான மனநிலையோடு விளங்குவார்.

இவ்வுலகியல் இன்பங்களின் உண்மையான நிலையை நன்கு மதிப்பிடுவதால் மேற்கண்ட பண்புகளைப் பெறுவார். அவைகளின் நிலையற்ற தன்மையையும், அவற்றை நாடிச் செல்பவர்கள் அடையும் கவலையையும், அமைதியற்ற நிலையையும், இறுதியில் அவைகளைப் பெற்று அனுபவிக்கும்போது அவற்றில் காணும் பயனற்ற தன்மையையும், அவற்றைப்

பெற்று (வெகு விரைவிலேயே) போதுமென்ற எண்ணம் ஏற்படுவதையும் எண்ணிப் பார்ப்பார். இவ்வாறு மனதில் ஏற்படும் ஆராய்ச்சியின் பயன் அவருக்கு ஏமாற்றம் ஏற்படும்போது உதவுகிறது; வெற்றிக்களிப்பைக் கட்டுப்படுத்துவதால் மனச் சமநிலை உண்டாக்கிக்கொள்ள உதவுகிறது. இவ்வாறு அவர் தினசரி முயற்சியில் ஈடுபட வேண்டும். முயற்சியில் வெற்றிபெற பல்லாண்டுகள் அவர் தம் ஆற்றலைச் செலவிட வேண்டி இருக்கும்.

பல்வேறு மதங்களைச் சார்ந்த சிறந்த பெரியோர் களால் கூறப்பட்டுள்ள அறிவுரைகளை நடை முறையில் பயில்வதுதான் தன்னுடைய பணி என்பதை ஆன்மீகப் பயிற்சியாளர் நினைவில் கொள்ள வேண்டும்.

## 6. சமநிலை என்னும் யோகம்

உலகியல் மனப்பான்மையுள்ள மக்கள் பொது வாக வெற்றியில் களிப்பும், தோல்வியில் சோர்வும் அடைகின்றனர். களிப்பும், சோர்வும் மனதின் இயல்புகள். கர்மயோகி என்பதன் உண்மையான பொருளுக்கேற்றபடி இருக்க விரும்பினால், எல்லா நிலைகளிலும், எல்லாச் சூழ்நிலைகளிலும், எல்லாச் சமயங்களிலும் மனதைச் சமநிலையில் வைத்திருக்க வேண்டும். உண்மையில் இது மிகவும் கடினமானது. ஆனால் நீ எப்படியாவது அவ்வாறு இருக்கத்தான் வேண்டும். அப்பொழுதான் உனக்கு மன அமைதி யும், உண்மையானதும் நீடித்ததுமான இன்பமும் கிட்டும். மனதில் சமநிலையோடு இருப்பவன் ஞானி. யோகம் மனதை ஞானம் அடைவதற்குத் தயார் செய்கிறது. அதுதான் கர்மயோகத்தின் சிறப்பு. அதுவே கர்மயோகத்தின் இரகசியமும் சாரமும் ஆகும்.

எவ்விதமான வேலையிலும் ஒரு சிறிதுகூடப் பற்று இருக்கக் கூடாது. எந்த வேலையையும் எப்பொழுது வேண்டுமானாலும் விட்டு விலகிச் செல்லத் தயாராக இருக்கவேண்டும். ஒரு வேலையை நீ எடுத்துக்கொள்ள வேண்டுமென்பது இறைவன் கட்டளையாக இருக்கலாம். நீ உடனே அதை முணுமுணுக்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும். அது எத்தன்மையானது, அதில் உனக்கு விருப்பம் இருக்கின்றதா, இல்லையா என்றெல்லாம் ஆராயக் கூடாது. சந்தர்ப்பங் களுக்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்றபடி அதை விட்டு விடவும் வேண்டும். இதுவே யோகம். இங்கே வேலையின் மீது பற்றில்லை.

ஆனால் பெரும்பாலான மக்கள் வேலையின் மீது பற்றுள்ளவர்களாகவே இருக்கின்றார்கள். அவர்கள் சில வேலைகளை விரும்பி அவற்றை உற்சாகத்துடன் ஏற்றுக் கொள்கிறார்கள். வேறு சில வகையான வேலைகளை வெறுக்கிறார்கள். சூழ்நிலை களின் காரணமாக தாங்கள் விரும்பும் வேலைகளை விடவேண்டுமானால் மிகவும் மனம் வருந்துகிறார்கள். தேவையில்லாத பொறுப்புகளைச் சுமந்து கொண்டு, துன்பங்கள் துயரங்கள், வருத்தங்கள் ஆகிய வற்றோடு வருந்தி உழைக்கிறார்கள். இது யோகமே அல்ல. ஏனென்றால் இங்கு இராஜஸ குணத்தின் காரணமாக, வேலையின் மீது அவர்களுக்குப் பற்று ஏற்பட்டு விட்டது. உலகியல் மனப்பான்மையுள்ள மக்கள் எப்போதும் வேலையின் மீது பற்றுடன் இருக்கின்றார்கள். ஆகையால் அவர்கள் துன்பப் படுகிறார்கள். இறைவனுக்கு சம்மதமானால் உலக முழுவதும் பரந்த இயக்கம் ஒன்றைக்கூட நீ ஆரம்பிக்கலாம். ஆனால் இறைவன் கட்டளைப்படி அதை எந்தக் கணத்திலும் நிறுத்திவிடத் தயாராக இருக்க வேண்டும். வெற்றி அல்லது தோல்வியைப்

பெறுவது உன் குறிக்கோளாக இருக்கக் கூடாது. இறைவன் ஆணைப்படி நடந்து, போர்க்களத்திலுள்ள வீரனைப் போல் கடமையைச் செய்ய வேண்டும். தன்னலம் கருதும் சிந்தனை இல்லாத காரணத்தால் அத்தகைய பணியில் ஈடுபடுவதில் அதிக இன்பம் ஏற்படுகின்றது.

உன் அறிவை ஆன்மாவிலேயே நிலைத்திருக்கச் செய். இவ்வுலகில் ஏற்படும் மாறுதல்களுக்கிடையே சமநிலையோடு கூடிய மனதுடன் இரு. தெய்வீக நோக்கங்கள் நிறைவேறுவதற்காகப் பணியாற்று. பயனை எதிர்பாராதே. எல்லாவற்றையும் இறைவனுக்குச் செய்யும் வழிபாடாகவே கருதிச் செய். இறைவனுடைய விருப்பத்துக்கிணங்கஉன்வேலையை உலகத்தவரின் நல்வாழ்வுக்காகவே செய். உன் கருவிகளின் வழியே தெய்வீக ஆற்றலானது தடையில்லாமல் செயலாற்ற அனுமதித்து விடு. உன் அகந்தை வெளிப்பட்டால் அந்தக் கணமே தெய்வீக ஆற்றல் தடையின்றி செல்வது நின்று விடும். உன்னுடைய ஐம்பொறிகளையும் இறைவனுடைய தெய்வீக விளையாட்டுக்குரிய தூய கருவிகளாக எண்ணிக் கொள். உன் உடலாகிய குடிலுள்ள அகந்தையை அகற்றி, சுத்தமாக வைத்திரு. அப்பொழுது பிருந்தாவனத்தில் குழலூதும் கண்ணன் உன் உடலிலும் தடையன்றி இன்னிசை பாடமுடியும். உன் கருவிகளின் வாயிலாக அவன் செயல்படுவான். அப்போது உன் பணி பளுவில்லாமல் எளிதாக இருப்பதை உணர்வாய். உனக்குள்ளே இறைவன் செயலாற்றுவதை நீ உணர்வாய். எல்லா விதமான பொறுப்புக்களினின்றும் நீ விடுபடுவாய். பறந்து திரியும் பறவையைப்போல விடுதலை பெறுவாய். நீ முற்றிலும் மாறுபட்டவனாக இருப்பதை உணர்வாய். உன் அகந்தை மீண்டும் உன்னிடம் திரும்பிவரப் பார்க்கும். விழிப்புடனும்

கவனத்துடனும் இரு. படிப்படியான பயிற்சி யாலும், மனத் தூய்மையாலும் நீ கர்மயோகத்தில் வல்லவனுவாய். உன் செயல்கள் அனைத்தும் தன்னலமற்று சிறந்து விளங்கும். அவை இறுதியில் ஞானத்தில் முடியும். இதுவே சமநிலை யோகம் எனப்படும்.

இதையே கண்ணன் அர்ச்சுனனுக்குச் செய்த உபதேசத்தில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றான்.

''தனஞ்சயா! இறைவனோடு ஒன்று பட்டு, பற்றை நீக்கி, வெற்றி தோல்விகளில் சமநிலையோடு செயல் புரிவாயாக. சமநிலையோடிருப்பதே யோக மாகும்.''

''இறைவனுக்குத் திருப்தியாக இருக்கட்டும்'' என்ற எண்ணக் கூடிய நுண்ணிய பற்றுகூட உனக்கு இருக்கக் கூடாது. இறைவனுக்காகவே செயல்படு. அப்போது உண்ணுதல், நடத்தல், பேசுதல், உறங்குதல், சுவாசித்தல், இயற்கை உபாதைகளைக் கழித்தல் போன்றவைகூட யோகச் செயல்களாகவே ஆகிவிடும். வேலை வழிபாடாக மாறிவிடுகிறது. இதுதான் மேலான இரகசியம். கர்மயோகத்தில் படிப்படியான பயிற்சியின் உதவியால் நீ இதை கற்றுக்கொள்ள வேண்டும். உன் செயல்கள் அனைத்தையும் இறைமய மாக்கவேண்டும். உன் செயல்கள் அனைத்தையும் யோகமாக மாற்றி யமைக்கவேண்டும். வெறும் வாய்ச் சொற்களால் பயனில்லை. கர்மயோகத்தின் இரகசியங்களை அறிந்து கொள். தன்னலமற்று பணி செய். உண்மையான கர்மயோகியாக மாறி, எல்லையற்ற ஆன்மீகப் பேரானந்தத்தை அனுபவிப்பாயாக.

மனதில் சமநிலையோடுள்ள கர்மயோகி ஒருவனைப் புகழ்ச்சியும் இகழ்ச்சியும் எவ்விதத்திலும் பாதிக்காது. ஏனெனில் அவன் ஒரு வேலையின் நற்பயனைப்பற்றி மகிழ்ச்சியோ அல்லது மற்றொரு வேலையின் தீய விளைவுகளைப்பற்றி வருத்தமோ அடைவதில்லை. அவன் வெற்றியிலும் தோல்வியிலும் சமநிலையோடு கூடிய மனம் படைத்தவன். அவன் மனம் எப்பொழுதும் அமைதியாகவே இறைவனிடத்திலேயே நிலைபெற்றிருக்கிறது. மனச் சமநிலையோடு செய்யும்போது, பற்றை உண்டாக்கும் இயல்புடைய வேலைகள்கூட அத்தன்மையை இழந்துவிடுகின்றன. புலனுகர்ச்சிப் பொருள்களிடம் ஒரு கர்மயோகிக்குப் பற்றுதல் இல்லை. அவன் இடைவிடாத தன்னலமற்ற சேவையால் தன் மனதைத் தூய்மைப்படுத்தியுள்ளான். தான் என்னும் எண்ணத்தை முற்றிலும் துறந்துவிட்டான். ''இறைவன் தன்னுடைய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காகக் கொடுக்கப்பட்டுள்ள கருவியே தன் உடல்'' என்று அவன் எண்ணுகிறான். ''தன் செயல்கள் அனைத்துக்கும் தனக்குள்ளே இருக்கும் தெய்வீகச் சூத்திரதாரியாகிய இறைவன் தான் காரணம்,'' என்று உணர்ந்திருக்கிறான். சமநிலையான யோகத்தில் நிலைத்திருப்பவன் கர்மயோகக் கலையில் மிகச் சிறந்தவனாகிறான். எனவேதான் கீதையில் கண்ணன் கீழ்க்கண்டவாறு கூறுகிறான்:

தூய அறிவோடு இணைந்து நற்செயல்களின்றும் தீய செயல்களின்றும் ஒருவன் நீங்குகிறான். எனவே யோகத்தையே பற்றுக. செயல் புரிவதின் திறமையே யோகம் எனப்படும்.

மனச் சமநிலையோடுள்ள கர்மயோகி கர்மபலனைத் தியாகம் செய்துவிடுகிறான். நல்லவையும் தீயவையுமான பிறவிகள் அவனுக்கில்லை. பயனில் பற்றுகொள்வதே பிறவிக்குக் காரணமாகிறது.

இறைவனுடைய நோக்கத்தை நிறைவேற்றுவதற்காகவும், பயன்களில் பற்றில்லாமலும் செய்யப்படுவதால், கர்மயோகி ஞானத்தை அடைகிறான். பிறவி என்னும் தளையை உதறித் தள்ளுகிறான். பிரம்ம ஞானத்தையும் மோட்சத்தையும் அடைகிறான்.

## 7. பயன் கருதாது பணி செய்

புலனுகர்ச்சிப் பொருள்களின் மீதுள்ள பற்றை முற்றிலும் துறந்து, ஆன்மாவில் நிலைபெற்றுள்ள தூய அறிவின் உதவியோடு சமநிலை பெற்றுள்ள மனதின் உதவியோடு செய்யும்போது, பந்தங்கள் அல்லது தளைகளை ஏற்படுத்தும் செயல்கள் கூட அம்மாதிரி இயல்பை இழந்துவிடுகின்றன. நீ இம்மாதிரியான தூய அறிவையும் மனச் சமநிலையையும் ஏற்படுத்திக்கொண்டு அதை வளர்க்க வேண்டும். மனித குலத்துக்குத் தொண்டு செய்து அதன் பின் அமரநிலையைப் பெறுவதற்காகத்தான் இந்த விந்தையான யந்திரமாகிய உடலை இறைவன் மனிதனுக்குக் கொடுத்திருக்கிறார். அப்படியின்றி அற்ப ஆசைகளை தன்னலமுள்ள நோக்கங்களையும் நிறைவேற்றிக்கொள்வற்காக, இந்த உடலைப் பயன்படுத்தினால், அவன் இரங்கத்தக்க, இழிநிலையை அடைகிறான். பிறப்பு, இறப்பு என்ற சுழலில் சிக்கிக்கொள்கிறான். எந்தச் செயலைச் செய்தாலும், உன் மனதை ஆன்மாவில் நிலைபெறச்செய். மனச் சமநிலையைப் பெற்றுள்ளவனும், ஆன்மாவில் நிலை பெற்றுள்ளவனுமாகிய ஒருவன் அவன் செய்யும் எல்லாச் செயல்களுக்கும் அவனுக்குள்ளே இருக்கும் இறைவனாகிய சூத்திரதாரியே காரணம் என்பதை அவன் தெளிவாக உணர்ந்திருக்கிறான். உண்மையில் இறைவன்தான் இந்த உடலாகிய இயந்திரத்தை இயக்கிச் செலுத்துகிறான் என்பது அவனுக்கு

நன்ருகத் தெரியும். இந்த உடலின் ஒவ்வொரு செயலுக்கும் அடிப்படையாக அமைந்துள்ள உண்மையைப்பற்றி மனச் சமநிலை பெற்ற யோகி ஒருவருக்குத் தெளிவாகத் தெரியும்.

பொதுவாக மனிதன் எந்த ஒரு வேலையையும் செய்யத் தொடங்குவதற்கு முன்னரே, அந்த வேலையின் பயன்களை எவ்வாறு அடைவது என்று திட்டமிடுகிருன். எந்த வேலையைச் செய்தாலும் அதற்குரிய கூலியோ அல்லது பரிசோ கட்டாயம் அடைய வேண்டும் என்ற எண்ண முடையதாகவே மனித மனம் அமைந்துள்ளது. இதற்குக் காரணம் இராஜஸ (ஆசை) இயல்பாகும். மனித இயல்பு எப்பொழுதும் இப்படித்தானிருக் கிறது. ஆய்ந்தறியும் நிலை ஏற்படும் பொழுது மனதில் தூய்மையான நிலை ஏற்பட்டு, இந்த இயல்பு மெதுவாக மாறுகிறது. தன்னலமற்ற உணர்வு மெதுவாக உள்ளே நுழைகின்றது. ஆசை தன் னலத்தையும் பற்றையும் உண்டாக்குகிறது. தன்னலங்கருதும் மனிதனுக்குப் பரந்த மனமும் உயர்ந்த நோக்கமும் இல்லை. அவன் அற்ப மனம் படைத்தவன்; அவன் மனத்தில் பேராசை நிறைந் திருக்கின்றது. எதையும் கணக்கிட்டே செய்வான். பெருந்தன்மையுடன் எதையும் அவனுல் செய்ய முடியாது. ''இந்த வேலையைச் செய்தால் இவ்வளவு தொகைதான் கிடைக்கும். அதற்கேற்றபடி இவ்வளவு வேலைதான் செய்வேன்'', என்று அவன் சொல்வான். வேலையையும் கூலியையும் தராசின் இரு தட்டுக்களில் நிறுத்துப்பார்த்த பிறகே செய்வான். சிறிதளவுகூட அதிகமாக வேலை செய்ய மாட்டான். எப்பொழுது வேலையை நிறுத்தலாம் என்று நேரத்தையே கவனித்துக் கொண்டிருப்பான். அவன் கூலிக்காக வேலை செய்வான். கிடைக்கும் கூலிக்கேற்பதான் அவன் வேலை செய்வான்.

இலாபத்தை அடைய பேராசை படைத்தவன், தன்னலமற்ற சேவையைப் பற்றி அவனுக்கு என்ன வென்றே தெரியாது. இறைவனைப் பற்றிய எண்ணமே அவனுக்கில்லை. சத்தியத்தை அவன் பார்த்ததில்லை. தன்னலமற்ற பரந்த வாழ்க்கையைப் பற்றிக் கற்பனை செய்து பார்க்கக்கூட அவனால் முடியாது. ஒரு குறுகிய, வட்டமான இடத்துக்குள்ளேயே அவன் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கிறான். அவன் தன்னிடமும், தன் மனைவி, குழந்தைகளிடம் மட்டுமே பரிவோடிருக்க முடியும். அதுதான் அவன் உலகம். தராளமனப்பான்மை என்பது அவன் அறியாத ஒன்றாகும்.

உன் செயல்களுக்குப் பயன்களை எதிர்பார்த்தால், அவைகளைப் பெறுவதற்காக நீ மீண்டும் இவ்வுலகிற்குத் திரும்ப வர வேண்டும். மீண்டும் பிறவி எடுக்க வேண்டும்.

''எல்லாச் செயல்களையும் பயன் கருதாமல் செய். இதனால் உள்ளத் தூய்மை உண்டாகும். நீ ஆன்மீக ஞானத்தை அடைவாய். நீ மோட்சம் அல்லது விடுதலை, அமைதி, அமரத்வம் ஆகியவைகளைப் பெறுவாய்'' என்று நிஷ்காம்ய கர்ம யோகி ஒருவர் கூறுகிறார். இதுதான் அவருடைய கொள்கை. எனவேதான் பகவான் அர்ச்சுனனிடம் கீழ்க்கண்டவாறு சொல்கிறார்.

''கர்மத்தைச் செய்வதுதான் உன் வேலை. அதன் பயனைப் பற்றி நீ கவலைப்படக் கூடாது. எனவே கர்ம பலனைப் பற்றிய எண்ணம் உனக்கு வேண்டாம். அதற்காகச் செயலில் ஈடுபடாமலும் இருக்காதே''.

இறைவன் அந்தந்த செயலின் நோக்கத்திற்குத் தக்கபடி அதற்குரிய பலனைக் கொடுக்கிறார். நோக்கம் தூயதானால், இறையருளும் தூய்மையும்

உனக்குக் கிட்டும். நோக்கம் தூய்மையற்றதாஞல், உன் செயல்களின் பலன்களை அனுபவிப்பதற்காக நீ மீண்டும் பிறக்க வேண்டும். மீண்டும் உனக்கேற் படும் கவர்ச்சி அல்லது விலக்கல் காரணமாக நற் செயல்களையோ, தீய செயல்களையோ செய்வாய். இவ்வாறு பிறப்பு என்னும் முடிவுற்ற ஒரு சுழலில் சிக்கிக் கொள்வாய்.

ஆஞல் தன்னலங்கருதாது வேலை செய்தால், எவ்வித பலனும் உனக்குக் கிட்டாது என்ற எண்ணத்தின் காரணமாக எவ்விதமான வேலையும் செய்யாது செயலற்ற நிலையில் இருக்கக் கூடாது. ''இதைச் செய்தால் எவ்வித நன்மையும் எனக்கு ஏற்படாது. எனவே இந்த வேலையை ஏன் செய்ய வேண்டும்? நான் வேலை செய்யாது சும்மா இருக்கிறேன்,'' என்று நீ சொல்லக் கூடாது. அதஞல் சோம்பலும் மந்தமான நிலையும்தான் உன்னிடம் அதிகமாகும். இது விரும்பத்தக்கதல்ல. மனதில் செயலற்றநிலை ஏற்படும் நிஷ்காம்ய கர்ம மனப்பான்மையோடு செயலாற்றிஞல் மனத் தூய்மை பெறுவாய். உன் செயல்களுக்கு இது ஒரு மிகப்பெரிய பரிசாகும். தூய மனம் படைத்த ஒரு மனிதனுடைய உயர்ந்த சிறப்பான நிலையைப் பற்றி உன்ஞல் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது. எல்லையற்ற அமைதியையும், வலிமை யையும், மகிழ்ச்சியையும் அவன் அடைகிருன். அவன் இறைவனுக்கு அருகிலிருக்கிருன். அவன் இறைவனுக்கு இனியன். அவன் விரைவில் இறையொளி பெறுவான். எவ்விதமான பயனும் கருதாமல் வேலையைச் செய். அதன் பயன்களாக தூய்மையையும் உள்ள ஆற்றலையும் உணர்வாய். எத்தகைய பரந்த உள்ளம் உனக்கிருக்கும்! அது விவரிக்க ஒண்ணுதது. அத்தகைய நிலையைப் பயின்று உணர்ந்து, அனுபவிப்பாயாக!

# 8. கர்மயோகத்தினுல் எவ்வித இழப்புமில்லை

கர்மயோகத்தினுல் உனக்கு எவ்வித இழப்பும் ஏற்படாது. நாட்டுக்கோ, சமுதாயத்துக்கோ அல்லது நோய்வாய்ப்பட்ட ஏழை எளியவர்களுக்கோ நீ சிறிதளவு சேவை செய்தால்கூட, அதற்கேற்ற பயனும் நன்மையும் தரும். அது உன் உள்ளத்தைத் தூய்மைப் படுத்துவதோடு ஆன்மீக ஞானத்தைப் பெறுவதற்கேற்ற வகையில் உன் மனதைத் தயார் செய்யும். உன் மனதின் ஆழ்ந்த பகுதியில் இச் செயல்களின் அடையாளங்கள் நன்கு பதிந்து விடும். அதன் காரணமாக ஏற்படும் வேகத்தினுல் மேலும் மேலும் நற்செயல்களைச் செய்யுமாறு நீ தூண்டப்படுவாய். பரிவு, அன்பு, நாட்டுப்பற்று தொண்டு மனப்பான்மை ஆகிய நற்பண்புகள் உன்னிடம் பெருகும். ஒரு மெழுகுவர்த்தி எரிவதால் அதில் உள்ள பொருள்கள் வீணுவதில்லை. வேறு இரசாயன மாற்றத்தைத்தான் அடைகின்றன.

விவசாயம் செய்யும்போது நிலத்தை உழுது எரு இடுகிறுய். ஆனுல் அவ்வாண்டில் மழை பெய்யாவிட்டால் உன் முயற்சி எல்லாம் வீணுகும். நிஷ்காம்ய கர்மயோகத்தில் அப்படியல்ல. எவ்வித மான முயற்சி செய்தாலும் அதனுல் கிடைக்க வேண்டிய பயனைப்பற்றி சந்தேகப்பட வேண்டியதே இல்லை. மேலும் கர்மயோகம் பயில் வதால் எவ்விதமான தீங்கும் ஏற்படுவதற்குரிய சந்தர்ப்பமே இல்லை. மருத்துவர் கணக்குத் தெரி யாதவராக இருந்து, நோயாளிக்கு அளவுக்கதிக மான மருந்தைக் கொடுத்து விட்டால் ஏதாவது தீங்கு விளையும். ஆனுல் கர்ம யோகத்தில் அவ்வாறு நடக்காது. சிறிதளவு தொண்டு செய்தாலோ

அல்லது நிஷ்காம்ய கர்மத்தைச் சிறிதளவு பயின்ருலோ, இந்த உலக வாழ்க்கையாகிய அச்சத்தினின்றும், பிறப்பு இறப்பாகிய மாயச் சுழல் மற்றும் அதன் விளைவுகளால் ஏற்படும் துன்பம் ஆகிய அச்சத்தினின்றும் உன்னை அது காப்பாற்றும். எனவே கண்ணபிரான் அர்ச்சுனனிடம் சொல்கிருர்: ''நீ செய்யும் முயற்சியில் இங்கு எவ்விதமான இழப்போ, தீங்கோ இல்லை. இம்மாதிரியான தொண்டில் சிறிதளவு இருந்தாலும் அது ஒருவரை பெரும் அச்சத்தினின்றும் காப்பாற்றும்.'' ஆன்மாவை முடிவில் எல்லையில்லாப் பேரானந்தத்திற்கு அழைத்துச் செல்லும் கர்மயோக நெறி எக்காலத்திலும் பயனற்றதாகாது.

எவ்விதமான பயனையும் கருதாது எவராலும் வேலை செய்ய முடியாது என்று அறியாதவர்கள் தான் கூறுவார்கள். கர்மயோகத்தின் உண்மையையும் சாரத்தையும் பற்றி அவர்கள் தெரிந்து கொள்ளாதது வருந்தத்தக்கது. அவர்களுடைய மனம் தன்னல உணர்வாலும் பல்வேறு வகையான விந்தையான ஆசைகளாலும் நிறைந்திருக்கின்றது. அதனுல் அவர்களுடைய மனம் தூய்மையற்றும் தெளிவற்றும் இருக்கிறது. கர்மயோகத்தின் அடிப்படையான உண்மையை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் மற்றெல்லோரையும் தங்களுடைய நிலையைக் கொண்டேதான் புரிந்து கொள்கிருர்கள். தன்னலங் கருதாமை என்பது என்ன என்று அவர்களுக்குத் தெரியாது. அவர்களுடைய மனமும் மூளையும் இறுகிப் போய் 'பயன் கருதாத செயல்' என்ருல் என்ன என்று உணர்வதற்கேற்ற ஆற்றலை இழந்து விட்டது. ஆசைக்கு அடிமையான இல்லறத்தாரால் தங்களுக்கும் தங்கள் குடும்பத்தினருக்கும் எவ்விதமான பயனையும் கருதாமல் எந்த வேலையையும் செய்ய முடியாது.

நன்மை செய்ய வேண்டும் என்ற எண்ணம் ஒருவரின் உடலோடும் உயிரோடும் நன்கு ஊறி விட்ட பிறகு அவர் எவ்விதமான பயனையும் எதிர் பார்க்க மாட்டார். மற்றவர்களுக்கு நன்மை செய் வதிலும், தொண்டு செய்வதிலும் பெரு மகிழ்ச்சி அடைவார். தீவிரமான கர்மயோகப் பயிற்சியினால் தனிப்பட்ட மகிழ்ச்சியும் பேரானந்தமும் உண்டா கிறது. பயன் கருதாத, தன்னலமற்ற செயல்களைச் செய்வதால் கர்மயோகிக்கு உள்ளத்தில் ஆன்மீக ஆற்றலும் உறுதியும் உண்டாகின்றது.

கர்மயோகி கர்மயோகத்தின் இரகசியத்தை நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும். அவன் தன்னலமற்ற பணியில் இடைவிடாது மூழ்கிவிட வேண்டும். அவன் நோயுற்ற மக்களை இறைவனின் உருவங்களாகக் கருதி அவர்களுக்குச் சேவை செய்ய வேண்டும். சமுதாயத்துக்குப் பலவகைகளிலும் தொண்டு செய்ய வேண்டும். அவன் சிறிது சிறிதாகத் தன்னலமற்ற பணியின் புகழையும் சிறப் பையும் உணர்ந்து கொள்வான். அவன் தெய்வீக ஒளியும் யோகியின் இனிய பண்புகளையும் பெற்று மாறுபட்ட மனிதனாகவே விளங்குவான். யோக நிலையின் தொடக்கத்தில் அவனுடைய செயல்கள் பல பயன் கருதும் அடிப்படையில் அமைந்திருக் கலாம், அதனால் தவறில்லை, அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. அவன் தூய்மையான நிலையை அடைந்தவுடன், அவன் செயல்கள் தன்னலங் கருதாதவைகளாக மாறிவிடும். எனவே அவன் தளர்ச்சியடையாமல் உறுதியாகச் செயல் புரிய வேண்டும். தன்னலத்தோடு கூடிய பழைய மனதை அழித்துவிட்டு, தன்னலமற்ற புதிய மனதை உருவாக்கிக் கொள்ள வேண்டும். இது மிகவும் கடினமானது என்பதில் ஐயமில்லை. இதற்கு கடுமையான போராட்டமும், இடைவிடா முயற்சி

யும், அளவு கடந்த பொறுமையும், இரும்பு நெஞ் சமும் தேவை. தன்னலமற்ற சேவையால் உனக்கு மேன்மையும் விடுதலையும் கிடைக்கும். தன்னலங் கருதும் பணி உன் ஆன்மீக முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பதோடு, உன் கால்களில் மற்றொரு விலங்காகவும் மாறி விடும். எவ்விதமான பயனையும் கருதாமல் வேலை செய்வது உனக்குக் கடினமாக இருக்குமானால், விடுதலை பெற வேண்டி உறுதியான —குறிக்கோள் ஒன்றை ஏற்படுத்திக் கொள். இது உனக்குத் தடையாக இருக்காது. பிணத்தை எரிப் பதற்குப் பயன்படுத்தும் விறகு பிணத்தையும் எரித்துவிட்டு முடிவில் தன்னையும் எரித்துக் கொள்வதுபோல், இந்த குறிக்கோள் மற்ற குறுகிய நோக்கங்களை அழித்து விட்டுத் தானும் இறுதியில் அழிந்து விடும். முதிர்ந்த கர்மயோகி பெறும் இன்பம் எல்லையற்றது. அவருடைய மிகவுயர்ந்த நிலையையும் அவருடைய ஆன்மீகப் பேரானந்தத் தையும் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது.

புத்தர் பெருமான், சங்கராச்சாரியார் போன்ற புராதனமான கர்மயோகிகள் ஆற்றியுள்ள அளவு கடந்ததும் மிக மேலானதுமான பணியைப் பாருங்கள். அவர்களுடைய பெயர்கள் பலதலை முறையினரால் வழங்கப்பட்டு வருகின்றன. அவர் களை மக்கள் இன்னமும் மறக்காமல் நினைவில் வைத்துக் கொண்டுள்ளனர். உலக முழுவதுமுள்ள மக்கள் அவர்களைப் போற்றி வணங்குகிறார்கள். அவர்கள் பணியில் எள்ளளவாவது தன்னலத்தை நாம் காண முடியுமா? மற்றவர்களுக்குத் தொண்டு செய்யவே அவர்கள் உயிர் வாழ்ந்தார்கள். அவர் களைத் தன்னல மறுப்புக்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம்.

பரந்த மனம் படைத்தவனாக இரு. உன் உள்ளத்தை தூய்மைப்படுத்து. கர்மயோகத்தின்

உண்மையான உணர்வில் வாழ்க்கை நடத்து. வாழ்க்கையின் உண்மையான நோக்கத்தையும் இலட்சியத்தையும் அடைவதற்காகவே ஒவ்வொரு கணமும் வாழ்வாயாக. அப்பொழுதுதான் கர்ம யோகத்தின் உண்மையான சிறப்பு உனக்கு விளங்கும். மனித குலத்துக்குத் தொண்டு செய்து அவர்களிடையே அமைதி, பேரின்பம், ஞானம் ஆகியவற்றைப் பரப்பிய புகழ் பெற்ற கர்மயோகி களின் உதாரணங்களை உனக்கு வழிகாட்டியாக வைத்துக் கொள்.

## 9. உடல் நலமும் யோகமும்

உடல் நலம் என்றால் என்ன? கப, வாத, பித்த மென்னும் மூன்று நாடிகளும் உடலில் சமநிலையில் இருப்பதைக் குறிக்கிறது. அப்பொழுது மனமும் மற்ற உறுப்புக்களும் இணைந்து சீராக வேலை செய்வ தால், வாழ்க்கையில் தான் ஆற்ற வேண்டிய கடமைகளை வசதியுடனும் எளிமையாகவும் செய்து முடித்து, மனிதன் அமைதியும் ஆனந்தமும் அடை கிறான். நல்ல ஜீரண சக்தியும், பசியும், இயல்பான சுவாசமும், தேவையான அளவு நல்ல இரத்தமும், உறுதியான நரம்புக்கட்டும், அமைதியான மனமும், நலமான உடலில் நலமான மனமும், சுத்தமான பெருங்குடலும், நல்ல இயல்பான நிலையில் சிறுநீரும், சிவந்த கன்னங்களும், பிரகாசமான முகமும் சுடர்விடும் கண்களும் பொருந்திய நிலையே உடல் நலத்தைக் குறிக்கும். அந்த நிலையில் ஒருவன் குதித்தும் ஆடியும் பாடியும் சிரித்தும் மகிழ்ந்தும் இன்பத்தோடும் மகிழ்ச்சியோடும் இங்குமங்கும் ஓடித்திரிகிறான். சரிவர சிந்தித்துப் பேசியும், சுறு சுறுப்புடனும், விரைவாகவும், விழிப்புடனும் செயலாற்றவும் முடியும் நிலையே அது. இந்த

விரும்பத்தக்க நல்ல உடல்நிலையைப் பெறுவதற்கு எல்லோரும் பெரிதும் விரும்புகின்றார்கள்.

நல்ல உடல்நிலையைப் பெற்றிருப்பது உண்மையில் ஒரு வரப் பிரசாதம் அல்லது பெரும் பேறு ஆகும். வயிற்று வலியால் சாப்பிட முடியாமலும் வாத நோயினால் நடக்க முடியாமலும், பார்வைக் குறைவினால் அழகிய இயற்கைக் காட்சிகளைக் காண முடியாமலும், ஆண்மைக் குறைவினால் உடலுறவு கொள்ள முடியாமலும் இருக்கும் ஒரு மனிதன் அளவு கடந்த செல்வமும் சொத்துக்களும் பெற்றிருந்தாலும் அவற்றால் இவ்வுலகில் என்ன பயனை அடைய முடியும்? ''ஒருநாள் மட்டும் எனக்கு உடல் நலத்தைக் கொடு. மாமன்னர்களுடைய ஆடம்பர வாழ்க்கையும் தோற்றுப்போகும்படி நான் வாழ்ந்து காட்டுகிறேன்,'' என்று ஒரு சிறந்த சிந்தனையாளர் கூறுகின்றார். இந்த உலகம் முழுவதற்கும் இறைவனாக இருந்தபோதிலும், உடல் நலமில்லாமலிருந்தால் அது மிகவும் வருந்தத் தக்க நிலையாகும்.

தான் முற்பிறவிகளில் செய்துள்ள நல்ல கர்மங்களுக்குத் தக்கபடியே ஒரு மனிதன் இப்பிறவியில் உடல் நலத்தை அனுபவிக்கிறான். முற்பிறவிகளில் போற்றத்தக்க செயல்களைச் செய்திருப்பவனும், தன்னிடமுள்ள பொருள்களைப் பிறரோடு பகிர்ந்து கொண்டு வாழ்ந்தவனும், ஏழைகளுக்கும் தேவையுள்ளவர்களுக்கும் உதவி செய்தவனும், வழிபாடு, தியானம், யோகப் பயிற்சிகள், பிராணாயாமம் ஆகியவற்றைச் செய்தவனும் ஆகிய ஒருவன் இப்பிறப்பில் நல்ல உடல் நலத்தைப் பெறுகிறான். காரண காரிய தத்துவம் எப்பொழுதும் நிலையானது, அதை யாராலும் மாற்றமுடியாது.

இவ்வுலகத்தில் ஒரு மனிதன் அடையக்கூடிய மிகப்பெரிய பேறு எது? ஆன்மீகத் தெளிவு.

அதைப் பெறுவதால் ஏற்படும் பயன்களும் நன்மைகளும் என்ன? அதைப் பெற நாம் ஏன் முயலவேண்டும்? ஆத்ம ஞானம் அல்லது ஜீவன் பிரம்மத்தோடு ஒன்றுபடுவதைப்பற்றி உணர்வது தான் நம்மை பிறப்பிறப்பாகிய சுழலினின்றும், அதன் விளைவுகளாகிய நோய், மூப்பு, துன்பம், வருத்தம், துயரம் மற்றும் பல தீங்குகள் ஆகியவைகளினின்றும் காப்பாற்றும். ஆத்ம ஞானம் ஒன்று தான் உனக்கு தூய்மையான பேரானந்தம், மேலான அமைதி, உயர்ந்த ஞானம், அழிவற்ற அமரநிலை ஆகியவைகளை அளிக்கவல்லது.

அடுத்த கேள்வி என்னவென்றால் ''நாம் ஏன் நல்ல உடல்நலமுள்ளவர்களாக இருக்கவேண்டும்?'' நேர்மை, செல்வம், ஆசைகள், விடுதலை அல்லது மோட்சம் ஆகியவைகளைப் பெறுவதற்காக நாம் உடல் நலத்தைப் பெற்றவர்களாக இருக்க வேண்டும். நல்ல காரியங்களைச் செய்தால் உனக்குப் பொருள் கிடைக்கும். நீ உலக இன்பங்களை அனுபவிக்கலாம். ஆன்மீக ஞானத்தை அடைய முயலலாம். உடல் நலமின்றி எதையும் பெற முடியாது. உடல் நலமில்லாவிட்டால் தொண்டு அல்லது நிஷ்காம்ய கர்மயோகத்தைச் செய்ய முடியாது; பிராணாயாமம் அல்லது ஆசனங்களைச் செய்ய முடியாது. அதன் காரணமாகத்தான் மறைநூல்கள் இவ்வுடம்பை, 'சம்சாரசாகரம்' என்னும் இவ்வாழ்க்கையாகிய கடலைக் கடப்பதற்குரிய படகு என்றும், அறச் செயல்களைப் புரிந்து மோட்சம் அல்லது விடுதலையைப் பெறுவதற்குரிய ஒரு கருவி என்றும் கூறுகின்றன. ''உடல் நலம் தான் இவ்வுலகத்தில் மற்றெல்லாவற்றையும் விட மிகச் சிறந்தது,'' என்று சரஹ சம்ஹிதை என்ற நூலில் சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம்.

கர்மயோகத்தை மேற்கொண்டு ஆத்ம ஞானத்தை அடைய விரும்பும் ஒருவர் உடல், மனம் ஆகிய இரண்டையும் பாதிக்கும் நோய்களினின்றும் விடுபட்டிருக்க வேண்டும். யோக சாஸ்திரத்தின் படி உடலுக்கு உண்டாகக் கூடிய நோய்கள் எல்லா வற்றுக்கும் மனநலமற்ற நிலையில் உண்டாகும் மன நோய்கள்தாம் காரணம். மேலை நாட்டிலுள்ள உளவியல் நிபுணர்களும் இதையே கூறுகிறார்கள். ''உடல் நோய்களுக்கு எல்லாம் வெறுப்பு, கோபம், கவலை, மனச் சோர்வு ஆகிய உணர்ச்சிகள்தாம் காரணமாக இருக்கின்றன. இவைகள் மனதை அரித்து, அதனால் உடல் பாதிக்கப்படுகிறது. உடலிலுள்ள உயிரணுக்களை அழித்து, பலவகை யான நோய்களை உண்டாக்குகின்றன,'' என்று அவர்கள் கூறுகிறார்கள்.

கர்மயோகத்தைப் பயில விரும்பும் ஒருவருக்கு ராஜயோகம், உளநூல், ஆயுர்வேதம், உடல்நூல், குடும்ப வைத்தியம், சுகாதாரம், சாங்கியம், வேதாந்தம் ஆகியவற்றில் அடிப்படை அறிவாவது சிறிதளவு இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அதிக வேலையை அவரால் எளிதாகச் செய்ய முடியும். அதைத் தவிர மனத்தின் இயல்பு, பழக்க வழக்கங்கள், அதன் சட்டதிட்டங்கள் ஆகியவற்றை யும் அவர் அறிந்திருக்க வேண்டும். அதனால் எப்போதும் மன அமைதியுடனும், மன நலத் துடனும் இருக்க முடியும். குழப்பமடைந்த மனதோடு எவராலும் அமைதியாக வேலை செய்ய முடியாது. குழம்பிய மனம் உடலின் மூன்று நாடி களையும் பாதித்து அதன் விளைவாகப் பல நோய்கள் ஏற்படக் காரணமாகும். இதுதான் ஆயுர் வேதத்தின் கருத்து. இது ராஜயோகத்தில் கூறப் பட்டுள்ள கருத்துக்கும் மேலை நாட்டு உளவியல் அறிஞர்கள் கூறும் கருத்துக்கும் ஒத்துள்ளது. கபில

முனிவருடைய சாங்கிய தத்துவம் கற்ற ஒருவரால் இந்தப் பிரபஞ்சத்தின் விதிகளைப் பற்றியும் உலக நடவடிக்கைகளைப் பற்றியும் அறிந்து கொள்ள முடியும். சோதிடக் கலையில் அடிப்படை அறிவும் அவருக்கு மிக்க உதவி செய்யும். பூமி சூரியனைச் சுற்றிச் சுழல்வதால் பருவ காலங்கள் ஏற்படு கின்றன. அதனுல் வானவெளியில் ஏற்படும் மாறுதல்கள் மனிதனின் உடலைப் பாதிக்கின்றன. கோள்களால் மனிதன் உடலும் மனமும் பாதிக்கப் படுகின்றன. அவைகள் இருக்கும் இடங்களுக்கும் நிலைகளுக்கும் தக்கவாறு மனிதனுக்கு நல்ல பலன் களையோ, தீய பயன்களையோ கொடுக்கின்றன. சோதிடக் கலையில் சிறிதளவு ஞானமுள்ளவன் தன்னைப் பாதிக்கும் நிலையிலுள்ள கோள்களால் ஏற்படக் கூடிய தீய விளைவுகளைத் தவிர்த்துக் கொள்ளலாம்.

ஒவ்வொரு கணமும் வானவெளியிலுள்ள பல் வேறு பொருள்களால் ஏற்படும் அலைவுகள் மனித மனத்துள் நுழைந்து பல்வேறு விளைவுகளை உண்டாக்குகின்றன. இந்த உடல் பிரபஞ்சத்தின் ஒரு பகுதி. மனமும் அவ்வாறே. எனவே பிரபஞ்சம் என்று சொல்லப்படுவது மனம்தான். ஒரு மனிதனின் மனம் மற்றவர்களுடைய எண்ணங் களாலும், கருத்துக்களாலும் பாதிக்கப்படுகின்றது. மனிதர்கள் அனைவருக்கும் தனிப்பட்ட எண்ணங்கள் இருக்கின்றன. கர்மயோகி ஒருவருக்கு இந்த மாதிரி தனக்கு வெளியேயுள்ள எண்ணங்களை எதிர்த்துச் செயல்பட அளவுகடந்த வலிமை தேவைப்படுகிறது. மனவுறுதியும் அவனுக்கு வேண்டும்; பொறுமையும், விடாமுயற்சியும் கூட அவனுக்குத் தேவை. இருபது முறை தோற்றுப் போனுலும், மனவுறுதியோடு அட்டையைப் போல் விடாப் பிடியாக, பிடிவாதமான உள்ளத்துடனும்,

அளவு கடந்த பொறுமையுடனும் தன் வேலையை விடாமல் பற்றிக் கொள்ள வேண்டும். அப்போது தான் முடிவில் முழுமையான வெற்றி கிடைக்கும். அதன் விளைவாக, ஆன்மீக வெற்றி, ஆன்மீக விடுதலை ஆகியவற்றுடன் களத்திலிருந்து வெளிப் படுவான்.

பிரபஞ்சத்தின் தோற்றம், மனம் எவ்வாறு உண்டாகிறது, செயல் உறுப்புக்களும் உணர்வு உறுப்புக்களும் எவ்வாறு உண்டாகின்றன, அடிப் படை ஆதாரமான மூலப் பொருள்கள் எவை, 'மகத்தத்வம்' என்றால் என்ன, புருஷன் என்றால் என்ன, பிரகிருதி என்றால் என்ன, மூவகைக் குணங் கள் எவை, அவை எவ்வாறு செயல்பட்டு மனிதனைப் பாதிக்கின்றன, அவனுடைய உடல் நலத்தையும், மனநிலையையும் அவைகள் எவ்வாறு பாதிக்கின்றன என்பவைகளைப் பற்றி சாங்கிய சாஸ்திரத்திலிருந்து நீ அறிந்து கொள்ளலாம். முடிவில் அது ஆன்மா வைப் பற்றிய ஞானத்தைப் பெற உனக்கு உதவும். சாங்கிய யோகமும் பதஞ்சலி யோகமும் ஒன்றுக் கொன்று நிறைவு செய்பவை. வேதாந்தம் என்பது சாங்கியத்தை விரித்துக் கூறி நிறைவு பெறச் செய்வதுதான்.

உடல் நலத்தையும், நல்வாழ்வைப் பற்றியும் கூறப்பட்டுள்ள விதிகளைத் தவறாது அனுசரிப்பதால் நல்ல உடல் நலத்தைப் பெற்று அதை நிரந்தரமாகப் பேண முடியும். எளியதும், சத்துள்ளதும், எளிதில் ஜீரணிக்கக் கூடியதுமான உணவை உட்கொள்வ தாலும், தூய காற்றைச் சுவாசிப்பதாலும், உண்பதிலும், குடிப்பதிலும் உடலுறவிலும் அளவோடிருப்பதாலும், உடல் நலத்தைக் காப்பாற்றலாம். ஜெபம், தியானம், பிரம்ம சரியம், இயமம், நியமம், நேர்மையான எண்ணங் கள், ஒழுக்கம், பேச்சு செயல் ஆகியவற்றைப் பயிலு

வதாலும், ஆன்மீக விசாரணையாலும், சிந்தனைகளை மாற்றி அமைத்துக் கொள்வதாலும், இன்பமான எண்ணங்களில் மனதை நிலை நிறுத்துவதாலும், மனதுக்கு உற்சாக மூட்டி மகிழ்விப்பதைப் பழகு வதாலும் மன நலத்தைப் பெறலாம்.

உலகத்தவரின் நல்வாழ்வுக்காகவும், நம்முடைய முன்னேற்றத்துக்காகவும் நாம் அனைவரும் தன்னலங் கருதாமலும், வேறுபாடில் லாமல் இணைந்தும், ஒற்றுமையுடனும் பணி செய் வோமாக! தன்னலமற்ற தொண்டு செய்தும், வேதங்களைப் படித்துக் கொண்டும், சாத்வீக குணங் களை வளர்த்துக் கொண்டும் இயல்பான இவ்வுலக வாழ்க்கையாகிய நூறு ஆண்டு காலம் வாழ்வோ மாக! பிரம்ம ஞானத்துடன் பிரகாசித்துக் கொண்டு, மகிழ்ச்சி, அமைதி, பேரானந்தம், ஞானம் ஆகியவற்றை இவ்வுலகத்திலுள்ள மூலை முடுக்குகளிலெல்லாம் பரவச் செய்வோமாக!

## 10. கர்மயோகத்தின் இரகசியம்

பற்று என்பது மாயையின் முதல் குழந்தை. இறைவனின் தெய்வீக விளையாட்டு இந்தப் பற்று தலின் ஆற்றலால் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. குடிக்காத மனிதன் தீயவர் களுடன் நட்பு ஏற்படும் போது சிறிதளவு சாராயத்தை ருசி பார்க்கிறான். அதனால் சாராயத் தினிடம் ஏற்படும் பற்றின் காரணமாக பெருங் குடிகாரனாகவே மாறி விடுகிறான். புகை பிடிக்கும் பழக்கமில்லாத ஒருவன் ஒரு முறை புகைத்துப் பார்த்தவுடன் அதன் மீது ஏற்படும் பற்றுதல் காரணமாக மிக அதிக அளவில் புகை பிடிப்பவனாக மாறி விடுகிறான். நம் மனதுக்குள் விளக்கெண் ணெய், கோந்து, மிருகக் கொழுப்பு, வேலம்பிசின்,

தாவரக் கொழுப்பு மற்றும் இவ்வுலகத்திலுள்ள பசையுள்ள பொருள்களெல்லாம் கலந்து உருவாகிய பசை போன்ற பொருள் ஒன்று இருக்கிறது. இந்தக் கலவையின் உதவியால் எல்லாப் பொருள்களும் மனதோடு நன்ருக ஒட்டிக் கொள்கின்றன. ஆகை யால் இந்தப் பற்று மிகவும் உறுதியாக இருக்கிறது. மனிதனுல் இதைத் தவிர்க்க முடிவதில்லே.

மனேவி, சொத்து, சுகம் ஆகிவற்றின் மீது மனிதனுக்கு எப்போதும் ஆசை இருக்கிறது. இந்த ஆசையால் தன்னலம் அதிகரிக்கிறது. தன்னலம் காரணமாகப் பற்று ஏற்படுகின்றது. எங்கு பற்று இருக்கின்றதோ அங்கு ''நான்'', ''எனது'' என்ற உணர்வுகள் இருக்கின்றன. இந்த மாயச்சக்கரம் முழுதும் சுழலத் தொடங்குகிறது. இப்பொழுது மனிதன் அடிமையாகிவிடுகிருன். அவனுடைய கைகள், முழங்கால்கள், கால்கள் ஆகியவை உறுதியான இரும்புச் சங்கிலிகளால் பிணிக்கப்பட்டது போலாகின்றன. ஒரு சிலந்தி யைப்போலவும், பட்டுப் புழுவைப்போலவும் சிக்கலில் தானே மாட்டிக்கொள்கிருன். பற்றின் காரணமாக அவனே உண்டாக்கிக் கொண்ட துன்பம் தான் இது.

''என் மனேவி, என் மகன், என் வீடு'', என்று ஒருபொழுதும் சொல்லாதே. இவ்வுலகிலுள்ள துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் பற்றுதான் காரணம். மனதைக் கவனமாக கட்டுப்படுத்த வேண்டும். பழைய பழக்கங்கள் உள்ளே நுழையப் பார்க்கும். அவைகளே வேரோடு களேந்துவிடு. பற்றற்ற வாழ்க்கையை மேற்கொள். பிரம்மானந்த பேரானந்த பேருலகை அடைவதற்குரிய சரியான திறவுகோல் இதுதான்.

கர்மயோகம் ஒரு மனிதனே சிறப்பான மிகவுயர்ந்த நிலேக்கு உயர்த்துகிறது. எனவே

அவன் பொறுமையுடன் வேலை செய்யவேண்டும். கர்மயோகத்தில் அடிப்படைப் பயிற்சி இல்லா விட்டால் தியானத்திலோ, சமாதியிலோ ஈடுபட முடியாது. பற்றில்லாமல் வேலை செய்வது கடின மானது என்பதில் ஒரு சிறிதும் சந்தேகமில்லை. அது உண்மையில் மிகவும் கடினமானதுதான். ஆனால் பொறுமையும் மனவுறுதியும் உள்ள ஒருவருக்கு அது எளிதாகவும், இன்பமானதாகவும் இருக்கும். முடிவான பேரானந்தமும் அமர நிலையும் தேவையானால், அதை எப்படியும் செய்துதானாக வேண்டும். ஒவ்வொருவரும் இப்பொழுதில்லா விட்டாலும், ஐநூறு பிறவிகளுக்குப் பிறகாவது அதைச் செய்துதான் ஆகவேண்டும். எனவே அதை ஏன் இப்பொழுதே செய்து முடிக்கக் கூடாது? ஆகையால் உன் பிறவிச் சுழலை இப்போதே முடித்துக் கொண்டு அந்த மேலான பரமானந்தத்தை இந்தக் கணமே ஏன் அனுபவித்து மகிழக்கூடாது? அது தான் புத்திசாலித்தனமானது.

உன் மகனுக்குத் தேவையான வேலை ஏதாவது செய்தால், அதற்கு பதிலாக அவனிடமிருந்து எதையாவது நீ எதிர்பார்க்கின்றாயா? அதேமாதிரி மற்றவர்களிடமும் பயன் எதுவும் எதிர்பாராமல் வேலை செய்யவேண்டும். இந்த உலகம் முழுவதும் உன் ஆன்மாதான் வியாபித்திருக்கிறது என்ற எண்ணத்துடன் உன் மனதை விரிவாக்கிக் கொள்ள வேண்டும். இந்த மாதிரி தன்னலம் கருதாமலும் விருப்பு வெறுப்பற்றும் இதுவரை பணியாற்றிப் பழக்கமில்லாத காரணத்தால், ஆரம்பத்தில் சிறிது மனவருத்தம் உண்டாகும். கர்மயோகத்திலுள்ள பேரானந்தத்தைச் சிறிதளவு சுவைத்துப் பார்த்த வுடன், அதை விட்டுவிட உனக்கு மனம் வராது. கர்மயோக்த்தின் ஆற்றல், உன்னை மேலும் மேலும் ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் அதிக அளவில்

வேலை செய்யத் தூண்டும். இந்தவுலக முழுவதும் இறைவனுடைய தோற்றமே என்று உணரத் தொடங்குவாய். உனக்கு அளவு கடந்த உள்ளவுறுதியும், மனத்தூய்மையும் உண்டாகும். கருணையும், பரிவும், தூய அன்பும் உன் உள்ளத்தில் நிறைந்திருக்கும். உன்னிடத்தில் தன்னல மறுப்பு எனும் தியாக உணர்வு அளவு கடந்து பெருகும். எல்லாவகையான தன்னல உணர்வும் அழிந்து விடும். பொதுவாழ்வில் நாட்டின் நல்வாழ்வுக் காகவும், துன்பத்தில் தோய்ந்துள்ள மக்கள் கூட்டத்துக்கும் உழைப்பவர்களுக்கு இதன் உண்மை நன்கு விளங்கும்.

புலன்வழி இன்பங்களைப்பற்றிய விருப்பமற்ற தன்மையே பற்றற்ற தன்மையாகும். இங்கும் மற்றெப்பொழுதும் எல்லாவகையான புலன்வழி இன்பங்களிலும் நாட்டங்கொள்ளாதிருத்தலே பற்றற்ற தன்மையைக் குறிக்கும். ஞானயோகம் அல்லது வேதாந்த நெறியைப் பின்பற்றும் ஒரு சாதகனுக்குரிய நால்வகை மார்க்கங்களில் (சாதன சதுஷ்டயம்) அதுவும் ஒன்றாகும். அது மனத்தில் ஏற்பட வேண்டிய நிலை தவிர வேறில்லை. மனம் தான் இந்த நிலையை உண்டாக்க வேண்டும். ''நான்,'' ''எனது'' என்பவை மனமாகிய பாம்பின் இரு விஷப் பற்கள். அவை இரண்டையும் பிடுங்கி எறிந்து விட்டால், மனமாகிய பாம்பு அடங்கிவிடும். பிறகு எந்தவிதமான கட்டுபாடு அல்லது பந்தமும் இருக்காது. மனம் தான் ''நான்'' ''எனது'' என்ற உணர்வுகளைத் தோற்று விக்கிறது. மனம் ஆன்மாவை உடலோடு ஒட்டிக் கொள்ளச் செய்வதால்தான், ''இந்த உடல்தான் நான்'' என்று மனிதன் நினைக்கிறான். மனைவி, மகன், சொத்துக்கள் ஆகியவைகளிடத்தில் பற்றை மனம்தான் ஏற்படுத்துகின்றது. இந்த இணைப்

பாகிய மனத்தை அழித்து விட்டால், நீ எங்கு வேண்டுமாஞலும் இருக்கலாம். தாமரை இலே மேல் தண்ணீர் போல, பற்றற்றும் அமைதியுடனும் நீ உலகத்தில் எங்கு வேண்டுமாஞலும் சுதந்திரமாக சுற்றித் திரியலாம். உன்னே எதஞலும் கட்டுப் படுத்த முடியாது. மனம்தான் எல்லா வகையான விஷமங்களேயும் செய்கிறது. ஒரு மனிதன் மிகப் பரந்த சாம்ராஜ்யத்தை ஆண்டாலும் கூட, பற்றற்றவஞகவே இருக்க முடியும்.

ஜனக மகாராஜனும், சூடாலே மகாராணியும் தங்கள் பொருள், இராச்சியம் ஆகியவற்றின் மீது எள்ளளவும் பற்றின்றியே வாழ்ந்தார்கள். ''மிதிலே நகர் முழுதும் எரிந்து போஞல் கூட, எனக்கு ஒன்றும் இழப்பு இல்லே,'' என்று ஜனகர் கூறுவார். அவருக்கு எத்தகைய உயர்ந்த மன நிலே! தன்னுடைய உண்மையான இயல்பிலேயே அவர் நிலேத்திருந்தார். அவரிடம் சிறிதளவுகூடப் பற்று இல்லே. சூடாலேயின் மன நிலேயும் ஜனகரைப் போன்றே இருந்தது சூடாலேயின் கணவஞன சிகித்வஜன் கோவணம் அணிந்து தண்ணீர் குடம் ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு காட்டில் வாழ்ந்தாலும், அவன் மனதில் நிறையப் பற்று இருந்தது. அவனுக்குத் தன் உடலின் மீதும் தண்ணீர் பாத்திரத்தின் மீதும் பற்றிருந்தது. ஒருவன் தன் குடும்பத்தையும், சொத்துக்களேயும் துறந்து சென்ருலும், அவனுக்கு சிறு கோவணத் துணி, ஒரு கோல், சிறிய குவளே, தன் உடம்பு ஆகியவற்றின் மேல் பற்று இருக்கும். அவன் இறக்கும் போது, அந்த தண்ணீர்க் குவளே அல்லது கோலின் உருவம் தான் அவன் மனக்கண் முன்னே தோன்றும். ஜடபரதனுக்கு ஒரு மானின் மேல் பற்று இருந்தது. எனவே அவன் சாகும் போது அவன் மனக்கண் முன் மானின் நினேவே வந்ததால்,

அவன் ஒரு மாளுகப் பிறக்க வேண்டி நேரிட்டது. பற்றின் ஆற்றல் அத்தன்மையது.

மக்கள் சாதாரணமாக ஒரு பரதேசியின் பற்றற்ற தன்மையை அவனுடைய வெளித் தோற்றத்தைக் கொண்டு தீர்மானிக்கிருர்கள். ஒரு பரதேசி கோவணம் மட்டும் அணிந்து, நீண்ட தாடியுடன் சடைமுடியும் அணிந்திருந்தால், அவனே முதல் தரமான முனிவர் என்று நினைக்கின்ருர்கள். ஆனுல் ஒரு யாத்ரீகன் அரை ரூபாய் நாணயத்தைக் கொடுக்கும் போது அதில் தன் பங்கைப் பெறுவதற் காக மற்ருெரு பரதேசியிடம் சண்டையிடுகிருன். அவன் மனம் ஆசையாலும் பற்ருலும் நிரம்பி இருக்கலாம். இல்லறத்தார் அவனைக் கண்டு ஏமாந்துவிடுகிருர்கள். ஆனுல் சில வேடதாரிகள் இரகசியமாகப் பணம் சேர்ப்பதற்காகத் துறவியைப் போல் வெளிவேடம் போடுகிருர்கள். அவர்கள் தலையில் சடைமுடி மிகவும் தந்திரமாக ஒட்டப் படுகிறது. காசியில் இரண்டு ரூபாய்க்கு இம்மாதிரி செய்யக்கூடிய திறமைசாலிகள் இருக்கிருர்கள். இம்மாதிரியான பிச்சைக்காரர்களின் வெளி வேடத் தைக் கண்டு இல்லறத்தார்கள் ஏமாராமல் கவனத் துடன் இருக்க வேண்டும். மனத் துறவுதான் வேண்டும். மனம்தான் முற்றிலும் துறவு கொள்ள வேண்டும். அப்போதுதான் உண்மையான பற்றற்ற நிலை இருக்கும்.

வேலையின் பலன் மேல் பற்றற்ற மனோநிலை உண்டாக இரண்டு வழிகள் இருக்கின்றன. தன் ஆராய்ச்சி, பிரித்தரியும் தன்மை ஆகியவற்றின் உதவியால் ''தான் சாட்சி மாத்திரமே'' என்ற மனப்பான்மையை வேதாந்தம் அல்லது ஞான யோகத்தைப் பயிலும் மாளுக்கன் வளர்த்துக் கொள்கிருன். ''மனதில் ஏற்படும் மாறுதல்களுக் கும், உடம்பின் பல் வேறு உறுப்புகளின் செயல்

களுக்கும் நான் ஒரு சாட்சி மாத்திரமே. உடல், உறுப்புக்கள், மனம், பிராணன் ஆகியவைகளி லிருந்தும் நான் வேறுபட்டவன். இயற்கைதான் எல்லாவற்றையும் செய்கிறது. குணங்கள் எல்லா வற்றையும் நடத்துகின்றன. இந்த உடம்பின் உள்ளியல்பும் மனமும் வேலை செய்கின்றன. ஐம் பொறிகளும் தத்தம் வேலைகளைச் செய்கின்றன. எனக்கு ஒரு வேலையும் இல்லை. எனக்கு எவ்வித மான பற்றும் இல்லை. நான் எதையும் பொருட் படுத்துவதில்லை. எனக்கு விருப்பு வெறுப்பில்லை. நான் எவ்விதமான பயனையும் கருதவில்லை. இந்த உலகம் பொய்யானது, நிலையற்றது. இந்த உலகில் உண்மையான இன்பம் எதுவுமில்லை. உலக வாழ்க்கையில் எண்ணற்ற குறைகள் இருக்கின்றன. உள்ளே இருக்கின்றதான, ஆன்மாவில்தான் மிக வுயர்ந்த நிலையான, அளவுகடந்த பேரானந்தம் இருக்கின்றது. உண்மையில் நான் சச்சிதானந்த ஆன்மா. புலனுறுப்புகள், மனம், பிராணன், உடல் ஆகியவைகளை உலகத்தின் நல்வாழ்விற்கான கருவிகளாகப் பயன்படுத்துவேன். இந்த உலகம் முழுவதும் என்னுடைய ஆன்மாதான் பரவி யிருக்கிறது. உலகம் என்னுடைய உடல். இந்த முழு பிரபஞ்சமும் என் வீடு. ஆன்மா செயலற்றது; அது எவ்வித செயலையும் புரிவதில்லை; அதற்குக் கை கால்கள் இல்லை; அது உலகியல் செயல்களைப்பற்றி எவ்விதமான அக்கரையும் கொள்வதில்லை. அவன் இம்மாதிரியே இடைவிடாது தன்னைப்பற்றி ஆராய்ச்சி செய்துகொண்டும், சிந்தித்துக் கொண்டும் தன்னுடைய இயல்பாகிய உணர்வி லேயே நிலைத்துவிடுகிறான். மேலே கூறிய வண்ணம் சிந்தித்துக்கொண்டு தன் செயல்களின் பயன்களை ஞானமாகிய தீயில் எரித்துவிடுகிறான்.

ஒரு பக்தன் தன்னையே இறைவன் திருவடிகளில் அர்ப்பணித்துக்கொள்கிறான். தன் செயல்கள் அனைவற்றையும் இறைவனுடைய பொன்னார் திருவடி களில் ஈஸ்வரார்ப்பணமாகச் செலுத்திவிடுகிறான். ''நான் இறைவனின் கைகளிலுள்ள ஒரு கருவியே. எனக்குத் தனிப்பட்ட விருப்பம் என்பதொன்றில்லை. இறைவனே! நான் உனக்குச் சொந்தமானவன். எல்லாம் உனதே! உன் விருப்பம்தான் நிறைவேறும். நீயே எல்லாம்! நீயே எல்லாவற்றையும் செய்கிறாய்! உன்னையன்றி ஒ ர ணு வு ம் அசையாது! நீயின்றி ஓரிலையும் அசையாது! என் உறுப்புக்கள் அனைவற்றின் மூலம் நீ வேலை செய்கிறாய். என் வாய் வழியே பேசுகிறாய். நான் செய்யும் செயல்கள், உண்ணும் உணவு எல்லாவற்றையும் உனக்கே அர்ப்பணிக் கிறேன். என் தவத்தையும் மற்றெல்லாவற்றையும் உனக்கே அ ர் ப் ப ணி க் கி றே ன். நீ விரும்பும் வண்ணமே எதையும் செய்கிறேன். நான் உனக் காகவே வாழ்கிறேன். உனக்காகவே பணி செய் கிறேன். நீயின்றி ஒரு கணமும் என்னால் வாழ முடியாது,'' என்று அவன் சொல்கிறான்.

வேலையினால் எந்தத் து ன் ப மு ம் நேரிடாது. ஆனால் வேலை மீது கொண்டுள்ள பற்றும், அதோடு நமக்குள்ள பிணைப்பும்தான் எ ல் ல ா வகையான கவலைகள், துன்பங்கள், துயரங்கள் ஆகியவற்றைக் கொடுக்கின்றன. ஆகவே க ர் ம யோ க த் தி ன் இரகசியத்தை உணர்ந்துகொண்டு, பற்றும் பிணைப் பும் இல்லாமல் வேலை செய்து, விரைவில் இறை யுணர்வு பெறுவாயாக. இ து த ா ன் ஞானம். செயல்களின் பயன்களை எரித்துவிடும் ''ஞானாக்னி'' என்பதும் இது தான்.

## 11. ஸ்வதர்மம் என்றால் என்ன?

வடமொழியிலுள்ள ''த ர் ம ம்'' என்னும் சொல்லுக்குச் ச ரி ய ா ன பொருளுள்ள சொல்

ஆங்கிலத்தில் எதுவும் காணப்படவில்லை. பொது வாக 'கடமை' அல்லது 'நேர்மை' என்று அதற்குப் பொருள் கூறப்படுகிறது. ''மோட்சம் அல்லது மேன்மையைப்'' பெற உ த வு ம் எந்தச் செயலும் 'த ர் ம ம்' எனப்படும். மனித இனத்துக்கு நல் வாழ்வைக் கொடுக்கக் கூடிய எந்தச் செ ய லு ம் 'த ர் ம ம்' ஆகும். ''உ த வு த ல்'' அல்லது ''காப்பாற்றுதல்'' என்னும் பொருளுடைய 'தரி' என்னும் சொல்லிலிருந்து பிறந்ததே ''த ர் ம ம்'' என்னும் சொல். ''காப்பாற்றுவது'' த ர் ம ம். தர்மத்திஞல் மக்கள் காப்பாற்றி உயர்த்தப்படுகிருர் கள். உதவிசெய்து, மேன்மை அடையச் செய்வதால் அது தர்மம் எனப்படுகிறது. உயிர்களே வாழச் செய்வது தர்மம்.

மனிதனுக்கு இ ய ல் பா க வு ள் ள குணங்களுக் கேற்ற முறையில் ஏ ற் ப ட் டு ள் ள கடமையே 'ஸ் வ த ர் ம ம்' எனப்படும். இறைவன், மதம், தர்மம் ஆகிய மூன்றும் ஒன்றை விட்டு ஒன்று பிரிக்க முடியாதபடி இணந்துள்ளவை. மனிதன் தன் இனத்துக்கும் வா ழ் க் கை முறைக்கும் ஏற்றபடி தர்மத்தைச் செய்து பரிணும வ ள ர் ச் சி பெற்று வாழ்க்கையின் இ று தி இலட்சியமாகிய ஆன்மீக ஞானத்தை அடைந்து அ த ஞ ல் எல்லேயில்லாப் பேரானந்தத்தையும், மேலான அமைதியையும், இடைவிடா இன்பத்தையும், உயர்ந்த ஞானத்தை யும், நிரந்தரமான தி ரு ப் தி யை யு ம், அமர நிலேயையும் அடைகிருன்.

மன அ மை தி யை யு ம் பேரானந்தத்தையும் கொடுக்கும் கீதையிலுள்ள முக்கியமான உபதேசம் ஒன்றை நினேவூட்ட விரும்புகிறேன்.

கண்ணபிரான் அர்ச்சுனனுக்குச் சொல்கிருர்:

மற்றவர்களுடைய தர்மம் உன்ஞல் நன்ருகச் செய்யப்பட்டிருந்தாலும், கு றை யு ள் ள தா க ச்

செய்யப்பட்டுள்ள உன்னுடைய ஸ்வதர்மமே மேலானது. ஸ்வதர்மத்தைச் செய்வதில் உயிரிழக்க நேரிட்டாலும் அதுவே மேலானது. மற்றவர் களுடைய தர்மம் எப்பொழுதும் அபாயம் நிறைந்தது.

இதில் மற்ருெரு முக்கியமான குறிப்பும் இருக் கின்றது. வாழ்க்கையின் எந்த நிலையில் இருந்த போதிலும் அந்த நிலைக்குரிய தர்மம் அல்லது கடமையை அதன் மேல் பற்றில்லாமல் சரிவரச் செய்தால் ஆன்மீக ஞானமும் விடுதலையும் பெற முடியும் என்பதை நன்கு உணர்ந்துகொள்ள வேண்டும். கீழே கொடுக்கப்பட்டுள்ள கதையை கவனத்துடன் பாருங்கள்.

ஒரு துறவி யோகம் பயில்வதற்காகக் காட்டுக்குச் சென்ருர். பன்னிரெண்டு ஆண்டு காலம் ஒரு குகையில் தங்கி பிராணுயாமம், கேசரி முத்திரை மற்றும் பல யோகப் பயிற்சிகளைச் செய்தார். அதனல் சில ஆற்றல்களையும் பெற்ருர். ஒரு நாள் அவர் மரத்தடியில் அமர்ந்திருக்கும்போது, அம்மரத்தின் மேல் ஒரு கிளையில் உட்கார்ந்திருந்த கொக்கு ஒன்று அவர் தலையின் மேல் எச்சமிட்டது. துறவி மிக்க சினத்துடன் கொக்கை உற்றுப் பார்த்தார். அவர் தலையிலிருந்து யோகத்தீ வெளிப் பட்டு கொக்கை எரித்துச் சாம்பலாக்கிற்று. தனக்கு ஏற்பட்டுள்ள இந்த வியக்கத்தக்க ஆற்றலைக் கண்டு துறவிக்கு மிகவும் மகிழ்ச்சி ஏற்பட்டது.

அதன் பிறகு சன்னியாசி வழக்கம் போல் நகரத்துக்குள் சென்று ஒரு வீட்டின் முன் நின்று ''நாராயண ஹரி'' என்று சொல்லி பிச்சை கேட்டார். அந்த வீட்டிலிருந்த பெண்மணி நோயாளியான தன் கணவனுக்குப் பணிவிடை செய்வதில் ஈடுபட்டிருந்தாள். அவள் தன் கணவனிடம் பக்தி நிறைந்த ஒரு பத்தினிப் பெண்.

அவள் பதிவிரதா தர்மத்தை அனுஷ்டித்து வந்தாள். அவள் சன்னியாசியின் குரலைக் கேட்டவுடன், ''துறவியே, சற்றுப் பொறுங்கள்'' என்றாள்.

அதைக் கேட்டவுடன் துறவிக்கு மிகவும் வருத்தம் ஏற்பட்டது. ''இந்தப் பெண்ணுக்குக் கர்வம் அதிகம் இருக்கிறது. என்னைப் பொறுத்திருக்கச் சொல்கிறாள். என்னுடைய யோக ஆற்றல் இவளுக்குத் தெரியவில்லை,'' என்று அவர் எண்ணத் தொடங்கினார்.

அவ்வாறு அவர் எண்ணத் தொடங்கியவுடன் அந்தப் பெண் கீழ்க்கண்டவாறு சொன்னாள்: ''துறவியே! இங்கே கொக்கு ஒன்றும் இல்லை. உங்களைப்பற்றி உயர்வாக எண்ண வேண்டாம். உங்களுடைய மன ஆற்றலைப்பற்றி வீண் கர்வம் வேண்டாம்.'' அந்தத் துறவிக்கு பெரும் வியப்பு ஏற்பட்டது. அவர் பொறுமையாகக் காத்திருக்க வேண்டியதாயிற்று. கடைசியில் அந்தப் பெண்மணி பிச்சை எடுத்துக்கொண்டு வெளியில் வந்தாள். துறவி அப்பெண்மணியின் அடிகளில் வீழ்ந்து வணங்கி, ''தேவி, என் எண்ணங்களைத் தாங்கள் எவ்வாறு அறிந்துகொண்டீர்கள்?'' என்று கேட்டார். அதற்கு அந்தப் பெண்மணி, ''சுவாமி! எனக்குப் பிராணாயாமமோ யோகக் கிரியைகளோ தெரியாது. நான் என் கணவனுக்குத் தொண்டு செய்துகொண்டிருந்ததால், உங்களைக் காத்திருக்கச் செய்துவிட்டேன். அவர்தான் என் இறைவனும் குருவும் ஆவார். அவரைத்தான் வணங்குகிறேன். கோவிலுக்குப் போவதில்லை. மந்திரங்களும் சொல்வதில்லை. இரவு பகலாக அவருக்குத் தொண்டு செய்து அவர் சொல்லுக்கு அடிபணிந்து நடக்கிறேன். அவர் அடிகளைச் சுத்தம் செய்கிறேன். சாவித்திரி, நளாயினி, அனுசூயை முதலிய பத்தினிப் பெண்டிரைப் பின்பற்றி நடக்கிறேன்.

அவருக்குப் பின் தூங்கி முன் எழுகிறேன். அவர் தான் எனக்கு எல்லாம். இம்மாதிரி என் கணவருக்குத் தொண்டும் பக்தியும் கடமையும் செய்வதால் எனக்கு அறிவு ஏற்பட்டுள்ளது. என் மனம் தூய்மையானது. எனவே உம் எண்ணங்களை என்னுல் அறிய முடிகிறது. இதுதான் என் ஆன்மீகப் பயிற்சியின் இரகசியம். இன்னமும் அதிகம் தெரிந்துகொள்ள விரும்பினுல், பெரிய கடைத் தெருவில் இறைச்சி விற்பவன் ஒருவன் இருக்கிருன். அவன் உங்களுக்கு சில இன்றியமையாத சுவையான விஷயங்களைப் பற்றிச் சொல்லுவான். அதனுல் உங்களுக்கு மிக்க மகிழ்ச்சியும் பெரும் பயனும் உண்டாகும்'' என்று கூறினுள்.

உடனே துறவி அந்த இறைச்சி விற்பவனிடம் சென்ருர். கடையில் அவன் இறைச்சியை வெட்டிக் கொண்டிருந்தான். ''இந்த மனிதனிடமிருந்தா நான் சுவையுள்ளதும் பயனுள்ளதுமான விஷயங்களைத் தெரிந்துகொள்ளப் போகிறேன்? இவன் பேய் போன்றிருக்கிருன். இவன் பெரும் முரடனுக இருக்கிருன்,'' என்று எண்ணத் தொடங்கினுர். கடைக்காரன் அவர் எண்ணங்களை அறிந்துகொண்டு ''சுவாமி! அந்தப் பெண்மணி அனுப்பினுளா? அங்கே அமர்ந்திருங்கள். சற்று நேரத்தில் உங்களைக் கவனிக்கிறேன்,'' என்று சொன்னுன்.

தன்னுடைய வாடிக்கைக்காரர்களிடம் வியாபாரத்தை முடித்துக்கொண்டு, துறவியைத் தன் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு சென்ருன். அவரை வெளியே இருக்கச் சொல்லிவிட்டு, அவன் மட்டும் உள்ளே சென்று, தன் வயதான பெற்ருேருக்குப் பணிவிடை செய்யத் தொடங்கினுன். அவர்களைக் குளிப்பாட்டி, அன்புடன் உணவளித்து, படுக்கையில் இட்டபின் துறவியிடம் வந்து,

''சுவாமி, அடியேன் என்ன செய்ய வேண்டும், கட்டளை இடுங்கள்,'' என்றான்.

துறவி அவனிடம் வேதாந்தத்தைப் பற்றிச் சில கேள்விகள் கேட்டார். அந்த இறைச்சி விற்பவன் மிகவும் அழகாகவும், துறவியின் மனத்தைக் கவரும் வகையிலும், ஆன்மா, மோட்சம், சாதனை, விடுதலை பெற்ற ஞானியின் நிலை ஆகியவற்றைப் பற்றிச் சொன்னான். துறவியின் ஐயங்களெல்லாம் அகன்றன. அவருக்குப் பெரும் வியப்பு ஏற்பட்டது. மிகவும் மகிழ்ச்சியோடு அவனைப் பார்த்து, ''நீ ஏன் இந்த இழிவான தொழிலைச் செய்கிறாய்? இந்த மாதிரி மேலான ஞானம் உனக்கு எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டார்.

''சுவாமி! தாங்கள் எண்ணுவது தவறு. எந்தத் தொழிலும் இழிவானதல்ல. எந்த வேலையும் இறைவனுக்குச் செய்யும் வழிபாடே. எந்த விதமான நோக்கமின்றியும், பயன் கருதாமலும் என் கடமையைச் செய்கிறேன். இரவும் பகலும் என் பெற்றோருக்குத் தொண்டு செய்கிறேன். இவ்வுலகில் அவர்கள்தாம் என் கடவுள். அவர்களை நாள் தோறும் வணங்குகிறேன். எந்த விதமான யோகப்பயிற்சியும் எனக்குத் தெரியாது. நான் படித்தவனல்ல. என் கடமையைச் சரிவர செய்கிறேன். இதுவே என் மதமும், யோகமும் ஆகும். இல்லறத்தானுடைய கடமைகளைச் செய்தும், என் பெற்றோருக்குத் தொண்டு செய்தும் அறிவைப்பெற்றேன். இது தான் என் ஆன்மீக ஞானம், யோகம் ஆகியவற்றின் இரகசியம்,'' என்று அந்த இறைச்சிக் கடைக்காரன் சொன்னான். அதைக் கேட்டு துறவி மன அமைதி அடைந்தார்.

உலகியல் மனம் படைத்த அப்பாவியான ஒருவன் இவ்வாறு சொல்வான்: ''நான் என் கடமைகளைச் செய்யவேண்டும். என் மகன்கள்

நான்கு பேரையும் பெண்கள் மூன்று பேரையும் படிக்கவைக்க வேண்டும். என் எஜமானனையும் திருப்தி செய்ய வேண்டும். அலுவலகத்தில் அதிக வேலை இருக்கின்றது. கணவனை இழந்த என் சகோதரிக்குப் பணம் அனுப்ப வேண்டும். என் குடும்பம் பெரியது. எனக்கு ஆறு சகோதரர்களும் ஐந்து சகோதரிகளும் இருக்கின்றார்கள். வழிபாடு, ஜெபம் செய்வதற்கும், மத சம்பந்தமான நூல்களைப் படிப்பதற்கும் எங்கு நேரமிருக்கிறது? மூச்சு விடுவதற்குக் கூட நேரமில்லை. ஓய்வே இல்லை. விடுமுறை நாட்களில் கூட நான் வேலை செய்ய வேண்டி இருக்கின்றது. அலுவலகக் கட்டுகளை வீட்டுக்குக் கொண்டு வந்து இரவு பதினொரு மணிவரை வேலை செய்கிறேன். சன்னியாசமோ, யோகமோ எனக்கு வேண்டாம். அலுவலக வேலையும், என் குடும்பத்தைப் பாராமரிப்பதுமே எனக்கு யோகம்.''

இதுவா கடமை? இது அடிமைத்தனமன்றி வேறில்லை. கொத்தடிமைதான் இது. இந்த மனிதன் தனக்குமேலுள்ள அலுவலரைப் பற்றியே ஒவ்வொரு கணமும் எண்ணிக் கொண்டு பயப்படுகிறான். கனவில் கூட தன் அலுவலக நண்பர்களையும் தன் அதிகாரியையும் சந்திக்கிறான். பேரேட்டில் கணக்குப் பதிவு செய்கிறான். இது கடமை உணர்வு அல்ல. அவனால் ஒரு நிமிடம் கூடப் பிரார்த்தனை செய்ய முடியவில்லை. கீதையில் ஒரு பாடலைக் கூடப் படிக்க முடியவில்லை. ஒரு மாதத்தில் ஒரு முறை கூட இறைவனைப் பற்றி எண்ணுவதில்லை. தேனீர் குடிக்கிறான், உண்ணுகிறான், எழுதுகிறான், உறங்குகிறான், இனவிருத்தி செய்கிறான். வாழ்நாள் முழுதும் இவ்வாறே கழிகிறது. இது தன்னலமுள்ள வேலையே தவிர கடமை அல்ல. கீழ்த்தரமான ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகவும், லாபத்துக்காகவும்

செய்யப்படும் வேலை தான் இது. பயன் கருதியும், கட்டாயத்தின் மீதும் செய்யப்படும் எந்த வேலையும் கடமை ஆகாது. அடிமை வேலையைக் கடமை என்று சொல்லக் கூடாது. பற்று, பேராசை, மோகம் இவற்றின் காரணமாகச் செய்யும் தன்னலமுள்ள வேலைகளை மேற்கொள்ளக்கூடாது. அதனால் பெருத்த அநீதியைத் தான் செய்ய நேரிடும். அது தனக்குத் தானே உண்டாக்கிக்கொள்ளும் மன விருப்பமில்லாத வேலையாகும்.

ஒரு எழுத்தரோ, அதிகாரியோ லஞ்சம் வாங்கிப் பொருள் சேர்க்கிறார். அவர் மனசாட்சி உறுத்தும்போது, சில பிராமணர்களுக்கு உணவளித்துவிட்டு, ''இன்று நான் ஒரு பெரிய கடமையைச் செய்துவிட்டேன். பதினைந்து பிராமணர்களுக்கு உணவளித்து ஆளுக்குக் கால் ரூபாய் கொடுத்து விட்டேன்,'' என்று சொல்கிறார். இதுதான் கடமை என்பது அவர் எண்ணம். மேலும் அவர் சொல்கிறார்: ''நான் ஏன் துறவியாகி யோகத்தைப் பயில வேண்டும்? நிறைய பொருள் சேர்த்து அதைக்கொண்டு தர்மம் செய்கிறேன். இதுதான் சிறந்த வாழ்க்கை.'' பாவம்! தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்கிறார்! இறைவன்தான் அவருக்கு நல்லறிவைக் கொடுக்கவேண்டும்.

## 12. மனிதனின் கடமைகள்

மனிதனுடைய வாழ்க்கையில் சில முக்கியமான கடமைகளும் பொறுப்புகளும் இருக்கின்றன. இவைகளைச் சரியான முறையில் செய்து ஒழுக்கத்திலும் ஆன்மீகத்திலும் அவன் வளர்ச்சி அடைய வேண்டும். இறைவனின் ஆணைப்படி நடந்து கொண்டு வாழ்க்கையை நடத்த வேண்டும். நடைமுறைக்கான விதிகளை வகுத்துக் கொண்டு தன்னு

டைய பொறுப்புகள் எந்த அளவுக்கு உள்ளன என்பதையும் கண்டறிய வேண்டும். மனு, யாக்ஞு வல்கியர் ஆகியவர்கள் வகுத்துள்ள நீதி முறையை நன்கு அறிந்திருக்க வேண்டும். அவைகளில் கூறி யுள்ளபடி நடந்துகொள்ள வேண்டும். அப் பொழுது தான் அவன் உண்மையில் மனிதனுக இருப்பான்.

ஒரு மனிதனுக்குத் தன் பெற்றோர், மக்கள், குடும்பத்தில் மற்றுமுள்ள உறுப்பினர்கள் ஆகிய அனைவருக்கும் செய்ய வேண்டிய கடமைகள் இருக் கின்றன. சமுதாயத்துக்கும் நாட்டுக்கும் அவன் செய்யவேண்டிய கடமைகள் இருக்கின்றன. அவன் தனக்கே செய்துகொள்ளவேண்டிய கடமைகளும் இருக்கின்றன. இறுதியாக இறைவனுக்கு அவன் செய்யவேண்டிய முக்கியமான கடமைகள் இருக்கின்றன. வாழ்க்கையில் இந்தக் கடமைகளை எல்லாம் அவன் தவருது செய்து முடிக்க வேண்டும். அப்பொழுதுதான் அவன் வாழ்க்கையில் முன்னேற்றம் பெறமுடியும். அப்பொழுதுதான் அவன் உண்மையான மன அமைதி பெறமுடியும்.

தனக்கு இந்த உடலைக் கொடுத்துள்ள தன் பெற்றோர்களுக்கு உண்மையாகவும் தெய்வீக உணர்வுடனும் தொண்டு செய்ய வேண்டும். பெற்றோரை இவ்வுலகில் கண்கண்ட தெய்வங் களாகவே வழிபட வேண்டும். இக் காலத்தில் படித்த மக்கள் தங்கள் பெற்றோரைச் சரிவர மதித்து நடப்பதில்லை.

ஒரு மனிதன் தன் மக்களை சரிவர வளர்க்க வேண்டும். அவர்களுக்கு வடமொழி, ஆங்கிலம், தொழில்துறை ஆகியவைகளில் சிறந்த கல்வி

அளிக்க வேண்டும். குழந்தைப் பருவத்திலிருந்தே அவர்களுக்கு ஆன்மீகத் துறையில் பயிற்சி அளிக்க வேண்டும். அவனுடைய வாழ்க்கைத் துணையாகிய மனைவியிடம் அன்பு செலுத்த வேண்டும். அவளில்லாமல் செய்யும் எந்த சமயச் சடங்கும் சரியானதல்ல. ஆன்மீகத் துறையில் அவள் தனக் குற்ற தோழி என்றே கருதவேண்டும். அவளுக்கு ஒரு மகன் பிறந்ததும் அவள் கணவனுக்குத் தாய் போன்றவளாகிருள். ''ஆன்மாவானது மகனுகப் பிறக்கிறது'', என்று ஸ்ருதிகள் கூறுகின்றன. தனக்கு மகன் பிறந்தவுடனேயே மனைவி என்ற உறவை அவன் மறந்துவிட வேண்டும். உடலுறவு கொள் வதை விட்டுவிட வேண்டும். கணவன், மனைவி இருவரும் ஆன்மீக வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும். கணவன் தன் மனைவியை இனவிருத்தி செய்யும் யந்திரம் என்று நினைக்கக் கூடாது. அதை விட மேலான ஆன்மீக நோக்கம் ஒன்று இருக்கிறது. அவள் தன் கணவனுடைய ஆன்மீக வளர்ச்சிக்கு உதவ வேண்டும். அவன் தேவைகளைக் கவனித்துக் கொண்டு, எல்லா வகைகளிலும் அவனுக்குச் சரிவர தொண்டு செய்ய வேண்டும்.

மனிதன் தன் இயல்புக்கும், விருப்பத்துக்கும், ஆற்றலுக்கும் ஏற்றபடி சமுதாயத்துக்குத் தொண்டு செய்ய வேண்டும். இது அவன் மனம் தூய்மை பெறுவதற்கு உதவும். ஊதியம் எதுவும் பெறுமல் நிஷ்காம்ய பாவத்தில் தொண்டு செய்யவேண்டும். எவ்விதமான பொருளையும் ஊதியமாக எதிர் பார்க்கக் கூடாது. நாட்டுப்பற்றைப் பெருக்கிக் கொண்டு, நாட்டுக்குத் தொண்டு செய்யவேண்டும். நாட்டுக்குத் தொண்டு செய்வது காளி தேவிக்குச் செய்யும் வழிபாடு. உண்மையில் அது அன்னை வழிபாடாகும்.

## 13. மூவகைக் குணங்கள்

கர்மயோகி மூவகைக் குணங்களையும் அவை செயல்படும் முறைகளைப்பற்றியும் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும். மூவகைக் குணங்களைப் பற்றியும் நன்கு அறிந்துள்ளவன் தன் வேலையை மிக நல்ல முறையிலும் சிறப்பாகவும் செய்யலாம்.

இயற்கை, சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களாலானது. சத்வம் என்பது சீர்மை, ஒளி, அறிவு, சமநிலை, நன்மை ஆகியவைகளைக் குறிக்கும். ரஜஸ் என்பது மோகம், வேகம், செயல் ஆகியவை யாகும். தமஸ்குணம் சோம்பல், செயலற்ற தன்மை, மயக்கம் ஆகியவைகளைக் குறிக்கும். பிரளயகாலத்தில் இம் மூவகைக் குணங்களும் சமநிலையில் இருக்கும். மீண்டும் சிருஷ்டியின்போது, ஒரு அலைவு உண்டாகிறது. அப்போது மூவகைக் குணங்களும் பிரபஞ்சத்தில் தோன்றுகின்றன. மூவகைக் குணங்களும் ஆன்மாவுக்கு பந்தத்தை உண்டாக்குகின்றன. சத்வம் என்பது நல்ல குணமானாலும், அதுவும் ஆன்மாவைக் கட்டுப்படுத்துகிறது. அது பொன் விலங்கு போன்றது. ரஜஸ் பற்றுக்கும், வாழ விரும்பும் ஆசைக்கும் ஆதாரமானது. அது வேலையின்மேல் பற்றை உண்டாக்குகிறது. தமஸ் குணம் மனிதனைக் கவனமின்மை, சோம்பல், ஊக்கம் ஆகியவற்றால் கட்டுப்படுத்துகிறது.

இந்த மூன்று இயல்புகளையும் தனித்தனியே பிரிக்கமுடியாது. எந்த ஒரு மனிதனும் முழுவதும் சத்வ குணத்தோடோ அல்லது ராஜஸ குணத்தோடோ அல்லது தாமஸ குணத்தோடோ இருப்பதில்லை. சில நேரங்களில் சத்வ குணம் மேலோங்கி நிற்கிறது. அப்பொழுது மனிதன் அமைதியாகவும், அடக்கத்துடனும் இருக்கிறான்.

ஓரிடத்தில் அமர்ந்து அமைதியாக உயர்ந்த ஆன்மீக மான எண்ணங்களுடனும், மதசம்பந்தமான நூல்களைப் படித்துக்கொண்டும், தெய்வீகமான விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டும் இருக்கிறான். சத்வம் மேலோங்கி நிற்கும்போது மற்ற இரண்டு குணங்களும் தற்காலிகமாக அடங்கி இருக்கின்றன. மற்றொரு சமயம் ராஜஸ குணம் மேலோங்கி நிற்கிறது. அச்சமயத்தில் அவன் வேலையில் ஈடுபடுகிறான். இங்குமங்கும் அலைகிறான். திட்டங்கள் தீட்டி, பல விஷயங்களை எதிர்நோக்குகிறான். பதவிக்கும், செல்வத்துக்கும், செயல் புரிவதற்கும் ஆசைப்படுகிறான். ராஜஸ குணம் ஓங்கி இருக்கும் போது, சத்வ குணமும், தாமஸ குணமும் அப்போதைக்கு அடக்கமுடன் இருக்கின்றன. வேறொரு சமயம் தாமஸ குணம் மேலெழுந்து செயல் படும்போது, அவன் மந்தமாக இருக்கிறான்; சோம்பலுடனும், செயலற்றும், தூக்க மயக்கத் திலும் இருக்கிறான். தாமஸ குணம் ஓங்கியிருக்கும் போது சத்வ குணமும் ராஜஸ குணமும் தற்காலிக மாக அடங்கியிருக்கின்றன.

ஒருசிலரிடம் சத்வ குணமும், வேறு சிலரிடம் ராஜஸ குணமும், மற்றும் சிலரிடம் தாமஸ குணமும் சிறந்து விளங்குகின்றன. உடலிலுள்ள வாயில் களின் வழியே ஞானவொளி வேகமாக வெளிப்படும் போது சத்வ குணம் அதிகரித்துள்ளதென்று அறிய வேண்டும். பேராசை, உடலை விட்டு ஆற்றல் வெளிப்படுதல், செயலை மேற்கொள்ளுதல் அமைதி யற்ற நிலை, ஆசை ஆகியவை ராஜஸ குணம் அதிகரிப்பதால் உண்டாகின்றன. மயக்கம், சோர்வு, தடை, கவனமின்மை ஆகியவைகளுக்குக் காரணம் மந்தநிலை அல்லது தாமஸ குணம். ஒருவன் இறக்கும் போது சத்வநிலை அதிகமிருந்தால், அவன் குற்றமற்ற ஞானிகளின் உலகிற்குச் செல்கிறான்.

இறக்கும் சமயத்தில் ராஜஸ குணம் மேலோங்கி இருந்தால், செயல் மீது பற்றுள்ளவர்கள்நடுவில் பிறப்பான். தாமஸ குணம் அதிகமிருக்கும்போது இறக்கும் ஒருவன் அறிவற்றவர்களுக்கு மகனுகப் பிறப்பான்.

சீர்மையும் குற்றமற்ற தன்மையும்தான் சத்வ குணத்தின் பயன். ராஜஸ குணத்தின் விளைவு துன்பம். தாமஸ குணத்தின் பலன் அறியாமை. சத்வ குணத்தில் நிலைத்திருப்பவர்கள் மேல் நோக்கி உயர்வு பெறுவார்கள். ராஜஸ குணத்திலிருப்பவர்கள் இடை நிலையிலிருப்பவர்கள். தீய இயல்புகளால் சூழப்பட்டுள்ள தாமஸ நிலையிலுள்ளவர்கள் கீழ்நோக்கி வீழ்ச்சியடைவார்கள்.

ராஜஸ குணம் தீவிரமடையும் போது சாத்வீகமாக மாறுகிறது. ராஜஸ குணத்தில் தீவிரமாக இருப்பவன் துறவு நெறியை மேற்கொள்வான். ராஜஸ குணத்தின் தன்மைக்கேற்ப அவன் செயல் புரிவதில் ஈடுபடுவான்.

"யோகத்தை நாடும் ஞானிக்கு, செயல் புரிவதுதான் நெறி; அந்த யோகியே யோகத்தில் அமரும் போது அமைதியான ஞானமே உற்ற நெறியாகும்" என்று பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளது.

தாமஸ குணத்திலிருந்து நேரடியாக சத்வ குணத்துக்குக் குதித்து விட முடியாது. தாமஸ குணத்தை முதலில் ரஜோ குணமாக முற்றிலும் மாற்றிவிட வேண்டும். அதன் பிறகு சாத்வீகத்தை அடையலாம். சத்வம் என்பது தீவிரமாகச் செயல் படுவதாகும். ஒரு யந்திரத்தில் மிகவும் வேகமாகச் சுழலும் சக்கரம் அசையாமலிருப்பதைப் போல் காணப்படுகிறது. அதேபோல் தீவிரமாகச் செயல் புரிந்து கொண்டிருக்கும் சாத்வீகமான ஒருவனும் தன் அடக்கம் அல்லது கட்டுப்பாட்டின் காரண

மாக அமைதியாகக் காணப்படுகிறான். சத்வ குண முள்ளவன் சுறுசுறுப்புடன் செயல்படுபவன். கண்ணிமைக்கும் நேரத்தில் மிகப் பெரிய செயல் களைக்கூட முடித்துவிடுவான். அவனுக்கு ஆழ்ந்த கவனம் அதிகம் உண்டு.

இயற்கைதான் செயல்கள் எல்லாவற்றுக்கும் காரணம். குணங்கள்தான் அவற்றை நடத்து கின்றன. அறியாமையின் காரணமாக உடல்தான் ஆன்மா என்று தவறாகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு கணத்திலும் மனிதனுடைய அகந்தை வெளிப்பட்டு, தலைதூக்கி நிற்கின்றது. மேகங்கள் அசைவதற்குச் சூரியன் தான் காரணம் என்று சொல்லப்படுவதைப் போல், உடல், புலனுறுப்புக்கள் ஆகியவைகள் செயல் படுவதற்கு ஆன்மாதான் காரணம் என்று தவறாகச் சொல்லப்படுகிறது. ஆனால் ஆன்மா எப்போதும் அமைதியாக இருக்கிறது. நடைபெறும் செயல்கள் அனைத்துக்கும் சாட்சியாக இருக்கிறது.

பகவத் கீதையில் சொல்லப்பட்டுள்ளதைப் பாருங்கள்.

''இயற்கையில் தோன்றியுள்ள இயல்புகள் காரணமாகத்தான் செயல்கள் யாவும் நடைபெறு கின்றன. அகந்தையால் மயங்கியுள்ள ஆன்மா, ''நான் செய்கிறேன்'' என்று நினைக்கின்றது. வலிமைமிக்க ஆயுதங்களையுடையவனே! இயல்புகள் வேலைகள் ஆகியவற்றின் வகைகளை உணர்ந்தவன், அவற்றின் சுழற்சியை நன்குணர்ந்து கொண்டு அவற்றின்மீது பற்று வைப்பதில்லை.

''மனவொருமைப்பாடுடையவன், எல்லா வற்றையும் நன்குணர்ந்துள்ள காரணத்தால், 'நான் எதையும் செய்யவில்லை' என்று எண்ண வேண்டும். பார்த்தல், கேட்டல், தொடுதல்,

முகர்தல், உண்ணுதல், நகர்தல், உறங்குதல், மூச்சு விடுதல், பேசுதல், கொடுத்தல், பிடித்தல் ஆகிய செயல்களைப்பற்றி, புலன்கள், புலனுணர்வுப் பொருள்களுக்கிடையில் செயல்படுகின்றன'' என்று எண்ண வேண்டும்.

''செயல்களையும், அவற்றைச் செய்யும் உணர்வையும், செயல்களுக்கும் அவற்றின் பயன் களுக்குமிடையே தொடர்பையும் உலகைப் படைத்த இறைவன் உண்டாக்கவில்லை. ஆனால் இயற்கை அதைச் செய்து முடிக்கிறது.''

''எவனொருவன் பிரகிருதிதான் எல்லா செயல் களையும் செய்கிறது, ஆன்மா செயலற்றிருக்கிறது'' என்று உணருகிறானோ அவனே உண்மையை அறிந்தவன்.

''அம்மாதிரி உணருகிறவன் இந்த குணங்களைத் தவிர வேறு எவரும் செயல்புரிவதில்லை என்றும், இந்தக் குணங்களுக்கும் மேலான ஒன்று இருக்கிறது என்றும் அறிவதால் என்னை வந்தடைகிறான்.''

மனமும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்கின்ற பஞ்சேந்திரியங்களும் பிரகிருதியின் சத்வ குணத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ளன. பிராணனும், நாக்கு, கைகள், கால்கள், பிறப் புறுப்புக்கள், மலத்துவாரம் ஆகியவை ராஜஸ குணத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள கீதையிலுள்ள வரிகளை சிந்தித்துப் பார்ப்பதால், இந்த மூவகைக் குணங்களை வென்றுவிட முடியும். ஆன்மா இந்த மூவகைக் குணங்களுக்கும் அப்பாற்பட்டது. நல்ல பண்புகளை வளர்த்துக் கொள்வதாலும், சாத்வீக உணவை உட்கொள்வதாலும், தர்மம் செய்வ தாலும், ஜெபம், தியானம், புலன் உறுப்புக்களைக் கட்டுப்படுத்தல் ஆகியவற்றாலும், மதசம்பந்தமான

நூல்களைப் படிப்பதாலும் ஒருவர் சாத்வீக குணங்களை வளர்த்துக்கொள்ளலாம். அதன் பிறகு சிந்தனை, ஆழ்ந்த தியானம் ஆகியவற்றின் மூலம் தன்னை ஆன்மாவோடு ஐக்கியப் படுத்திக்கொண்டு, சாத்வீக குணத்திற்கு அப்பாலும் மேலே செல்ல வேண்டும்.

இந்த உடலில் வசிக்கும் ஒருவன் எல்லா உடல்களும் தோன்றுவதற்கு ஆதாரமான இந்த மூன்று குணங்களையும் கடந்த பிறகு, பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு, துயரம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டு, அழிவற்ற அமிர்தமயமாகிய அமர நிலையை அடைகிறான். அவன் இந்த மூன்று குணங்களையும் கடந்துவிட்டதால், பகவத் கீதையில் கூறியுள்ள கீழ்க்கண்ட அடையாளங்களை உடையவனாகிறான்.

''ஒளி, செயல், மயக்கம் ஆகியவை தோன்றும்போது அவற்றை வெறுக்காமலும், அவை தோன்றாவிடத்து வேட்கையுறாமலும் இருக்கின்றான்.''

எவனொருவன் எதைப் பற்றியும் கவலைப் படாமலும், குணங்களால் கவரப்படாமலும், அவைகள் தீவிரமாகச் செயல் படுகின்றதை உணர்ந்து தன்னடக்கத்தோடு அசையாது இருக்கின்றானோ;

துன்பத்திலும் இன்பத்திலும் சமமாகவும், தன்னிலேயே (ஆன்மாவிலேயே) நிலைத்திருப்பவனும் ஒரு மண் கட்டி, ஒரு கல், ஒரு தங்கக்கட்டி ஆகிய மூன்றையும் சமமாகக் கருதுகின்றவனும், அன்பனிடமும் அன்னியனிடமும் சமமாக இருப்பவனும், உறுதியுடனிருப்பவனும், புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகிய இரண்டையும் ஒன்றாகக் கருதுகின்றவனும், மான அவமானத்தை நிகராகக் கருதுகின்றவனும்,

தோழனிடமும் பகைவனிடமும், ஒன்றாக இருப்பவனும் குணங்களைக் கடந்தவன் என்று சொல்லப்படுகிறான்.''

''மாறாத பக்தியால் என்னை வழிபட்டு, முக் குணங்களைக் கடந்துள்ள ஒருவன் பிரம்ம நிலையைப் பெறும் தகுதியை அடைகிறான்.''

## 14. கர்மேந்திரியங்கள்

கர்மேந்திரியங்களைப் பற்றி இங்கே விவரிப்பது மிகவும் பொருத்தமானதாகும். ஒரு கர்மயோகி கர்மேந்திரியங்களின் இயல்புகளையும் அவைகள் வேலை செய்யும் முறையைப்பற்றியும் விளக்கமாகத் தெரிந்து கொள்ள வேண்டும். பேச உதவும் வாய், கை கால்கள், பிறப்புறுப்பு, கழிவுறுப்பு, மலத் துவாரம் ஆகியவைகள் தாம் ஐந்து கர்மேந்திரியங் கள். உண்மையான புலனுணர்வுப் பொறிகள் உருவமற்ற நிலையில் இருக்கின்றன. அவைகள் நுண்ணியவை. அவை ஒவ்வொன்றுக்கும் இணைந்த தொடர்புள்ள பகுதிகள் (நரம்பு மையங்கள்) மூளையில் இருக்கின்றன. நாம் பார்க்கின்ற, வாய், கைகள், கால்கள், பிறப்புறுப்பு, மலத்துவாரம் ஆகியவை எல்லாம் வெளி உறுப்புகள் தான். புலன்கள் உண்மையில் அருவ நிலையிலுள்ள சூட்சும உடலில் அமைந்துள்ளன. அவைகள் ஐந்து போர் வீரர்களைப் போன்றவை. அவற்றின் படைத் தலைவன் மனம். மனம் தன் விருப்பத்தை நிறை வேற்றிக்கொள்ள விரும்பும் போது இவைகளிட மிருந்து வேலை வாங்குகிறது. மனம் இந்த ஐந்து உறுப்புகளோடும் ஒன்றுபட்டு வேலை செய்கிறது. மனம் ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவன். இந்த ஐந்து உறுப்புக்களும் அதன் வேலையாட்கள். அவை கள் தலைவனிட்ட கட்டளைகளை உடனுக்குடன்

நிறைவேற்றுகின்றன. மனத்தின் உண்மையான ஒத்துழைப்பில்லாவிட்டால் அவைகள் தனித்து வேலை செய்ய முடியாது. உண்மையில் செயல்கள் எல்லாவற்றையும் சிந்தித்து, திட்டமிட்டு, ஆலோசனை கூறுவது மனம்தான். தூங்கும்போது இந்த ஐந்து உறுப்புக்களும் மனத்திற்குள் மறைந்திருக்கின்றன. சமாதி நிலையிலிருக்கும்போது அவைகள் மனத்திற்குள் அடங்கிவிடுகின்றன.

புலனுறுப்புக்கள் தன் மாத்திரைகளின் ராஜஸப் பகுதியிலிருந்து தோன்றுகின்றன. அவைகள் பிராணனின் உதவியால் இயங்குகின்றன. பிராணனில்லாவிடில் அவைகளால் ஒரு கண நேரம் கூட இயங்க முடியாது. மனமாகிய கண்ணாடியில் உணர்வின் பிரதிபலிப்பாகத் தோன்றும் ஆன்மா தான் மனதின் இணைபிரியாத தோழன். செயலின் விளைவு இன்பமாயிருந்தாலும், துன்பமாயிருந்தாலும் அதுதான் அனுபவிக்கிறது.

இதைப்பற்றி கீதையில் சொல்லப்பட்டுள்ளது:

''வலிமைமிக்க ஆயுதங்கள் படைத்தவனே! செயல்களைச் செய்து முடிக்க சாங்கிய சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ள இந்த ஐவகையான காரணங்களையும் நான் சொல்கிறேன், கேள்!''

''இருப்பிடம் (உடல்), செய்பவன் (கர்த்தா), பலவிதமான இந்திரியங்கள், பல்வேறுவகைப்பட்ட செயல்கள், தெய்வம் என்ற ஐந்தும் காரணமாகின்றன.''

''மனம், மொழி, மெய் ஆகியவைகளால் மனிதன் சரியாகவோ அல்லது தவறாகவோ செய்யும் செயல் எதுவாயினும் அதற்கு இவ்வைந்தும்தான் காரணமாகும்''.

''இவ்வாறிருக்க எவனொருவன், அறிவின்மை காரணமாக, தனித்தியங்கும் ஆத்மாதான் செயல் படுகிறதென்று கருதுகின்றானோ அவன் உண்மை யைக் காண்பதில்லை.''

''அகந்தையற்றவனும், களங்கமற்ற அறிவுடையவனுமாகிய ஒருவன், இந்த மக்களைக் கொன்றாலும் கொலையாளி ஆகமாட்டான். தன் செயல்களுக்குப் பொறுப்புள்ளவனும் அல்லன்.''

கண்ணபிரான், ராதா, ருக்மணி, சத்ய பாமா ஆகியவர்களுடன் வாழ்ந்து, மக்களைப் பெற்றிருந் தாலும், அவர் நித்ய பிரம்மசாரி. அவர் தம்முடைய உண்மையான இயல்பிலே எப் பொழுதும் நிலைத்திருந்தார். அவர் தம் உடல், மனம், புலனுறுப்புக்கள் ஆகியவற்றினின்றும் பிரிந்து நின்று, சச்சிதானந்த பிரம்மத்துடன் ஒன்று பட்டிருந்தார். எனவேதான் அவர் பிரம்மசாரி என்று சொல்லப்பட்டார். துர்வாச முனிவர் நல்ல விருந்து சாப்பிட்டவுடன் தம் சீடர்களிடம் ''நான் ஒன்றும் உண்ணவில்லை. நான் முற்றிலும் பட்டினியாக இருக்கிறேன். இதை யமுனை நதியிடம் சொல்லுங்கள். அவள் உங்களுக்கு வழி விடுவாள். நீங்கள் படகில்லாமலே ஆற்றைக் கடந்து போகலாம்,'' என்று சொன்னார்.

விடுதலை பெற்ற ஞானிகள் தங்களை உடல், மனம் ஆகியவற்றோடு இணைத்துக் கொள்வதில்லை. அமைதியாகவும் செயலற்றும் உள்ள ஆன்மாவோடு தான் தங்களை ஐக்கியப்படுத்திக் கொண்டார்கள்.

தென்னிந்தியாவில் வாழ்ந்த திருவள்ளுவ முனிவரும் துர்வாசர் சொன்னது போலவே, தம் மனைவியை ஆற்றைக் கடந்து போகச் சொன்னார்.

அவரும் தம் கணவன் சொன்னது போலவே சொன்ன போது, ஆறு விலகித் தமக்கு வழி விட்டதைக் கண்டு வியப்படைந்தார். ஞானி களுடைய நிலே விவரிக்க முடியாதது; எண்ணிப் பார்க்க முடியாதது.

நியாய (தத்துவத்தில்) சாஸ்திரத்தில் ''ஞானம், இச்சை, பிரயத்தனம்,'' என்ற மூன்று சொற்களேப் பார்க்கலாம். 'ஞானம்' என்பது ஒரு பொருளேப் பற்றிய அறிவு. 'இச்சை' என்பது ஆசை. 'பிரயத்தனம்' என்பது அப்பொருளே அடைவதற்காகச் செய்யும் முயற்சி. முதலில் ஆன்மா ஒரு பொருளேப் பற்றி அறிந்து கொள்ளு கிறது. பிறகு அந்தப் பொருளே அனுபவிப் பதற்காக அடைய வேண்டும் என்ற ஆசை ஏற்படு கிறது. அதன்பின் அப்பொருளே அடைவதற்காகத் தீவிரமாக முயற்சி செய்கிறது. ஆசைதான் மனதைச் செயல் புரியுமாறு தூண்டும் சக்தி. புலனுணர்வுப் பொருள்களேப் பற்றி மனிதன் எண்ணுகிமுன். அவற்றின் மேல் அவனுக்குப் பற்றுண்டாகிறது. பற்றிலிருந்து ஆசை தோன்று கிறது. எண்ணம் தான் விறகு. ஆசை என்பது நெருப்பு. எண்ணத்தைத் தடுத்து நிறுத்திஞல், ஆசையாகிய நெருப்பு தாஞகவே அணேந்துவிடும். ஒரு விளக்கிலுள்ள எண்ணெய் தீர்ந்து விட்டாலோ அல்லது எண்ணெயை வடித்து விட்டாலோ, அந்த விளக்கு அணேந்து விடுகிறதல்லவா?

முதலில் பொருள்களிடம் கவர்ச்சி ஏற்படு கிறது. அதன்பின் பற்று ஏற்படுகிறது. கவர்ச்சி மறைந்துவிட்ட பிறகும் அந்தப் பொருளின் மேலுள்ள ஆசை நீடிக்கிறது. மேலும் வேண்டிய பொருள்களேத் தேர்ந்தெடுக்கும் ஆசையும் இருக் கிறது. இதை நீக்குவது மேலும் கடினமானது.

முதலில் பற்றை ஒழிக்கவேண்டும். அதன் பிறகு இந்த ஏக்கமும் தேர்ந்தெடுத்தலும் மெதுவாகத் தானே அழிந்துவிடும்.

ஆற்றல்களில் மூன்றுவகை இருக்கின்றன— எண்ண ஆற்றல், பேச்சாற்றல், செயலாற்றல். ஒரு கர்மயோகி உணர்ச்சிவசப் படக் கூடாது. கொந்தளித்துப் பொங்கிவரும் உணர்ச்சிகளையும், தூண்டுதல்களையும் அடக்கிவைக்க வேண்டும். அவற்றைத் தூய்மைப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் உண்மையில் பயனுள்ள வேலையைச் செய்ய முடியும். தேவையற்ற, பயனில்லாத, வீணை எண்ணங்களை அழித்துவிட வேண்டும். இதன் மூலம் தன்னுடைய ஆற்றல் வீணுகாமல் சேமித்து வைத்துக்கொள்ள வேண்டும். பயனற்ற எண்ணங்களால் மனிதனுடைய ஆற்றல் வீணுகிறது.

பயனற்ற பேச்சுக்களாலும், வம்புப் பேச்சுக்களாலும் கூட அதிக ஆற்றல் வீணுகிறது. ஒரு கர்மயோகி ஒவ்வொரு நாளும் இரண்டு மணி நேரமும், ஞாயிறு முதலிய விடுமுறை நாட்களில் ஆறு மணி நேரமும் மௌனம் அனுஷ்டிக்க வேண்டும். பேச வேண்டும் என்கிற தூண்டுதலை மௌனம் கட்டுப்படுத்தும். மௌனமாக இருக்கப் பழகியவன், பேசும்போது அளவோடு சொற்களைப் பயன்படுத்த முடியும். கோபத்தையும் பொய்மையையும் அவனல் அடக்க முடியும். அவனுக்கு உறுதியான உள்ளமிருக்கும். யந்திரத்தைப்போல முடிவில்லாமல் மிகவும் வேகமாகப் பேசக்கூடியவர்களும் இருக்கிறுர்கள். அம்மாதிரியானவர்களுக்கு கடுமையான தண்டனை மூன்று நாட்களுக்குப் பேசாமலிருக்கச் செய்வதேயாகும். அவர்கள்

செய்வதறியாமல் திகைத்துப் போவார்கள். அதிகம் பேசுபவன், எண்ணுவதும் செய்வதும் மிகக் குறைவு. அவன் மிகவும் அமைதியற்று இருப்பான். பேச்சு மனதை மிகவும் அலைக்கழிக்கும். பேச்சைக் கட்டுப்படுத்துவது உண்மையில் மனதைக் கட்டுப் படுத்துவதாகும். நாக்கில் கூரியவாள் இருக்கின்றது. ஒரு கடுமையான சொல் நீண்ட நாள் நட்பை முறித்து, சண்டையைத் தூண்டிவிட்டு இரத்தக்களரியில் முடியும். உலகிலுள்ள அமைதி யற்ற நிலைக்கு வீண்பேச்சு, வம்பு, வதந்தி, முதுகுக்குப்பின் அவதூறு செய்தல், பழிச்சொற் களைப் பரப்புதல் ஆகியவையே காரணம். பெண்கள் அதிகம் பேசுகிறார்கள். அவர்கள் தங்கள் வீட்டிலுள்ள அமைதியைக் கெடுக்கிறார்கள். மக்கள் நாள் தோறும் இரண்டு மணி நேரம் மௌனம் அனுஷ்டித்தால், உலகில் அமைதியை ஓரளவுக்கு நிலைநாட்ட அது உதவும்.

## 15. போலி கர்மயோகி

ஒரு மனிதன் கதராடை அணிந்து கதர்க் குல்லாயும் அணிந்து கொள்கிறான். கதரை முதன் முதலில் உடுத்தச் சொன்னவரைப்போன்ற தகுதி ஒன்றுகூட அவனிடம் இல்லை. அவன் அவருடைய அறிவுரைகளைக்கூடப் பின்பற்றுவதில்லை. தன்னலத் தியாகத்துக்கான அடையாளம் சிறிதுகூட அவனிடம் இருக்காது. ஒரு பெரிய அலமாரி நிறைய மில் துணிகளாகவே வைத்திருப்பான். பெயருக்கும் புகழுக்குமாகச் சிறிதளவு தர்மம் செய்து சில ஏழைகளுக்கு உணவளிப்பான். தானே சில பத்திரிகைகளில் தன்னுடைய தர்மச் செயல் களைப் பற்றி ஒரு பத்திரிகை நிருபர் எழுதுவது போல் எழுதுவான். பொதுக் காரியத்துக்காக ஒரு சிறு தொகையை நன்கொடையாக அளிப்பான்.

தன்னுடைய பெயர் பத்திரிகைகளில் வந்திருக்கிறதா இல்லையா என்று ஆவலுடன் தேடிப் பார்ப்பான். தன் பெயரை அவைகளில் பார்க்கின்ற வரையில் அமைதி அடைய மாட்டான். அம்மாதிரி இருக்கும் மனிதன் போலிக் கர்மயோகி எனப்படுவான். இம்மாதிரி கர்மயோகிகள் இப்பொழுது உலகில் ஏராளமாக இருக்கிறார்கள்.

ஒரு பெரிய நிலக்கிழார் அல்லது வட்டிக்குப் பணம் கொடுப்பவன் ஏழைகளின் இரத்தத்தை உறிஞ்சி பெரிய மாளிகையைக் கட்டுகிறான். தான் சேர்த்து வைத்திருக்கும் இலட்சக்கணக்கான பணத்தில் மிகச் சிறு பகுதியாகிய சில ஆயிரங்களைப் பல்கலைக் கழகத்துக்கு நன்கொடையாக அளிக்கிறான். சில ஆயிரங்கள் செலவழித்து ஒரு கோயில் கட்டிவிட்டு, அதன் முகப்பில் சலவைக் கல்லில் தன் பெயரைப் பெரிய எழுத்துக்களில் செதுக்கி வைக்கிறான். இது கர்ம யோகம் அல்ல. இது பெயரும் புகழும் பெறுவதற்காக அவன் ஆடம்பரமாகச் செய்யும் விளம்பரமாகும். ஆனால் நெற்றி வேர்வை நிலத்தில் விழப் பாடுபடும் சாதாரணத் தொழிலாளி தான் சம்பாதிக்கும் ஒரு சிறு தொகை முழுவதையும் சில நோயாளிகளுக்கும் பசியால் வாடும் மக்களுக்கும் தானம் செய்துவிட்டு, தான் பட்டினியால் வாடுகிறான். இதுதான் உண்மையான தன்னலத் தியாகம். இதுதான் உண்மையான கர்மயோகம்.

முற்காலத்தில் தென்னாட்டிலுள்ள மதுரையில் பாண்டிய மன்னர் ஆண்டு வந்தனர். ஒரு பாண்டிய மன்னன் சுந்தரேஸ்வரர் வழிபாட்டுக்காக இரண்டு லட்சம் ரூபாய் செலவு செய்தான். அதனால் மிகவும் கர்வமடைந்து இவ்வாறு எண்ணத் தொடங்கினான்: ''நான் சிவபெருமானுடைய

சிறந்த பக்தன். இறைவனுடைய வழிபாட்டுக் காகப் பெரிய தொகை செலவு செய்திருக்கிறேன். ஆயிரக்கணக்கான பிராம்மணர்கள், பிச்சைக்காரர் கள், ஏழைகள் ஆகியவர்களுக்கு உணவளித் திருக்கிறேன். பிராம்மண பண்டிதர்களுக்கு விலை யுயர்ந்த பரிசுகளை அளித்திருக்கிறேன். என்னைப் போல கடவுள் பக்தியுள்ள அரசன் வேறெவரும் இல்லை.'' அன்றிரவு சிவபெருமான் அவன் கனவில் தோன்றி ''அரசனே! உன்னுடைய கடவுள் நம்பிக்கை, தர்ம சிந்தனை, பக்தி ஆகியவைகளைப் பற்றி வீணுகக் கர்வம் கொள்ளாதே. நீ செய்வது எதிலும் எனக்குத் திருப்தி இல்லை. கர்வமிருக்கு மிடத்தில் பக்தியும் புனிதத் தன்மையும் இருக்காது. வைகை நதிக் கரையில் ஒரு சிறிய குடிசையில் வசிக்கும் என்னுடைய எளிய பக்தனை விறகு வெட்டியைப் போய்ப் பார். அவன் எனக்கு ஒவ் வொரு திங்கட்கிழமையும் அரிசிக் குறுணைக் கஞ்சியைச் சிறிதளவு பனை வெல்லத்தோடு படைக் கிறுன். உண்மையான பக்தி என்பது எதுவென்று அவனிடமிருந்து தெரிந்துகொள்'' என்று சொன்ஞர்.

அரசனுக்கு அதிக வருத்தமேற்பட்டது. அடுத்த நாள் காலை விறகு வெட்டியைச் சந்திப் பதற்காக அவன் குடிசைக்குப் போனுன். ''சிவ பெருமானை நீ எவ்வாறு வழிபடுகிறுய்?'' என்று அவனைக் கேட்டான்.

அரசனே! எனக்கு ஒரு நாளைக்கு இரண்டணு கூலி கிடைக்கிறது. என்னுடைய உணவுக்காக ஓரணு செலவழிக்கிறேன். மீதியில் ஒன்பது பைசாக்களைத் தர்மம் செய்துவிட்டு மூன்று பைசாக் களை தினந்தோறும் சேமித்து வைக்கிறேன். ஒவ் வொரு திங்கட்கிழமையும் அரிசிக்குறுணை, பனை

வெல்லம் ஆகியவற்ருல் சிறிது கஞ்சி தயார் செய்து அதைச் சிவபெருமானுக்குப் படைக்கிறேன். விறகு வெட்டிக் கொண்டிருக்கும் போது இடைவிடாது "சிவ! சிவ!" என்று சொல்லிக் கொண்டு இறைவனை நினைத்துக் கொண்டே இருக்கிறேன். இதுதான் நான் செய்யும் பக்தி. இதைத் தவிர வேறொன்றும் எனக்குத் தெரியாது," என்று அடக்கத்துடன் அவன் சொன்ஞன்.

விறகு வெட்டியின் அடக்கம், எளிமை, அன்புடைமை, பக்தி, தூய்மை ஆகியவற்றைக் கண்ட அரசன் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். அவனுக்கு ஒரு சிறிய வீட்டைக் கட்டிக் கொடுத்து, அவன் வாழ்நாள் முழுவதும் உணவுக்கு ஏற்பாடு செய்தான். விறகு வெட்டியின் வாழ்க்கையிலிருந்து நடைமுறைக்கான அநேக நீதிகளை அரசன் தெரிந்து கொண்டான். அதஞல் சிவபெருமானின் உண்மையான எளிய அடியவஞக மாறிஞன். அவனுடைய கர்வம், ஆடம்பரம், படாடோபம் ஆகியவை அவனை விட்டு நீங்கின.

"உன் வலது கை கொடுப்பது இடது கைக்குத் தெரியக் கூடாது," என்று இயேசுநாதர் கூறுகிருர். தொண்டு செய்யும் போது அடக்கமாயிரு. நீ இறப்பது யாருக்கும் தெரிய வேண்டாம். உன் பெயர் யாருக்கும் தெரிய வேண்டாம். பணிசெய். மற்றவர்களுக்கு தொண்டு செய். மற்றவர்கள் உன்னை ஆமோதிக்க வேண்டுமென்ருே பாராட்ட வேண்டுமென்ருே எதிர்பார்க்காதே. அப்பொழுது உன் ஆன்மாவின் உண்மையான சிறப்பு வெளிப்படும்.

கர்மயோக நெறியைப் பின்பற்றும் நண்பர்களே! உங்கள் உள்ளத்தில் உண்மை இருக்கட்டும்,

நிலையற்ற பெயரையும் புகழையும் நாடிச் செல்லாதீர்கள். பெயர், புகழ் என்பவை வெறும் மாயை, ஆகாயத்திலுள்ள அலைவுகளே அவை. மாயப் பிரபஞ்சத்தில் எவரும் உண்மையான, நிலையான பெயரைப் பெற முடியாது. வியாசர், வசிஷ்டர், விக்ரமாதித்யர், நாமதேவர், யாக்ஞவல்கியர், ஜடபரதர் ஆகியவர்களை இப்பொழுது யாராவது நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறார்களா? அநேக மகாத்மாக்கள் தோன்றி மறைந்திருக்கிறார்கள். தற்சமயம் ஓரிரண்டு அரசியல் தலைவர்களின் பெயர்கள்தாம் நினைவிலிருக்கின்றன. சில வருடங்களுக்குப் பிறகு அந்தப் பெயர்களும் மறைந்துவிடும். பெயரையும், புகழையும், இழிவாகவும், விஷமாகவும் வாந்தி எடுக்கப்பட்ட கழிவுப் பொருளாகவும் கருது. இந்த உலகம் பொய்யானது. அழியக் கூடிய பொருள்களைப் பற்றிக் கவலைப்படாதே. என்றும் அழியாத பரம்பொருளைப் பற்றியே எண்ணு. தெய்வீக உணர்வுடனும் இறைவனைப் பற்றிய எண்ணங்களுடனும் தன்னலமற்ற தொண்டை இடைவிடாது செய். உனக்குள்ளேயே குடிகொண்டிருக்கும் இறைவனை உணர்ந்து கொள். உண்மையான கர்ம யோகியாக மாறி உலகத்துக்கே ஒரு வரப் பிரசாதமாக இரு.

## 16. உண்மையான சாதனை

கர்வம், பெருமை, எரிச்சல், தன்னலம் பாராட்டல், ராஜஸ குணம், மற்றவர்களுடைய செய்திகளில் அக்கரை, வெளிவேடம் ஆகியவை தியானத்தைப் பயில்வதற்குத் தடையாக இருக்கும். இந்த விருத்திகள் நுண்ணிய உருவத்தில் மனதிற்குள் ஒளிந்திருக்கும். சமுத்திரத்தில் நீர் மட்டத்திற்கடியில் ஓடிக்கொண்டிருக்கும் நீரோட்டங்கள் போன்றவை அவை. ஆறு மாதங்

களாக மூடிக்கிடந்த ஓர் அறையைப் பெருக்கும் போது அதிலுள்ள குப்பை வெளியே வருவதைப் போல, மனதிலுள்ள பல்வேறு வகையான குப்பை களும் யோகம், தியானம் ஆகியவற்றின் சக்தியால் வெளியே தள்ளப்படும். எனவே சாதகர்கள் தத்தம் மனதை நன்கு ஆராய்ந்து கவனமாகப் பார்க்கவேண்டும். தங்கள் மனதிலுள்ள ஒவ்வொரு குறைபாட்டையும் அதற்கேற்ற முறையைப் பயன் படுத்தி வெளியேற்ற வேண்டும். கர்வம் என்பது மிகவும் பிடிவாத குணமுள்ளது. ராஜஸ மனதின் எல்லா பக்கங்களிலும் அதன் கிளைகள் நன்கு வேர் விட்டுப் பரவி இருக்கும். அதன் வேகம் தற்காலிக மாக அடங்கி இருந்தாலும் அது மீண்டும் மீண்டும் தலைதூக்கும். சந்தர்ப்பம் வாய்க்கும்போது அது மேலோங்க முயலும்.

அற்ப விஷயங்களுக்குக்கூட குற்றங்காணும் இயல்புள்ள சாதகனுல் தியானத்தில் முன்னேற்றம் காண முடியாது. மற்றவர்களோடு அனுசரித்துப் போகவும், நட்போடும் அன்போடும் பழகவும் அவன் பயிலவேண்டும். அப்போது முன் கூறிய இயல்பு மறைந்துவிடும். ஒரு சிலருக்குத் தங்களுடைய விரும்பத்தகாத இயல்புகளையும், குறைபாடுகளையும் எடுத்துச் சொன்னுல் கோபம் வரும். அவர்கள் அவ்வாறு எடுத்துச் சொல்பவர் மீது சினம்கொண்டு சண்டைக்குப் போவார்கள். பொருமை, வெறுப்பு ஆகியவை காரணமாகத் தான் அவர் தங்களிடம் இல்லாத குறைபாடுகளைச் சொல்வதாக நினைப்பார்கள். இது மிகவும் மோசமானது. நம்மிடமுள்ள குறைபாடுகள் மற்றவர் களுக்குத் தெளிவாகத் தெரியும். தன்னையே நன்கு ஆராயத் தெரியாதவனும், மனம் கட்டுக்கடங்காது வெளியில் அலைந்துதிரியும் இயல்புள்ளவனும் தன் குறைபாடுகளைக் காண முடியாது. தற்பெருமை

ஒரு திரைபோல அவன் மனக்கண்ணை மறைத்து விடுகிறது. ஒரு சாதகன் முன்னேற்றமடைய விரும்பினால் மற்றவர்கள் அவன் குறைபாடுகளை எடுத்துச் சொன்னால் அவைகளை ஒத்துக்கொள்ள வேண்டும். அக் குறைகளை நீக்கிக் கொள்வதற்குத் தன்னாலான முயற்சிகளை எடுத்துக்கொள்வதோடு, அவைகளை எடுத்துக்காட்டியவர்களுக்கும் நன்றி சொல்ல வேண்டும். அப்போதுதான் ஆன்மீகத் துறையிலும் தியானத்திலும் வளர்ச்சியடைய முடியும்.

தன் கருத்தை வலியுறுத்தும் இயல்பை ஒழிப்பது மிகவும் கடினமான காரியம். ஒவ்வொரு மனிதனும் நினைவுக்கெட்டாத காலத்திலிருந்தே தன் இயல்பை உருவாக்கி இருக்கிறான். தவிரவும் தன் ராஜஸ குணத்துக்கு அதன் விருப்பம்போல் நடந்துகொள்ள அனுமதியும் அழித்திருக்கிறான். அவனுடைய இயல்பு நன்கு வலிமைபெற்று விட்டது. எனவே அதை வளைத்து, தக்க முறையில் உருக்குவதற்காக மெதுவானதாகச் செய்வது கடின மாக இருக்கிறது. தன்னையே முக்யமானவனாக் கருதும் ஒருவன் மற்றவர்களை அடக்கியாள விரும்பு கிறான். மற்றவர்களுடைய கருத்துக்களும் வாதங் களும் எவ்வளவு நியாயமானவையாகவும், அறிவுக் கொத்தவையாக இருந்தாலும் அவைகளைக் கேட்க விரும்புவதில்லை. அவனுக்குக் காமாலைக் கண்கள். ''நான் சொல்வதுதான் சரி. நான் செய்வதெல்லாம் சரி. மற்றவர்கள் சொல்வதும் செய்வதும் தவறு. நான் எப்பொழுதும் தவறு செய்யவே மாட்டேன்,'' என்று அவன் சொல் வான். அவன் தன் தவறுகளை ஒருபொழுதும் ஒத்துக்கொள்ள மாட்டான். தன்னுடைய குறுக்கு வாதங்களாலும் தர்க்கங்களாலும் தன்னுடைய விந்தையான கருத்துக்களை நிலைநாட்டத் தன்னு

லான வரை முயற்சி செய்வான். வாதங்களில் வெற்றிபெறு விட்டால், அவர்களை ஏசத் தொடங்கு வான். அது கைகலப்பிலும்கூட முடியும். மக்கள் அவனுக்கு மதிப்பும் மரியாதையும் காட்டா விட்டால், அவனுக்கு மிகவும் கோபம் வரும். யாராவது அவனைப் புகழத் தொடங்கினால், அவனுக்கு மிகவும் மகிழ்ச்சி ஏற்படும். தான் செய்வது நியாயமானது என்று நிரூபிக்க எவ்வளவு பொய்வேண்டுமானாலும் சொல்வான். தன்னை முக்கியமாகக் கருதும் இயல்பும், தான் செய்வதுதான் சரி என்பதும் ஒன்றோடொன்று இணைந்துள்ள இயல்புகள். இது மிகவும் கெடுதலான குணம். இந்த இரண்டு இயல்புகளும் உள்ளவரை ஆன்மீகத்திலும் தியானத்திலும் ஒருக் காலும் முன்னேற முடியாது. தன்னையே பிரதான மாகக் கருதுபவன் தன் மனப்பான்மையை மாற்றிக் கொள்ள வேண்டும். அவன் ஒன்றைப்பற்றிச் சிந்திக்கும்போது, மற்றவர்கள் கருத்துக்களையும் ஏற்றுக் கொள்ளும் மனப்பான்மையை வளர்த் துக்கொள்ள வேண்டும். நியாயத்தையும் சத்தியத்தையும் புதிய கோணத்தில் பார்க்க வேண்டும். ஒரு சாதகன் மதிப்பும் மரியாதையும் பயனற்றவை, விஷம் போன்றவை என்றும், பழிச் சொல்லும் இழிவுமே ஆபரணம், அமிர்தம் போன்றவை என்றும் எண்ண வேண்டும்.

மற்றவர்களுடைய பழக்க வழக்கங்களுக்குத் தக்கபடி தன்னை மாற்றிக்கொள்வது மனிதனுக்குக் கடினமாக இருக்கிறது. ஜாதி, மதம், இனம் ஆகியவைகளின் அடிப்படையில் எழுந்த வெறுப் பால் அவன் மனம் நிறைந்து இருக்கின்றது. அவனுக்குச் சிறிது கூட சகிப்புத் தன்மை இல்லை. 'தன்னுடைய எண்ணங்கள், சிந்தனைகள், தான் செல்லும் வழி ஆகியவைதான் சரி மற்றவர்

களுடையவை எல்லாம் தவறு' என்று நினைக்கிறான். குற்றம் காணும் இயல்பு அவனுக்குள்ளே ஊறி இருக்கின்றது. மற்றவர்களிடம் குற்றம் கண்டவுடனே துள்ளிக் குதிக்கிறான். அவன் கண்களில் மாசு படிந்திருப்பதால், அவனால் மற்றவர்களிடம் நல்லதையே காணமுடியாது. மற்றவர்களுடைய நல்ல செயல்களை அவனால் பாராட்ட முடியாது. தன்னுடைய திறமைகளைப் பற்றியும் செயல்களைப் பற்றியுமே அவன் பேசிக்கொண்டிருப்பான். அதனால்தான் தன்னைச் சுற்றிலுமிருப்பவர்களோடு அதிக நாள் தோழமை பாராட்ட முடியாமல் சண்டை போடுகிறான். சாதகர்கள் தங்கள் நெறியில் முன்னேற்றம் காண முடியாமல் இருப்பதற்குக் காரணம் இக் குறைகள் அவர்களிடமும் அதிக அளவில் இருப்பதுதான். அவர்கள் சகிப்புத் தன்மை, தூய அன்பு மற்றுமுள்ள சாத்வீகப் பண்புகளை வளர்த்துக் கொண்டு மேற்கூறிய விரும்பத்தகாத இயல்புகளை முற்றிலும் போக்கிவிட வேண்டும்.

உனக்குள்ளே ஆராய்ந்து பார். நன்கு துருவிப் பார். உன் குறைகளை எல்லாம் நீக்க முயற்சி செய். இதுதான் உண்மையான சாதனை. இதுதான் மிகவும் கடினமான சாதனை. நீ எப்பாடு பட்டாகிலும் இதைச் செய்ய வேண்டும். அறிவை மாத்திரம் பெறுவது கடினமல்ல. அது எளிது. ஒரு பெரிய நகரத்திலுள்ள நூலகத்தில் ஐந்தாறு ஆண்டு காலம் ஒரு அகராதியின் உதவியுடன் நூல்களைப் படித்து உன் அறிவைப் பெருக்கிக் கொள்ளலாம். ஆனால் ஆன்மீக மாறுதலைப் பெற அநேக ஆண்டுகள் பெரும் போராட்டம் நடத்த வேண்டும். பல பழைய கெட்ட பழக்கங்களைப் போராடி நீக்க வேண்டியிருக்கும். கீதை அல்லது உபநிடதத்திலுள்ள ஒரு செய்யுளுக்கு ஒரு வார காலம் விரிவுரை

யாற்றக் கூடிய கல்விமான்களாகிய துறவிகளும் பண்டிதர்களும் அநேகர் இருக்கின்றார்கள். அவர்கள் மதிக்கப்படுகிறார்கள். ஆனால் அவர்களிடமுள்ள சில குறைபாடுகள் காரணமாக மக்கள் அவர்களை விரும்புவதில்லை. தங்கள் குறைகளை நீக்கிக்கொள்வதற்காக அவர்கள் கடுமையான சாதனை எதையும் மேற்கொள்ளவில்லை. அவர்கள் தங்கள் அறிவை மாத்திரம் அதிக அளவில் பெருக்கிக்கொண்டிருக்கிறார்கள். அந்தோ பரிதாபம்!

பழைய சம்ஸ்காரங்களாகிய ஆடம்பரம், தந்திரம், குறுகிய மனப்பான்மை, கர்வம், அற்பத்தனம், தன்னலம், அகந்தை மற்றவர்களைப்பற்றி இழிவாகவும், குறை கூறியும் பேசுதல் ஆகிய இயல்புகள் உங்கள் மனதிற்குள் எங்காவது மறைந்திருக்கலாம். அவைகளை முற்றிலும் நீக்காவிட்டால் நீங்கள் அறிவொளியைப் பெற முடியாது. உங்களுடைய சாதாரண நிலையில் காணப்படும் எதிர்மறை இயல்புகளான இந்த விரும்பத்தகாத பண்புகளை முற்றிலும் போக்காவிட்டால் தியானத்தில் வெற்றியை அடைய முடியாது.

சூடான விவாதங்களிலும், வீணான வாதங்களிலும், குழப்பங்களிலும், மொழிச் சண்டைகளிலும், அறிவுப் புதிர்களிலும் அடிக்கடி ஈடுபடுகிறவர்கள் தங்களுக்கே அபாயம் விளைவித்துக் கொள்கிறார்கள். அவர்கள் ஆற்றல் வீணாகிறது. பகைதான் கிடைக்கும் பயன். காலமும் வீணாகச் செலவழிகிறது. ஆன்மீகவுடல் காரசாரமான விவாதங்களால் கொதிப்படைகின்றது. அதனால் ஆழமான புண் ஏற்படுகின்றது. இரத்தம் கொதிப்படைகிறது. அடுப்பிலுள்ள பால் போல் கொதிக்கின்றது. தேவையில்லாத காரசாரமான விவாதங்களாலும் வீணான வாதங்களாலும் விளையும்

பயங்கரமான பயன்களைப் பற்றிப் பாமர மக்களுக்கு ஒன்றும் தெரிவதில்லை. தேவையில்லாமல் விவாதம் செய்கின்றவர்களும், வீணுக தர்க்கம் செய்கின்றவர் களும் ஆன்மீக நெறியில் கடுகளவு கூட முன்னேற்ற மடையலாமென்று எதிர்பார்க்க முடியாது. விவாதம் செய்வதையும் தர்க்கம் செய்வதையும் விட்டுவிட வேண்டும். தங்கள் மனத்தையே நன்ருக ஆராய்ச்சி செய்துகொண்டு விவாதம் செய்யுமாறு தூண்டும் உணர்வை அழித்துவிட வேண்டும்.

அறிஞர்களான துறவிகள் நடத்தும் பல சிறந்த விரிவுரைகளைக் கேட்டிருக்கின்றீர்கள். கீதை, இராமாயணம், உபநிடதங்கள் ஆகியவை களிலிருந்து சொற்பொழிவுகளைக் கேட்டிருக்கின்றீர் கள். மக்கள் ஒழுக்கத்தைப் பற்றியும் ஆன்மீகத் தைப் பற்றியும் கூட சொற்பொழிவுகளைக் கேட்டிருப்பீர்கள். ஆனுல் எதையும் தீவிரமாகவும் அக்கரையோடும் நடைமுறையில் பயிலவோ, தீவிர சாதனையில் ஈடுபடவோ முயற்சி எதுவும் செய்ய வில்லை. மத சம்பந்தமான கருத்துக்களை அறிவில் மட்டும் ஒத்துக்கொள்வதோ, காலையிலும் இரவிலும் சிறிது நேரம் கண்களை மூடிக் கொண் டிருந்துவிட்டு உங்களையும் உங்களுக்குள்ளே வசிக்கும் இறைவனை ஏமாற்றுவதோ, தினசரி ஆன்மீகக் கடமைகளைச் சிறிதளவு செய்துவிட்டு நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதற்காக அரை மனதுடன் செய்யும் சிறுமுயற்சியோ, உங்களுடைய ஆன்மீக குரு சொன்ன அறிவுரைகளைப் பின்பற்று வதற்குச் செய்யும் மிகச் சிறு முயற்சியோ போதாது. இந்த மாதிரி மனப்பான்மையை முற்றிலும் கைவிட வேண்டும். ஒரு சாதகன் தன்னுடைய குருவின் உபதேசத்தையும், மத சம்பந்தமான நூல்களிலுள்ள உபதேசங்களையும்

சிறிதும் தவருமல் எழுத்துக்கெழுத்து பின்பற்ற வேண்டும். மனதுக்கு எந்தவிதமான தயவு தாட்சண்யமும் காட்டக்கூடாது. ஆன்மீகத் துறையில் அரைகுறை வேலேயே இல்லே. ''நான் பிறகு பார்த்துக்கொள்கிறேன். நான் வேலேயி லிருந்து ஓய்வு பெற்றபின் இதற்கு அதிக நேரம் செலவழிக்கலாம். அதில் கூறப்பட்டுள்ள அறிவுரை களே ஏறக்குறைய பாதியளவுக்குப் பின்பற்றி இருக்கிறேன்,'' என்று சொல்லக் கூடாது. ''முடிந்த அளவு,'' ''சற்றேறக்குறைய'' என்ற வார்த்தைகள் சாதகனுக்கு அபாயமானவை. ஆன்மீக அறிவுரையைப் பின்பற்றுவதில் ''விதி விலக்கு,'' ''சிறிதளவு தவிர்ப்பு,'' ''தரகு'' எதுவும் கிடையாது. உங்களிடமிருந்து எதிர் பார்ப்பது ''முற்றிலும் சரியான, மறுப்பில்லாத, கண்டிப்பான'' கீழ்படியும் தன்மைதான்.

எதையும் எண்ணிப்பார்க்காமல் பதில் சொல்லாதே. தேவையில்லாத சொல் எதுவும் சொல்லாதே. வீணுன, நீண்ட, பெரிய, ஆதார மற்ற பேச்சுக்களேப் பேசாதே. அமைதியாயிரு. மாயையான இப்பூவுலகில் உரிமைகளே வற்புறுத்திப் பேசாதே. அதற்காகப் போரிடாதே. கடமை களேப் பற்றி அதிகமாகவும் உரிமைகளேப் பற்றிக் குறைவாகவும் நினே. உரிமைக்காகப் போராடுவது ராஜஸ குணம். உரிமைகளால் பயனில்லே. அதனுல் காலமும் சக்தியும் வீணுகின்றன. உன் பிறப்புரிமையாகிய இறையுணர்வைப் பற்றி வற்புறுத்திப் பேசு. ''நீதான் பிரம்மம்''. இந்த உண்மையான பிறப்பு உரிமையை அழுத்தந்திருத்த மாகக் கூறு. அப்பொழுதுதான் நீ ஒரு அறிவுள்ள மனிதனுவாய்.

நற்பண்பு, இரக்கம், பிரம்மசரியம், சத்தியம், தூய அன்பு, சகிப்புத்தன்மை, தூய மனநிலே'

ஆகியவை உனக்கிருந்தால், உனக்கிருக்கும் வேறெந்த தீய பண்புகளேயும் விட இவை ஆற்றல் படைத்தவைகளாக விளங்கும். நீ விழிப்புடன் கவனித்து வந்தால் சிறிது காலத்திற்குள் அந்தத் தீய பண்புகளும் மறைந்துவிடும்.

ஆற்றல் மிக்க முனிவர் ஒருவரின் அருகில் நீ இருந்தால், அவருடைய காந்த சக்தியாலும், ஆன்மீக அலேவுகளாலும் அநேக நன்மைகளேப் பெறலாம். அவருடைய துணே உனக்குப் பாது காப்பான ஒரு கோட்டையைப் போன்றிருக்கும். தீய சக்திகள் உன்னே அணுக முடியாது. வீழ்ச்சி யைப் பற்றிய அச்சம் உனக்கு இருக்காது. விரைவான ஆன்மீக முன்னேற்றம் ஏற்படும். முனிவருடைய கூட்டுறவு சாதகனிடம் சாத்வீக பண்புகள் வெகு விரைவில் வளர்வதற்கு உதவு வதோடு, அவனிடம் உறங்கிக் கிடக்கும் ஆற்றல் களேத் தட்டி எழுப்பி, விரும்பத்தகாத தீய இயல்பு களே ஒழித்துக்கட்டவும் உதவும். இளம் சாதகர் கள் ஆன்மீகப் பதையிலும், ஆழ்ந்த தியானத்திலும் உறுதியாக நிலேபெறும் வரை தங்கள் குருவுடன் சேர்ந்தே இருக்க வேண்டும். இக்காலத்தில் இளம் சாதகர்கள் எவ்வித குறிக்கோளுமில்லாமல் ஊர் ஊராகச் சுற்றித் திரிகிருர்கள். தங்கள் குருவின் உபதேசங்களே கவனமாகக் கேட்க விரும்புவதில்லே. எனவே ஆன்மீகத் துறையில் அவர்களுக்கு எவ்வித முன்னேற்றமும் ஏற்படுவதில்லே. அவர்கள் சமுதாயத்துக்கே ஒரு பாரமாக இருக்கிருர்கள். அவர்கள் தங்களே உயர்த்திக் கொள்ளாமல் இருப்பதோடு, மற்றவர்களுக்கும் எவ்வித பயனு மின்றியும் இருக்கிருர்கள். அவர்கள் சுகமாகச் சுற்றித் திரியும் கனவான்கள்!

நகைச்சுவை உணர்ச்சி இயற்கை நமக்களித் துள்ள ஒரு பரிசாகும். ஆன்மீகப் பாதையில்

சாதகர்கள் செல்லும்போது அது உதவி செய்கிறது. அது அவர்களுக்கு ஏற்படும் சோர்வை நீக்குகிறது. அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் மகிழ்ச்சியையும் இன்பத்தையும் கொடுக்கும். ஆனால் மற்றவர்கள் மனதைப் புண்படுத்தும் அளவுக்கு வேடிக்கையாகப் பேசக்கூடாது. வேடிக்கைப் பேச்சு மற்றவர்களுக்கு அறிவூட்டுவதாகவும், அவர்களுடைய தவறுகளைத் திருத்துவதாகவும் இருக்க வேண்டும். அவைகள் ஆன்மீக போதனைகளாகவே இருக்கவேண்டும். நகைச்சுவையை ரசிக்கும் போது மெதுவாகவும் ஆடம்பரமில்லாமலும் சிரிக்க வேண்டும். பரிகாச மானதும், வெடித்துச் சிதறக் கூடிய மாதிரியும், நாகரிகமற்று பழிக்கக் கூடிய அளவுக்கும் சிரிப்பு இருக்கக் கூடாது. அது ஆன்மீக முன்னேற்றத் துக்குத் தடையாக இருப்பதோடு, அமைதியான மனத்தையும், தீவிரமானதும் கண்ணியமானது மான மனோபாவத்தை ஏற்படுத்திக்கொள்வதையும் கெடுத்துவிடும். ஞானியின் சிரிப்பை கண்களிலேயே காணலாம். அது மகத்தானதாகவும் மனதைக் கவரக்கூடியதாகவும் இருக்கும். அறிவாளிகளான சாதகர்களால்தான் அதைப் புரிந்து கொள்ள முடியும். எனவே நகைச்சுவை என்ற பெயரால் கீழ்த்தரமாக நடந்துகொள்ளக் கூடாது.

சிறிதளவு இடையூறும் எரிச்சலும் கூட மனதையும் சூட்சும உடலையும் பாதிக்கும். சாதகர்கள் மனமாகிய ஏரியில் இந்த தீய விருத்தி கள் தோன்றுவதற்கு விடக் கூடாது. சற்று கவனக் குறைவாக இருக்கும்போது அவைகள் பெரிய கோப அலைகளாகச் சீறிப்பாயலாம். மன்னிக்கும் இயல்பு, அன்பு, பரிவு ஆகியவற்றை மற்றவர்களிடம் காட்டுவதால், தீய இயல்புகளை முளையிலேயே கிள்ளி எறிந்துவிட வேண்டும். மனமாகிய ஏரியில் சிறிதளவு அலைவு கூட இருக்கக்

கூடாது. அது முற்றிலும் அமைதியாகவும் அசை வற்றும் இருக்கவேண்டும். அப்போதுதான் தியானம் செய்ய முடியும்.

முரட்டுத்தனமான குதிரை யாருக்கும் அடங்காமல் சவாரி செய்பவனையும் தூக்கிக் கொண்டு ஓடிவிடும். அவ்வாறே கோபவுணர்ச்சி தன்னடக்கமில்லாத சிறிய ஜீவனை தன் விருப்பப்படி ஆட்டி வைக்கும். அதனால் அவன் கோபத்திற்கு அடிமையாகிறான். திறமையுள்ள ஒருவன் குதிரையை அடக்கி தான் செல்ல வேண்டிய இடத்தை அடைவதைப்போல, தன்னடக்கமுள்ள மனிதனும் கோபவுணர்வைக் கட்டுப்படுத்தி, அமைதி பெற்று, வாழ்க்கையின் இலட்சியத்தை அடைகிறான்.

பயங்கரமான கோபத்தால் இப்பூதவுடலிலுள்ள நரம்பு மண்டலம் மிகவும் சேதமடைகிறது. அதனால் (சூட்சும உடலில்) ஆழமான, நிலையான அடையாளத்தைப் பதித்து விடுகிறது. சூட்சும உடலிலிருந்து கறுப்பு அம்புகள் புறப்படுகின்றன. குளிர் காய்ச்சலை உண்டாக்கும் கிருமிகள் மடிந்து விட்டாலும் காய்ச்சலினால் ஏற்பட்ட அதிர்ச்சி உடலின் பல்வேறு பாகங்களிலும் பல நாட்கள் நீடிக்கிறதுபோல் கோபத்தின் விளைவு மனதில் சிறிது நேரத்திலேயே அடங்கி விட்டாலும், அந்த அலைவு சூட்சும உடலில் பல வாரங்கள் அல்லது நாட்கள் நீடித்திருக்கும். மனதில் ஐந்து நிமிடங்கள் மட்டுமே நீடிக்கும் மகிழ்ச்சியற்ற மனநிலை சூட்சும உடலில் இரண்டு மூன்று நாட்கள் வரை அலைவுகளை உண்டாக்கக் கூடும். கடுங்கோபம் சூட்சும உடலில் ஒரு பெரிய வீக்கத்தையே ஏற்படுத்தி விடுகின்றது. அதனால் ஏற்பட்ட புண் ஆறுவதற்குப் பல மாதங்களாகும். கோபத்தின் பயங்கரமான விளைவுகளைப் பற்றி அறிந்து கொண்

டீர்களா? இந்த பயங்கரமான நோய்க்கு நீங்கள் ஆளாக வேண்டாம். இரக்கம், அன்பு, பரிவு, சிந்தனை, பொறுமை ஆகியவைகளைப் பயின்று அதை அடக்கியாள வேண்டும்.

கவலை, சோர்வு, விரும்பத்தகாத எண்ணங்கள், கோபம், வெறுப்பு ஆகியவைகள் மனம் அல்லது சூட்சும உடம்பின் மேல் பரப்பில் கறுப்பு நிறமுள்ள பொருக்கு போன்ற போர்வை ஒன்றை உருவாக்கி விடும். இந்த போர்வை, பொருக்கு அல்லது அழுக்கு நன்மை செய்யும் சக்திகளை உள்ளே செல்லாமல் தடுப்பதோடு, உள்ளே இருக்கும் தீய சக்திகள் நன்முகச் செயல்படுவதற்கும் உதவுகின்றது. எனவே கவலை சூட்சும சரீரத்துக்கும் மனதுக்கும் பெரும் தீமையைச் செய்கிறது. கவலைப்படுவதால் நம் சக்தி வீணுகிறது. கவலைப் படுவதால் லாபம் ஏதுமில்லை. அதனுல் சூட்சும சரீரம் வீக்கமடைந்து, மனிதனின் ஆற்றலும் வீணுகிறது. தீவிரமான தன்னுராய்ச்சி மூலமும் ஏதாவது பயனுள்ள வேலை செய்வதன் மூலமும் மனதுக்கு இடைவிடாது வேலை கொடுப்பதன் மூலமும் ஜெபம், தியானம் இவற்றின் உதவியாலும் அதை முற்றிலும் நீக்கி விட வேண்டும்.

விரைவில் ஆன்மீக முன்னேற்றமடைய வேண்டுமானுல் உறங்காமல் கூட எச்சரிக்கையுடன் இருக்கவேண்டும். ஒரு சிறிது முன்னேற்றம், ஆன்மீக நெறியில் சிறிதளவு வெற்றி, சிறிது மன அமைதி, சிறிதளவு மன ஒருமைப்பாடு, தேவதைகளை சிறிதளவு பார்க்கும் ஆற்றல், சில சித்திகளை கைவரப் பெறுதல், இவைகளை அடைந்தவுடன் அமைதி அடைந்து விடக்கூடாது. இவைகளை விட இன்னமும் அதிக ஆற்றல்களும், வெற்றிகளும் பெற வேண்டும் என்பதை மறந்து விடக்கூடாது.

எப்பொழுதும் தொண்டு செய்வதற்குத் தயாராயிரு. தூய அன்பு, இரக்கம், பரிவு ஆகியவற்றுடன் தொண்டு செய். தொண்டு செய்யும்போது முணுமுணுக்காதே. முகத்தைக் கடுகடுப்புடன் வைத்துக் கொள்ளாதே. அப்பொழுது உன் தொண்டை எவரும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அதனுல் உனக்கேற்படும் ஒரு வாய்ப்பு நழுவி விடும். வாய்ப்புக்களை நன்ருகக் கவனி. ஒரு வாய்ப்பைக் கூட நழுவ விடாதே. வாய்ப்புக்களை உண்டாக்கிக் கொள். தொண்டு செய்வதற்கேற்ற சூழ்நிலைகளை உருவாக்கிக் கொள். புதிதாக ஏதாவது வேலையை உண்டாக்கிக் கொள்.

தொண்டு செய்வதில் உண்மையான ஆர்வமுள்ள வாழ்க்கையை நடத்து. தொண்டு செய்ய வேண்டும் என்ற ஊக்கத்தையும் ஆர்வத்தையும் உன் உள்ளத்தில் உண்டாக்கிக் கொள். மற்றவர்களுக்கு உதவும் ஒருவனுகவே இரு. இம் மாதிரி நிலையை அடைய வேண்டுமாளுல் மனதை மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டும். உன் பண்பில் மெருகேற்ற வேண்டும். உன் பண்பை நன்ருக உருவாக்கிக் கொள்ள வேண்டும். பரிவு, அன்பு, பொறுமை, கருணை, அடக்கம் ஆகிய பண்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். மற்றவர்கள் கருத்து உன்னுடைய கருத்துக்களிலிருந்து மாறுபட்டால் அதற்காக அவர்களிடம் சண்டை இடாதே. மனதில் பல வகைகளுண்டு. எண்ணங்களிலும் பல்வேறு வகைகளுண்டு. நேர்மையான கருத்து வேறுபாடுகளும் இருக்கின்றன. எவ்வளவோ வகையான வேறுபட்ட அபிப்ராயங்கள் இருக்கின்றன. அவரவர்களுடைய கருத்துக்கிணங்க அவரவர்கள் நினைப்பது சரியானவையே அவர்களுடைய கருத்துகளுக்கேற்றபடி ஒத்துப் போ. அவர்களுடைய கருத்துக்களையும் அன்புடனும்,

பரிவுடனும், கவனத்துடனும் கேட்டு அவைகளுக்கும் இடம் கொடு. உன்னுடைய குறுகிய அகந்தையுள்ள சூழலிலிருந்து வெளிப்பட்டு பரந்த நோக்கத்துடன் இரு. பரந்த மனப்பான்மையுடன் இரு. எல்லோருடைய கருத்துக்களுக்கும் இடம் கொடு. அப்பொழுதுதான் பரந்த மனப்பான்மையுடன் கூடிய வாழ்க்கையும், பரந்த உள்ளமும் உனக்கேற்படும்.

நீ எப்போதும் இனிமையாகவும், மெதுவாகவும், பண்புடனும் பேசவேண்டும். சிறிதளவே பேச வேண்டும். விரும்பத்தகாத எண்ணங்களையும் உணர்வுகளையும் நீக்கிவிட வேண்டும். கர்வம், எரிச்சல் படும் உணர்வு ஆகியவற்றின் அடையாளம் சிறிதளவு கூட உன்னிடம் இருக்கக் கூடாது. நீ உன்னைப்பற்றி முற்றிலும் மறந்துவிட வேண்டும். உன் உள்ளத்தில் தன்னல உணர்வு எள்ளளவுகூட இருக்கக் கூடாது. தொண்டில் முழு ஆர்வம் தேவை. மேலே குறிப்பிடப்பட்டுள்ள தகுதிகள் உனக்கிருந்தால் இந்தப் பரந்த உலகம் முழுவதற்கும் கலங்கரை விளக்கம் போலவும் கிடைத்தற்கரிய வரப்பிரசாதமாகவும் விளங்குவாய். இவ்வுலகத்தின மூலை முடுக்குகளிளெல்லாம் பரவி நறுமணம் வீசிக் கொண்டிருக்கும் அருமையான அழகிய மலர் போன்றவனுவாய். மிகவுயர்ந்த பௌத்த நிலையை அடைந்துவிடுவாய்.

பண்பு, கருணை, பரிவு, பிறர்குதவுதல் ஆகிய இயல்புகள் உன்னிடம் எப்பொழுதும் இருக்க வேண்டும். நீ விரும்பும்போது அல்லது எப்போதாவது ஒவ்வொரு சமயம் மட்டும் இருந்தால் போதாது. மற்றவர்களைப் புண்படுத்தும் வகையில் ஒரு போதும் பேசாதே. நீ பேசுவதற்கு முன் உன் பேச்சு மற்றவர்களுடைய உணர்ச்சிகளைப்

புண்படுத்துமா, இனியவையா, உண்மையான வையா, அர்த்தமுள்ளவையா என்று எண்ணிப்பார். உன் எண்ணங்கள், சொற்கள், செயல்கள் ஆகிய வற்றின் விளைவுகள் எப்படி இருக்கும் என்பதை முன்கூட்டியே எண்ணிப்பார். ஆரம்பத்தில் பல முறை உனக்குத் தோல்வி ஏற்படலாம். ஆனால் தொடர்ந்து இப்பயிற்சியில் ஈடுபட்டால் உனக்கு வெற்றி கிடைப்பது உறுதி.

எக்காரியத்தையும் அக்கரையில்லாமலும், அரை மனதுடனும், கவனமில்லாமலும், எண்ணிப் பார்க்காமலும் செய்யக் கூடாது. இந்த மனப் பான்மையுடனிருந்தால் நீ வளர்ச்சி அடைய முடியாது. உன்னுடைய உள்ளம், மனம், ஆன்மா, அறிவு ஆகிய அனைத்தும் நீ செய்யும் செயலில் நன்கு பொருந்தி இருக்கவேண்டும். அப்போதுதான் அது யோகம் அல்லது ஈஸ்வரார்ப்பணம் எனப்படும். சிலர் கைகளால் ஏதாவது வேலையைச் செய்து கொண்டு, மனதைக் கடையிலும், அறிவை அலுவ லகத்திலும், உயிரை மகன் அல்லது மனைவியின் மீதும் வைத்திருப்பார்கள். இது நல்லதல்ல. நீ எந்த வேலையையும் திறமையுடனும் நன்றாகவும் செய்து முடிக்க வேண்டும். ''ஒன்றே செய்க. அதுவும் நன்றே செய்க'' என்பது உன் கொள்கை யாக இருக்கட்டும். உன் குருவோ, நண்பரோ ஒரு துண்டைத் துவைக்கச் சொல்லி உன்னிடம் கொடுப் பாரானால், அவருடைய மற்ற துணிகளையும் அவருக்குத் தெரியாமலே துவைப்பதற்காக எடுத்துச் செல். ''சிறிது எண்ணெய் எடுத்துவா,'' என்று உன் குரு சொல்வாரானால், ஒரு நொடிப்பொழுதில் ஒரு கிண்ணத்தில் எடுத்துக் கொண்டுபோய் அவரிடம் கொடுக்கவேண்டும். உடல் முழுவதும் வியர்வை பெருக, பெருமூச்சுடன் ஓடி ''குருவே! என் அஞ்ஞானத்தைப் போக்குபவரே! இதோ

இருக்கின்றது எண்ணெய்;'' என்று வணக்கத்துடன் அவரிடம் கொடுக்க வேண்டும். யாராவது வழிப் போக்கர் குடிக்கத் தண்ணீர் கேட்டால் அவரிடம் கனிவுடன், ''சகோதரரே! சற்று அமருங்கள். இதோ தண்ணீர் இருக்கிறது. ஒரு கோப்பை பாலும் கொடுக்கிறேன். சற்று இளைப்பாறுங்கள். உங்கள் கால்களின் நோய் தீர தண்ணீரால் கழுவு கிறேன். களைப்பு நீங்க விசிறியால் வீசுகிறேன்,'' என்று சொல்லவேண்டும். இதுதான் உண்மையான தொண்டும் யோகமும் ஆகும். இம்மாதிரி மனப் பான்மையுடன் ஓரிரண்டு ஆண்டுகள் தொண்டு செய்வாயானால், நீ முற்றிலும் மாறுபட்ட மனிதனா வாய். இப்பூவுலகில் தெய்வீக மனிதனாகிவிடுவாய்.

அவசரத்துடனும், குழப்பத்துடனும் எந்த வேலையையும் செய்யக்கூடாது. எந்த வேலையையும் அமைதியான, குழப்பமற்ற மனநிலையோடு செய்ய வேண்டும். எத்தகைய வேலையையும் சிறிதும் குறையில்லாமல் நன்றாகச் செய்ய வேண்டும். சிதறிக் கிடக்கும் உன் எண்ணங்களை ஒன்று கூட்டி, உன் மனம் முழுவதையும் உனக்கு முன்னேயுள்ள வேலையில் செலுத்து. நன்கு சிந்தித்துப் பார்க்காமல் செய்வதால், பலர் தாங்கள் செய்யும் வேலையைப் பாழாக்கிவிடுகிறார்கள். அதற்காகப் பின்னர் வருத்தப்படுகிறார்கள். இது மோசமானது. நிதானமாக எண்ணிப் பார்க்க வேண்டும். சிறிது நேரமானாலும் பரவாயில்லை. திறமையுடனும், எந்த விதமான குறையும் இல்லாமலும் நுணுக்க மாகவும் செம்மையாகவும் அச் செயலை செய்து முடிக்க வேண்டும்.

சமுதாயத்தில் தொண்டு செய்யும் போது கவனமாக இருக்க வேண்டும். எல்லா விதமான தன்னலமற்ற தொண்டும், மேடைப் பேச்சுக்களும்,

எந்த விதமான பொதுக் காரியங்களும் ஒருவருக்குப் பெயரையும் புகழையும் கொடுக்கும். அந்தப் பெயரும் புகழும் இளஞ் செடி அல்லது மொட்டிலுள்ள நோயைப்போல உன்னை அழித்துவிடும். எனவே பெயரையும் புகழையும் விஷமென வெறுத்துவிடு. மிக, மிக அடக்கமாக இரு. இந்த நற்பண்பு உன் உள்ளத்திலும் உனக்குள்ளே இருக்கும் ஒவ்வொரு உயிரணுவிலும், ஒவ்வொரு நரம்பிலும் ஒவ்வொரு தசை நாரிலும் ஆழமாகப் பதிந்திருக்கட்டும். அதிக ஆற்றலுடன் மதிமயக்கத்தை உண்டாக்கும் பெயருக்கும் புகழுக்கும் அடிமையாகி பெரும் வீழ்ச்சியை அடைந்தவர்கள் பலர். அதனுல் அவர் களுடைய முன்னேற்றத்திற்குத் தடை ஏற்பட்டு விட்டது. எனவேதான் உன்னைக் கடுமையாக எச்சரிக்கிறேன்.

பிரித்தறியும் உணர்வு, உற்றுணர்தல், சுறு சுறுப்பு, கவனம், திறமை ஆகிய இயல்புகளை அதிக அளவில் வளர்த்துக்கொள்வதால், எதைச் செய்வது என்று தோன்ருமல் நீ திகைத்து நிற்கும்போது சரியான வழியில் செயல்பட அவை உனக்கு உதவி யாக இருக்கும். அப்பொழுதுதான் நெருக்கடியான சமயத்தில் என்ன செய்ய வேண்டுமென்பதை உன்னுல் சரியான சமயத்தில் அறிந்து கொள்ள முடியும். பின்னர் அதைக் குறித்து நீ வருத்தப்பட நேரிடாது.

அமைதியோடும் தூய்மையோடும் கூடிய மனதை உடையவனுக இருப்பது மிகவும் கடினமானது. தியானத்தில் முன்னேற்றம் பெறவும், நிஷ்காம்ய கர்மயோகம் புரியவும் அம்மாதிரி மனம் உனக்கிருக்க வேண்டும். அப்போதுதான் உன்னிடம் குறைவில்லாத கருவியாகிய நல்ல கட்டுப்

பாடுடைய மனம் இருக்கும். சாதகர்களுக்குத் தேவையான மிக முக்கியமான தகுதிகளில் இதுவும் ஒன்று. இதை அடைவதற்கு நீ நீண்ட காலம் பொறுமையுடனும் விடா முயற்சியுடனும் கடுமை யாகப் பாடுபட வேண்டும். இரும்பு உள்ளமும் வலிமையான உறுதியும் உள்ள சாதகனல் செய்ய முடியாதது ஒன்றுமில்லை.

மீண்டும் மீண்டும் தோல்வி ஏற்பட்டாலும் நீ சிறிதுகூட மனத்தளர்ச்சி அடையக்கூடாது. தோல்விகளுக்கான காரணங்களை நன்கு ஆராய்ந் தறிந்து, எதிர்காலத்தில் அவைகளைத் தவிர்ப்பதில் கவனமாக இருக்க வேண்டும். உன்னை மிகவும் எச்சரிக்கையுடன் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். உன் வலிமையின் இரகசியம் உன் பலவீனத்தில் தான் இருக்கிறது. மீண்டும் மீண்டும் தோல்வி அடைந்தாலும், உன் இலட்சியங்கள், கொள்கை கள், சாதனை ஆகியவைகளை விடாப் பிடியாகப் பற்றிக் கொண்டு, உன் பாதையில் மனவுறுதியுடன் செல்லவேண்டும். ''வருவது வரட்டும். ஆன்மீகப் போராட்டத்தில் முழு வெற்றி பெறுவது உறுதி. இப்பிறவியிலேயே, இக்கணமே ஆன்மீகத் தெளிவைப் பெறுவேன். தோல்விகளும் தடை களும் என்னை எவ்விதத்திலும் பாதிக்காது,'' என்று சொல். இம்மாதிரியான மனவுறுதி இருந்தால் நீ கண்டிப்பாய் வெற்றி பெறுவாய்.

உன் முயற்சிகளைத் தளரவிடாதே. தெய்வீகச் சுடர் தொடர்ந்து எரிந்து கொண்டிருக்கட்டும். நீ உன் இலட்சியத்தை நெருங்கிக்கொண்டிருக்கிருய். உன் ஞானவொளி இப்பொழுது தோன்றி யிருக்கிறது. உன்னிடம் விடாமுயற்சி, பொறுமை யான சாதனை ஆகியவற்றின் காரணமாக அநேக சிகரங்களையும், கடக்க முடியாத மலையுச்சிகளையும் கடந்து வந்திருக்கிருய். இது மிகவும் பாராட்டுக்

குரியது. உண்மையில் மிகச் சிறந்த முன்னேற்றம் அடைந்திருக்கிறாய். உன்னைக் கண்டு எனக்கு மிகவும் மகிழ்ச்சி ஏற்படுகிறது. சொரூபானந்தனே! நீ இன்னமும் ஒரு சிகரத்தில் ஏறி, ஒரு குறுகலான கணவாயின் வழியே செல்ல வேண்டியிருக்கிறது. இதற்கு இன்னும் அதிகமான பொறுமையோடு கூடிய முயற்சியும் வலிமையும் தேவை. சாத்வீக அகந்தையையும் போக்கிக்கொள்ள வேண்டும். பேரின்பமயமான நிலையாகிய சவிகல்ப சமாதியை யும் கடக்க வேண்டும். உன்னால் இது முடியும் என்ற உறுதியான நம்பிக்கை எனக்கிருக்கிறது.

உனக்குதவி செய்வதற்கு நான் எப்பொழுதும் தயாராக இருக்கிறேன். உனக்கு மகிழ்ச்சி, அமைதி, அன்பு ஆகியவற்றைக் கொடுக்கிறேன். உனக்கு ஊக்கமூட்டுகிறேன். ஆனால் உனக்காக நான் வேலை செய்ய முடியாது. உன் வேலையை நீ தான் செய்ய வேண்டும். போராட்டமும் முயற்சியும் உன்னிடமிருந்துதான் வர வேண்டும். பசியுள்ள மனிதன் தான் உண்ண வேண்டும். தாகமுள்ள மனிதன் தான் தண்ணீர் குடிக்க வேண்டும். ஆன்மீக ஏணியின் படியில் நீதான் உன் காலை எடுத்துவைக்க வேண்டும். இதை எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொள்.

சௌம்யா! அன்புள்ள அமர ஆத்மனே! தைரியமாயிரு! வேலையில்லாமல், உண்ண உணவில் லாமலும், கந்தைகளை உடுத்தியிருந்தாலும் மகிழ்ச்சியோடிரு. உன்னுடைய உண்மையான இயல்பு சச்சிதானந்த சொரூபமே. வெளிப் போர்வையாகிய அழியும் உடல் மாயையால் ஏற்பட்ட பொய்த்தோற்றமே. சிரி, குதித்துக் கூச்சலிட்டுக் கொண்டு மகிழ்ச்சியோடிரு. ''ஓம்! ஓம்! ஓம்! ராம்! ராம்! ராம்! ஷியாம்! ஷியாம்! ஷியாம்! ஸோஹம்! ஸோஹம்! ஸோஹம்!''

என்று பாடு. தசையாலான இந்த கூட்டிலிருந்து வெளியே வா! நீ இந்த அழியக் கூடிய உடலல்ல. நீ அழியாத அமர ஆன்மா. நீ இன வேறுபாடில்லாத ஆன்மா. நீ மன்னர் மன்னன், சக்ரவர்த்திகளின் சக்ரவர்த்தி, உபநிடதங்களில் கூறப்பட்டுள்ள பிரம்மன், உன் உள்ளத்திலுள்ள மாளிகையில் குடிகொண்டுள்ள ஆன்மாவின் மகன். எனவே அவ்வாறே உணர்ந்து, செயல்பட்டு, உன் பிறப்புரிமையைக் கோரிப் பெறு. அதை நாளை அல்லது மறுநாள் செய்யலாம் என்று இருக்காமல் இன்றே செய்து முடி. தத்வமஸி — நீயே அதுவாகிறுய்.

## 17. கர்ம விதி

இயற்கையின் விதிகளையும் அவை செயல்படும் முறையைப் பற்றியும் ஒவ்வொரு மனிதனும் நன்கு அறிந்திருக்க வேண்டும். அதனுல் இந்த உலகத்தில் அமைதியாகவும் இன்பமாகவும் வாழலாம். நன்மை தரும் சக்திகளைத் தனக்கு அதிக பயன்களைக் கொடுக்கும் வகையில் பயன்படுத்திக் கொள்ளலாம். விரோதமான அல்லது கெடுதல் விளைவிக்கும் ஆற்றல்களின் சக்தியைக் குறைக்க முடியும். மீன் தண்ணீரில் நீரோட்டத்தை எதிர்த்து நீந்திச் செல்வதைப்போல விரோதமான சக்திகளின் ஆற்றலுக்குத் தக்கவாறு சமாளித்துக் கொள்ள முடியும். அதற்குத் தக்கவாறு முன்னரே காப்பு நடவடிக்கைகளை எடுத்துத் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளலாம். இல்லாவிடில் அவன் அவைகளுக்கு அடிமையாகிவிடுவான். பல்வேறு சக்திகளால் இங்குமங்கும் தூக்கி எறியப்பட்டு அலைக்கழிக்கப் படுவான். எதிர்ப்பு சக்திகள் அவனை ஒவ்வொரு மூலைக்கும் இழுத்துச் செல்லும். ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும் பலகையைப் போலாகிருன். இவ்வுலகத்தில் அடைய வேண்டிய

செல்வங்களை எல்லாம் நிறையப் பெற்றிருந்தும் அவன் எப்பொழுதும் துன்பத்தோடும் வருத்தத் தோடும் இருக்கிறான்.

ஒரு கப்பலின் தலைவன், திசையறி கருவியை வைத்துக்கொண்டு, கடலைப் பற்றியும், கடல் வழி களைப் பற்றியும் கடல் நீரோட்டங்களைப் பற்றியும் நன்கு அறிந்திருந்தால் அமைதியாகக் கப்பலைச் செலுத்திப் பயணம் செய்ய முடியும். இல்லாவிடில் அவனுடைய கப்பல் இங்குமங்கும் அலைந்து திரிந்து, பாறையிலாவது பனிப் பாறைகளிலாவது மோதி உடைந்து போகலாம். அம்மாதிரியே வாழ்க்கை யாகிய பெருங்கடலில் பயணம் செய்யும் அறிவாளி யான மாலுமி, கர்மம், இயற்கை ஆகியவற்றின் விதிகளை நன்கு அறிந்திருந்தால், அமைதியாகப் பயணம் செய்து வாழ்க்கையின் இலட்சியத்தை உறுதியாக அடையலாம். இயற்கையின் விதிகளை அறிந்துகொண்டு, உன் இயல்லைப நீ விரும்பும் வண்ணம் உருவாக்கிக் கொள்ளலாம். ''மனிதன் நினைத்த வண்ணமே உருவாகிறான்'' என்பது இயற்கையின் முக்கியமான விதிகளில் ஒன்று. நீ தூய்மையாக இருப்பதாக நினைத்துக்கொள். நீ தூய்மையாகவே ஆகிவிடுவாய். பெருந்தன்மை யுடனிருப்பதாய் எண்ணிக் கொண்டால் அவ்வாறே ஆகி விடுவாய். நீ ஒரு மனிதன் என்று எண்ணி னால், உண்மையில் மனிதனாக ஆகிவிடுகிறாய். உன்னை பிரம்மாவாக எண்ணிக் கொண்டாயானால், நீ பிரம்மமாகவே ஆகிறாய்.

நல்லியல்புகளின் உருவமாகவே மாறிவிடு. எப்பொழுதும் நற்செயல்களையே செய். தொண்டு செய், அன்பு காட்டு, மற்றவர்களுக்குக் கொடு. மற்றவர்களுக்கு இன்பத்தைக் கொடு. மற்றவர் களுக்குத் தொண்டு செய்வதற்கென்றே வாழ்.

அப்பொழுது உனக்கு இன்பமே விளையும். உனக்குச் சாதகமான, வாய்ப்புகளும், சூழ்நிலைகளும் ஏற்படும். நீ மற்றவர்களுக்குத் துன்பம் செய்தால், மற்றவர்களைப் பற்றிப் புரளி கிளப்பினால், அவர்களிடம் குறும்பு செய்தால், அவர்களைத் தூற்றினால், கோள் சொன்னால், மற்றவர்களுடைய பொருள்களைப் பறித்துக் கொண்டால், நேர்மையற்ற முறையில் மற்றவர் பொருளை உனதாக்கிக்கொண்டால் மற்றவர் களுக்குத் துன்பம் கொடுக்கும் செயல்களைச் செய் தால், உனக்குத் துன்பமே விளையும். உனக்கு சாதகமற்ற சூழ்நிலைகளும், சந்தர்ப்பங்களும், வாய்ப்புகளுமே உண்டாகும். இதுதான் இயற்கை யின் விதி. உன்னுடைய நல்ல அல்லது தீய இயல்பை, உன்னுடைய உயர்ந்த அல்லது தாழ் வான எண்ணங்களால், உருவாக்கிக் கொள்வதைப் போல, உனக்குச் சாதகமான அல்லது சாதகமற்ற சூழ்நிலைகளை உன்னுடைய நல்ல அல்லது தீய செயல்களால் உருவாக்கிக் கொள்ளலாம். பகுத் தறியும் தன்மையுடைய ஒருவன் எப்போதும் விழிப் புடனும், கவனமாகவும், பின் வருவதை உணரும் அறிவுடனும் இருப்பான். அவன் தன் எண்ணங் களை எப்போதும் எச்சரிக்கையுடன் கவனித்துக் கொள்கிறான். தன்னையே ஆராய்ந்து கொள்கிறான். தன் மனமாகிய தொழிற்சாலையில் என்ன நடந்து கொண்டிருக்கின்றது என்பதையும், ஒரு குறிப்பிட்ட சமயத்தில் எந்த மாதிரியான குணம் மேலோங்கி நிற்கின்றது என்பதையும் நன்கு அறிவான். அவன் எந்த தீய குணத்தையும் தன் மனமாகிய தொழிற் சாலையின் வாயிலில் நுழைந்து உள்ளே செல்வதற்கு எப்பொழுதும் அனுமதிப்பதில்லை. அவ்வப் பொழுது அவைகளை முளையிலேயே கிள்ளி எறிந்து விடுகிறான்.

மனமாகிய பாம்பு படமெடுத்தாடும்போது பகுத்தறிவாகிய தடியால் அதை அடித்து அடக்கி விடுகிறான். ஒரு கோட்டையின் காவல்காரன் தன்னுடைய எதிரியின் படைவீரர்கள் கோட்டைக் குள் நுழைய முயலும் போது தன்னுடைய வாளால் ஒவ்வொருவராக வெட்டித்தள்ளுகிறான். அவ்வாறே மனமாகிய கோட்டைக்குள் நுழைய முயலும் தீய எண்ணங்களைத் தன் பகுத்தறிவாகிய வாளால் வெட்டி எறிகிறான். பின்னர் தன் மனதில் நற் பண்பை உருவாக்குகிறான். அவன் கவனத்துடன் சிறிதளவே பேசுகிறான். இனிமையான, அன்போடு கூடிய வார்த்தைகளையே பேசுகிறான். மற்றவர் களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தும் கடும் சொற் களை அவன் ஒருபொழுதும் பயன்படுத்துவதில்லை. அவன் மௌன விரதத்தைப் பயில்கிறான். பொறுமை, கருணை, பரந்த அன்பு ஆகியவற்றை வளர்த்துக் கொள்கிறான். உண்மையே பேசுகிறான். நாக்கையும், பேசுவதற்குத் தூண்டும் உணர்வையும் அடக்கி வைத்திருக்கிறான். அவன் அளவோடு பேசு கிறான்; அளவோடு எழுதுகிறான். அதனால் மற்ற மக்கள் மனதில் அவனைப் பற்றிய உயர்ந்த எண்ணம் ஆழமாகப் பதிகின்றது. அவன் எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றிலும் அகிம்சையையும் பிரம்மசரியத்தையும் கடை பிடிக்கிறான். அவன் நேர்மையுடனிருக்கப் பயில்கிறான். மனதில் சமநிலை யுடன் இருக்கவும், எப்பொழுதும் மகிழ்ச்சியுடனும் புன்சிரிப்போடும் இருக்கப் பழகுகிறான். மனம் மொழி, மெய் ஆகிய மூவகைகளிலும் கட்டுப் பாடோடு இருந்து, தன் செயல்களை அடக்கியாள் கிறான். அதனால் அவன் எப்பொழுதும் எவ்வித மான தீய செயலையும் செய்யமுடியாது.

எப்பொழுதும் இன்பத்தையே பரவச் செய்யும் ஒருவனுக்குத் தானும் இன்பத்தை பெறக் கூடிய

சூழ்நிலைகள் எப்பொழுதும் உருவாகும். மற்றவர்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் ஒருவன், இயற்கையின் விதிப்படி, தனக்குத் துன்பத்தையும் வருத்தத்தையும் கொடுக்கும் எதிரிடையான சூழ்நிலைகளையே பெறுவான். ஒரு மனிதன் தனக்குரிய பண்புகளையும் சந்தர்ப்பங்களையும் தனக்குத்தானே உண்டாக்கிக் கொள்கிறான். அவன் நல்ல எண்ணங்களின் உதவியால் தீய பண்புகளை நற்பண்புகளாக மாற்றிக் கொள்ளலாம். நமக்கு எதிரான சூழ்நிலைகளை நற்செயல்களின் உதவியால் நமக்குப்பயனுள்ள சூழ்நிலைகளாக மாற்றிக் கொள்ள முடியும். எனவே இயற்கையின் விதிகளை நன்கு உணர்ந்து கொண்டு, நல்லறிவோடும் மனமகிழ்ச்சியுடனும் விளங்குவாயாக.

ஒரு மனிதனுடைய ஆசைகளுக்கேற்றபடியே அவனுடைய பிறப்பும் சூழ்நிலையும் அமைகின்றன. பிராரப்தம் அவனுடைய ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ளும் சூழ்நிலைகளை உண்டாக்குகிறது. அவன் ஆசைப்படும் பொருள்கள் உள்ள இடங்களுக்கு அவனை இழுத்துச் செல்கிறது. ஒருவன் இந்தியாவிலுள்ள ஒரு ஏழைப் பிராமண குடும்பத்தில் பிறந்திருக்கலாம். அவன் கோடீஸ்வரனாக ஆசைப்பட்டால், அடுத்த பிறவியில் அமெரிக்க நாட்டில் பிறக்கலாம். இந்தியாவில் ஏழைக் குடும்பத்தில் பிறந்த அறிவாளியான சிறுவன், இங்கிலாந்து நாட்டுக்குச் சென்று, ஐ. சி. எஸ். தேர்வு எழுத ஆசைப்பட்டால், அவனுடைய ஆசை இப்பிறவியில் நிறைவேறாது. இங்கிலாந்து நாட்டில் அளவு கடந்த செல்வம் படைத்த பெண்மணி ஒருவர் இருந்து, அறிவாளியான ஒரு மகனைப் பெற வேண்டும் என்று மிகவும் ஆசையுள்ளவளாக இருந்தால், அடுத்த பிறவியில் அந்த ஏழை இந்தியன் இந்தப் பெண்மணியின் மகனாகப் பிறக்கலாம்.

அப்போது அவனுடைய பழைய ஆசை நிறைவேறும். மனிதனுடைய ஆசையின் தன்மைக்கேற்றபடி, அவனுடைய பரிணும வளர்ச்சிக்கும் மேன்மைக்கும் உதவும் வகையில், பொருத்தமான சூழ்நிலேகளே இறைவன் உருவாக்குகிருர்.

ஒரு பணக்காரன் அடர்ந்த காட்டில் அலேந்து திரிந்து எங்கும் தண்ணீர் கிடைக்காமல் தாகத்திஞல் மிகவும் வருந்திக் கொண்டிருக்கும் போது, ஒரு ஆடு மேய்க்கும் சிறுவன் அவனுக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுக்கிருன் என்று வைத்துக் கொள்ளலாம். அந்தச் சிறுவன், தான் செய்த சிறிய நற்செயலின் காரணமாக அடுத்த பிறவியில் அந்தச் செல்வந்தரின் மகனுகப் பிறக்கலாம். முற்பிறவியில் இடைச் சிறுவனுக இருந்ததன் காரணமாக அறியாமையோடு கூடியவனுகக் கூட இருக்கலாம். ஒரு மனிதனுடைய ஆசையின் தன்மைக்கேற்றபடி அவனுடைய சூழ்நிலே அமைகின்றது. அவனுடைய ஆசை அவன் ஆசைப்படும் பொருள்களே எங்கு அடைய முடியுமோ அங்கு அவனே இழுத்துச் செல்கின்றது. இதுதான் இயற்கையின் விதி. புனிதமான எண்ணங்களே உடையவனுக இரு. அப்பொழுது நீ புனிதமான சூழ்நிலேயுள்ள உத்தரகாசி, இமயமலே, வாரணுசி போன்ற இடங்களேச் சென்றடைந்து தவம், சாதனே, தியானம் ஆகியவைகளே அங்குள்ள புனிதமான பெரியோர்களுக்கிடையே மேற்கொண்டு, ஆன்மீகத் தெளிவைப் பெறலாம். நீ தீய ஆசைகளே உடையவனுக இருந்தால், பாரிஸ், ஹாலிவுட் போன்ற சினிமாக்களும், உணவுச் சாலேகளும், நடன அரங்குகளும் நிறைந்த பாவம் மலிந்த இடங்களேயே அடைவாய். புனிதமான ஆசைகள், புனிதமற்ற ஆசைகள் இவற்றில் எதை வேண்டுமாஞலும் தெரிந்து எடுத்துக்கொள்வது உன்

கையில்தான் இருக்கின்றது. பாரிஸ் நகரத்துத் தெருக்களில் மனித மிருகமாக அலைந்து திரிய விரும்பினால், புனிதமற்ற தீய ஆசைகளைத் தேர்ந்தெடுத்துக்கொள். தெய்வீகப் புகழோடு பிரகாசித்துக்கொண்டு, மனித தெய்வமாக விளங்க வேண்டுமானால், புனிதமான ஆசையையே தெரிந்தெடுத்துக்கொள்.

டாக்டர். எம். எச். சையது, எம். ஏ., பிஎச், டி. டி. லிட் என்பவர் தம்முடைய ''இந்து மனம்'' என்ற நூலில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார். ''என்றும் நிலைத்திருக்கும் காரண காரியத் தத்துவமாகிய கர்ம விதியைப் பற்றிய தவறான கருத்து இந்து மக்களின் அன்றாட வாழ்க்கையில் மிகப் பெரிய தீங்கை விளைவித்துள்ளது. அது ஒரு பயங்கரமான கொள்கை என்றும், மனித முயற்சியை ஸ்தம்பிக்கச் செய்கிறது என்றும், நேர்மையானவையும் சரியானவையுமான செயல்களை நடைபெறாமல் தடுக்கிறது'' என்றும் கூறப்படுகிறது. எளிதில் விளங்கும்படிச் சொல்லப் போனால் இந்தக் கொள்கை எதிர் காலத்தில் நடக்கப்போவதை முன்னரே தீர்மானித்து விடுகிறது. மனிதன் இறந்த காலத்தில் தான் செய்த செயல்களுக்கேற்றபடி நிகழ்காலத்தில் பயனை அடைகிறான் என்று நம்பப்படுகிறது. துன்பமும் வருத்தமும், இன்பமும், மகிழ்ச்சியும், வெற்றியும் தோல்வியும் அமைந்த நிகழ்காலம், அவனுடைய கடந்தகால வாழ்க்கையில் அவன் செய்த செயல்களைப் பொருத்து முன்னரே தீர்மானிக்கப்படுகிறது. அதை அவனால் எவ்விதத்திலும் மாற்றி அமைக்க முடியாது. எனவே அவன் முற்றிலும் செயலற்றவனாய் இருந்து கொண்டு, தன்னுடைய வாழ்க்கையையும் மற்றவர்களுடைய வாழ்க்கையையும் முன்னேற்றமடையச் செய்யும்

முயற்சியில் காலத்தை வீணக்கக்கூடாது என்றும் கருதப்படுகிறது.

மேலே கூறப்பட்டுள்ள கருத்தில் ஓரளவு தான் உண்மை இருக்கின்றது. அதில் ஓரளவுக்கு உண்மையை உணர்ந்து அதைப் பின்பற்றுகிறுர்கள். அதிலுள்ள முழு உண்மையையும் நன்கு உணர்ந்து கொள்ளாவிட்டால், பெரும் குழப்பம் ஏற்பட்டு மிக்க தீங்கு விளைவதற்குக் காரணமாக அமையும். இந்திய நாட்டு மக்கள் தங்கள் இழிநிலையிலிருந்து உயர்ந்து, அடிமைத் தளையிலிருந்து விடுதலை பெற வேண்டுமானுல், மனிதகுலம் முழுவதும் இவ்வுலக வாழ்க்கையில் முன்னேற்றம் அடைய உதவும் கர்ம விதியின் ஆற்றலைப் பற்றியும், நம்முடைய செயல்களின் தத்துவம், உண்மைப் பொருள் ஆகியவற்றைப் பற்றியும் தெளிவாக உணர்ந்து கொள்ள முயல வேண்டும்.

''ஒரு மனிதனுடைய இன்றைய ஆற்றல்கள் அனைத்தும் அவனுடைய முற்பிறவி எண்ணங்கள், செயல்கள் ஆகியவற்றின் நேரடியான விளைவுகளே என்பது உண்மைதான்; அவனுடைய நினைவாற்றல், உடற்கூறு, மனத்தையும் ஒழுக்கத்தையும் சார்ந்துள்ள உணர்வுகளும் ஆற்றல்களும் முற்பிறவிகளில் அவனுக்கிருந்த எண்ணங்கள், உணர்வுகள் ஆகியவற்றின் விளைவுகளே. நீண்ட காலம் தன்னுடைய வயலில் பாடுபட்டால்தான் ஒரு விவசாயி நல்ல அறுவடை செய்ய முடியும். அவன் நிலத்தை நன்கு உழுது, விதை விதைத்து, நீர் பாய்ச்சி, எருவிடாவிட்டால், தன் உழைப்பின் பயனை அனுபவிக்க முடியாது. இன்று விதைப்பதை நாளை அறுவடை செய்யலாம். இது மாற்ற முடியாத விதி. இதற்கு விதிவிலக்கே கிடையாது. இறந்த காலச் செயல்களால் நிகழ்காலத்தில் மேற்

கொள்ள விரும்பும் முயற்சிகள் தடைபடும் என்பது நேற்று விதை விதைத்ததால் இன்று புதிய விதை களை விதைக்க முடியாது என்று சொல்வதைப் போன்று ஆதாரமற்றதும் உண்மையல்லாததுமான கூற்ருகும். சுதந்திரமான உள்ளத்தை இறந்தகாலச் செயல்களால் அடக்கி ஒடுக்கமுடியாது என்பதுதான் உண்மை. ஆனால் மனிதன் தான் விரும்பும் எல்லா வற்றையும் காலதாமதமின்றி உடனே அடைய முடியாது. ஒவ்வொருக்கும் தேவையானதை உரிய காலத்தில் இந்த விதி கொடுக்கிறது. இந்த விதி தன்னுடைய நெறியின்படிதான் செயல் படும். இறந்த காலச் செயல்கள், எண்ணங்கள், உணர்வுகள் ஆகியவை நம் விருப்பப்படி தேர்ந் தெடுத்து மேற்கொண்ட காரியங்களின் விளைவு களாகவே நமக்குத் தோன்றுகின்றன. அது போன்றே உரிய காலத்தில் உறுதியாகப்பயனளிக்கக் கூடிய செயல்முறையைத் தெரிந்தெடுத்துக் கொள்வதில் நமக்கு எவ்விதமான தடையோ இடையூருே கிடையாது. ஒரு மனிதன் இறந்த காலத்தில் தான் பட்ட கடனுக்கும் ஏற்படுத்திக் கொண்ட உடன்பாடு அல்லது ஒப்பந்தத்துக்கும் கட்டுப்பட்டவன். இந்த பாக்கி அல்லது கடன்களைத் தீர்த்த பிறகு மீண்டும் புதிய கடன்களை உண்டாக்கிக் கொள்ளும் சுதந்திரம் அவனுக்கு இருக்கிறது. தவிர்க்க முடியாதவற்றை மாற்றும் சக்தி அவனுக்கு இல்லை. எனவே இந்த விதியை நியாயமானது என்று ஒத்துக் கொண்டால், அதைப் பற்றிக் குறை கூறுவதற்கு எவ்விதமான காரணமும் கிடையாது. உருவாகிக் கொண்டிருக்கும் கர்மத்தை அவன் விரும்பிய வண்ணமே செய்வதற்கு எந்த விதமான தடையும் இல்லை. காரண காரிய தத்துவத்தினல் அவனுக்கேற் பட்டுள்ள பாதுகாப்பினுல், தான் விரும்பியதை அடைய அறிவுள்ள முறையில் முயற்சி செய்யலாம்.

நன்னெறியில் அவன் மேற்கொண்டுள்ள முயற்சிகளின் பலனை விரைவாகவோ அல்லது காலம் தாழ்ந்தோ அடைவது உறுதி. இயற்கையில் எந்த விதமான இழப்பும் இல்லை. ''இயற்கையின் விதிகளுக்கு அடங்கி நடப்பதன் மூலம் அதை வெல்லலாம்,'' என்று பேகன் என்ற அறிஞர் கூறுகிறார். இங்கு இயற்கை என்பது நம் வாழ்க்கையையும் செயல்களையும் கட்டுப்படுத்தும் இயற்கையின் விதியைக் குறிக்கின்றது. இந்த விதி நமக்கு நண்பனாகவும், துணைவனாகவும் இருப்பதற்கேற்ற முறையில் நாம் செயல்பட வேண்டும். அதை நமக்கு பகைவனாக்கிக் கொள்ளக் கூடாது. இந்த விதியில் கூறப்பட்டுள்ள நிபந்தனைகளை சிறிதும் தவறாது அனுசரிக்கும் வரையில், எத்துறையிலும் நமக்கு வெற்றி கிட்டுவதோடு, அதன் விளைவாகிய ஆன்மீக முன்னேற்றமும் நாம் பெறுவது உறுதி.

கர்மவிதியின் மூன்று பிரிவுகளைப் பற்றித் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். முதல் வகை சஞ்சித கர்மம் எனப்படும். இதற்குமுன் நாம் எடுத்துள்ள பிறவிகள் அனைத்திலும் நாம் செய்த நற்செயல்கள், தீச்செயல்கள் ஆகியவையும் அல்லது நல்லது, கெட்டது ஆகிய இரண்டையும் பிரித்தறியும் உணர்வு பெற்று நாமே செயல்படத் தொடங்கியதிலிருந்து நாம் செய்த இருவகைப்பட்ட செயல்கள் அனைத்தும் ஒன்றாகச் சேர்த்து வைக்கப்பட்டுள்ள சேமிப்பு அறை என்றே அதைக் கூறலாம். அவை முழுவதும் பதிவு செய்யப்பட்டு பத்திரமாக வைக்கப்பட்டுள்ளன. மாற்ற முடியாத கர்ம விதிக்கு நாம் கட்டுப்பட்டுள்ள போது அது வேறு எவ்விதமாக இருக்க முடியும்? இரண்டாவது வகை பிராரப்தம் எனப்படும். அது தவிர்க்க முடியாத கர்மம் ஆகும். அது முற்பிறவிகளில் நம்மோடு உறவு கொண்டிருந்த மக்கள், பொருள்

கள் ஆகியவற்றின் தொடர்பாக இப்பிறவியில் நம்மால் அனுபவிப்பதற்காகத் தீர்மானிக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கும் கர்மத்தின் பகுதியாகும். அது நன்ருக முதிர்ந்த கர்மம் எனவும் சொல்லப்படும். ஏனெனில் அது காலம் தவறிய கடன் போன்றதாகும். நாம் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும் நம்முடைய துன்பம் அல்லது துயரம், வெற்றி அல்லது தோல்வி ஆகியவற்றின் மூலமாகச் சல்லியளவும் குறையாமல் அதைத் திருப்பிச் செலுத்தியாக வேண்டும். மூன்ருவது வகை கிரியமான் எனப்படும். அது தற்சமயம் உருவாகிக் கொண்டிருக்கும் கர்மமாகும். அது நம் சுயேச்சையான உள்ளத்தைச் சில கட்டுப்பாடுகளுடன் வைத்திருந்து நமக்கு வெற்றியை உறுதியாக அளிக்கும். மனிதன் இறைவனின் உருவத்தில் படைக்கப்பட்டு, தெய்வீக வாழ்க்கையில் பங்கு கொள்வதால், அவன் விரும்பிய வண்ணமே செயல்படலாம். அது போன்றே, அவன் தீவிரமாகக் கொள்ளும் ஆசைகளைக் காலப் போக்கில் உறுதியாக நிறைவேற்றிக் கொள்ளலாம்.

''நேர்மையான செயலைச் செய். ஏனெனில் செயல்படுவதே செயலற்ற நிலையைவிட மேலானது. செயலற்ற நிலையில் உன் உடம்பைப் பேணுவது கூட முடியாமற் போகும்''.

''ஒரு தனி மனிதனுக்கு உண்மையாயிருப்பது ஒரு இனத்துக்கும் உண்மையாக இருக்கும். தனி மனிதர்கள் பலர் சேர்ந்ததுதான் ஓர் இனம். சிறிய பொருள்களைப் போன்ற இயல்புடையவையே பெரியவையும் என்று ஹெர்மிஸ் என்பவர் கூறுகின்ருர்.

தனி மனிதனைப் போன்றே ஓர் இனம் அல்லது நாட்டின் மொத்த கர்மமும் அமைந்திருக்கும். ஒரு நாடு அல்லது மக்கட் கூட்டத்தின் மொத்த கர்மத்திற்கும் தனி மனிதனின் கர்மத்திற்கும் அதிக வேறுபாடுகள் இல்லை. அவற்றுக்கு அடிப்படையாக அமைந்துள்ள கொள்கைகளும் விதிகளும் ஒன்றாகவே இருக்கும். பல்வேறு இனங்கள் தோன்றுவதும் மறைவதும் சாம்ராஜ்யங்கள் உருவாவதும், சின்னாபின்னமடைவதும் ஒரே அடிப்படையில் தான் அமைந்துள்ளது. எனவே ஒரு நாட்டின் அறிவாளியான தலைவன் இந்தக் கர்ம விதியின் ஆற்றல் மிக்க ஆளுகையைப் புறக்கணிக்கக் கூடாது.

நாட்டிற்கு ஒரு பெரும் தீங்கு நேரும்போது, நமக்கு வரக் கூடாத தீங்கு எப்பொழுதும் வராது என்ற எண்ணம் நமக்கிருக்க வேண்டும். அந்தத் தீங்கிற்கு அண்மையான காரணம் நமக்குத் தெரியாமலிருக்கலாம். அதனால் போதுமான காரணமின்றி அந்தத் தீங்கு ஏற்பட்டுள்ளது என்று நாம் கருதி விடக் கூடாது.

சென்ற ஓராயிரம் ஆண்டும் அதற்கு மேலாகவும் பலவிதமான தீங்குகள் ஏற்பட்டுள்ளதைக் கண்டிருக்கிறோம். பாரதபூமியில் மிகவும் இழிவானவையும் உள்ளத்தை உருக்கக் கூடியவையுமான பல நிகழ்ச்சிகள் நடந்து, நாட்டை அழித்து, நாட்டு மக்களின் விலையுயர்ந்த பொருள்களும் அதற்கு மேலும் அவர்களின் ஒப்பற்ற உயிர்களும் பறிக்கப்பட்டுள்ளன.

நம் வாழ்நாளில் நடந்த நிகழ்ச்சிகள் நம்முடைய நினைவில் ஆழமாகப் பதிந்துள்ளன. அவற்றைப் பற்றி மீண்டும் நினைவூட்டத் தேவை இல்லை. இந்த உள்ளத்தை உருக்கும் நிகழ்ச்சிகளும், பெரும் தீங்குகளும் போதுமான காரணமின்றியா

நடைபெற்றன? இல்லை. உண்மையானவையும், நியாயமானவையுமான விதிகளுக்குப் புறம்பான முறையில் நமக்கு எதுவும் நடைபெறாது. அறியாமையின் காரணமாக அவைகளுக்கான சரியான காரணத்தைச் சரியாகவும் தெளிவாகவும் அறிய முடிவதில்லை. ஆனால் ஒன்று மட்டும் உறுதி. நமக்கும் நம் நாட்டுக்கும் வரக் கூடாத தீங்கு எப்பொழுதும் நடைபெறாது என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

நமக்கிருக்கும் அக்கறையின்மை, பொறுப்பற்ற தன்மை, நாட்டுப் பற்றின்மை, சாதி மத வேறுபாடுகள், வெறுப்பு, சந்தேகம், சண்டை சச்சரவுகள் ஆகியவைதான் நம்முடைய நிகழ்கால, இறந்தகால இழிவான நிலைக்கு முக்கியமான காரணங்களாகும்.

நம்முடைய கர்மத்தின் மொத்த ஆற்றல் தெய்வ நீதியின் கடும் சினத்தை நமக்கெதிராகத் தூண்டியதால், நம் தீய செயல்களுக்கேற்ற பயன் ஏற்பட்டது. அதன் பயனாக அதற்கேற்ற முறையில் நாம் துன்பப்பட்டோம். ஆகையால் இனிமேல் பின்வருவதை நன்கு எதிர்நோக்கி, இறந்த காலத்து அனுபவத்தையும் இழிவையும் சிந்தித்துப் பார்த்துச் சரியான வழியில் உள்ளத்தில் முழு உறுதியோடும் செயல்படவேண்டும். காலப் போக்கில் நம்முடைய வீழ்ச்சி, அடிமை நிலை ஆகியவை மறைந்து மீண்டும் விடுதலை பெற்று, நம்முடைய முன்னோர்களைப் போன்ற உன்னத நிலையை அடைவோம்.

## 18. காரண அல்லது ஆதார விதி

இயற்கையில் நடைபெறும் விந்தையான நிகழ்ச்சிகளெல்லாம் கர்மவிதி என்று அழைக்கப்

படும் பொதுவான ஆதாரவிதி அல்லது காரண விதியை அடிப்படையாகக் கொண்டு நடைபெறு கின்றன. இந்த ஆதாரவிதி இந்தப் பிரபஞ்சத்துக் குள்ளே இணைப்பையும் முறையான அமைப்பையும் ஏற்படுத்துகின்றது. பௌதிக உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகளையும் செயல்களையும் போலவே மனிதனு டைய செயல்கள் அனைத்தும் இந்த விதிக்குக் கட்டுப் பட்டவை. ''கர்மம்'' என்னும் சொல் ''செயல் படுதல்'' என்று பொருள்படும். வடமொழியிலுள்ள ''க்ரி'' என்னும் சொல்லிலிருந்து பிறந்தது. அது செயலைக் குறிக்கிறது. உடல் அல்லது மனம் செயல் படுவது ''கர்மம்'' எனப்படும். எண்ணமும் கர்மம் எனப்படும் செயலைப் பின் தொடரும் எதிர்ச் செய லும் கர்மம் எனப்படும்.

கர்மம் என்பது விரிவான பொருளுடைய சொல்லாகும். கவர்ச்சி, எதிர்ப்பு, சுவாசித்தல், புவிஈர்ப்பு, பேசுதல், நடத்தல், பார்த்தல், கேட்டல், உண்ணுதல், உணர்தல், எண்ணுதல், ஆசைப்படுதல், நினைத்தல் ஆகிய உடல், மனம், புலன்கள் ஆகியவற்றால் நடக்கும் செயல்கள் எல்லாம் கர்மம் எனப்படும். கர்மம் என்பது காரணம், காரியம் ஆகிய இரண்டையும் குறிக்கும்.

இயற்கையின் மற்றெல்லா விதிகளும் இந்த அடிப்படை விதிக்கு அடங்கியவையாகும். சூரியன் பிரகாசிப்பதும், காற்று வீசுவதும், நதி ஓடுவதும், மரங்கள் மலர்ந்து காய்ப்பதும், மனம் எண்ணு வதும், உணர்வதும், விரும்புவதும், மூளையும் இதயம், நுரையீரல், மண்ணீரல், சிறுநீரகங்கள் ஆகிய மற்ற உறுப்புக்களும் இணைந்து செயல்படு வதும் இந்த ஆற்றல் மிக்க காரண காரிய விதிக்குக் கட்டுப்பட்டுத்தான். உடலளவிலும் மனத்தளவிலும்

இந்த மகத்தான விதி எங்கும் செயல் படுகிறது. இந்த சக்தி வாய்ந்த விதியின் கட்டுப்பாட்டிலிருந்து எந்த நிகழ்ச்சியும் தப்ப முடியாது.

விதைக்கு ஆதாரம் மரம். அந்த விதையே மீண்டும் மரத்துக்கு ஆதாரமாகிறது. தந்தை மகனைப் பெறுகிருர். பிறகு அந்த மகனும் தந்தையாகிருன். காரணம் காரியத்திலும், காரியம் காரணத்திலும் காணப்படுகிறது. கர்ரியம் காரணத்தைப் போன்றே செயல்படுகின்றது. இது தான் முடிவற்ற காரண காரிய சங்கிலித் தொடராகும். இந்த சங்கிலியிலுள்ள எந்தக் கண்ணியும் பயனற்றதல்ல. இந்த அடிப்படையான, இன்றியமையாத விதியின் உதவியால்தான் உலகம் நடைபெறுகிறது. இந்த விதியை மாற்றவோ தடுக்கவோ முடியாது.

விஞ்ஞானிகள் இயற்கையில் நடக்கும் விந்தையான நிகழ்ச்சிகளை உற்றுக் கவனித்து, இயற்கையில் நடைபெறும் எல்லா வகையான நிகழ்ச்சிகளுக்கும் உரிய சரியான காரணங்களைக் கண்டறிய முயற்சி செய்கிருர்கள். வானவியல் அறிஞர் தன்னுடைய ஆராய்ச்சி சாலையிலுள்ள ஆற்றல்மிக்க பெரிய தொலை நோக்கியின் முன்னே அமர்ந்து கொண்டு, பரந்த வானவெளியை உற்று நோக்கி, கோள்களையும், விண்மீன்களையும் மிகவும் கவனமாக ஆராய்கிருன். இயற்கையின் விந்தையான நிகழ்ச்சிகள் ஏற்படுவதற்கான உண்மையான காரணங்களைக் கண்டறிய முயலுகிருன். சிந்தனையாளனை தத்துவ ஞானி ஆழ்ந்த சிந்தனையிலமர்ந்து, இந்த உலகம், அதிலுண்டாகும் வருத்தங்கள், துன்பங்கள், பிறப்பு, இறப்பு ஆகிய நிகழ்ச்சிகள் ஆகியவைகளுக்கான காரணங்களைக் கண்டறிய முயலுகிருன்.

எந்த நிகழ்ச்சியும் அதன் பின்னே உண்மை யானதும், குறிப்பிடத்தக்கதுமான ஒரு காரண மில்லாமல் நடைபெறுது. போர் மூளுதல், வால் நட்சத்திரம் தோன்றுதல், நில நடுக்கம், எரிமலை வெடித்தல், இடி, மின்னல், வெள்ளம், உடல் நோய்கள், அதிர்ஷ்டம், துரதிர்ஷ்டம் ஆகியவைகள் தோன்றுவதற்குத் தக்ககாரணங்கள் இருக்கின்றன.

உனக்கு முதுகுப்பிளவை தோன்றுவதற்கும், காலில் எலும்பு முறிவதற்கும் முற்பிறவியில் செய்த ஏதாவதொரு தீய கருமம்தான் காரணம் என்பது தெளிவு. அந்தத் தீய கருமம்தான் காரணம். முதுகுப் பிளவை அல்லது எலும்பு முறிவுதான் காரியம் அல்லது விளைவு. இந்தப் பிறவியில் உனக்கு ஏதாவது நல்ல அதிர்ஷ்டம் ஏற்பட்டால் முற்பிறவி களில் நீ செய்துள்ள நற்செயல்தான் அதற்குக் காரணமாகும்.

தற்செயலான அல்லது எதிர்பாராத நிகழ்ச்சி என்பது ஒன்றும் கிடையாது. ஒரு குறிப்பிட்ட எதிர்பாராத நிகழ்ச்சிக்கான காரணம் உனக்குப் புரியாவிட்டால், அது மறைந்துள்ளது; அதைப்பற்றி உனக்குப் புரியவில்லை. இந்தக் காரண காரியவிதி மிகவும் விந்தையானது. எனவேதான் கிருஷ்ண பகவான் ''கர்மத்தின் பாதை விந்தையானது'' என்று கூறியுள்ளார்.

குறிப்பிட்ட எல்லைக்குட்பட்ட உன் மனத்தால் ஒரு தற்செயலான நிகழ்ச்சி அல்லது வேறு ஏதாவ தொரு நிகழ்ச்சிக்குரிய காரணத்தைக் கண்டுபிடிக்க முடியாவிட்டால், அந்த நிகழ்ச்சி ஏற்படுவதற்குரிய காரணமே இல்லை என்று அர்த்தமில்லை.

இயற்கையிலுள்ள பௌதிக, மன ஆற்றல்கள் அனைத்தும் இந்த மேலான காரண காரிய விதிக்குக் கட்டுப்பட்டு நடக்கின்றன. இந்த விதியும் அதை

இயற்றியவரும் ஒன்றுதான். இந்த விதியும் இறைவனும் ஒன்றே. இயற்கையும் அதன் விதிகளும் ஒன்று தான். புவி ஈர்ப்பு, கூட்டமைப்பு, ஒன்றுபடுதல், கவர்ச்சி, விலகல், விருப்பு, வெறுப்பு ஆகிய பூத உலகத் தொடர்பான விதிகளும், தொடர் இயக்கம், தொடர்பு ஆகிய மனத்தளவிலான விதிகளும் காரண காரிய விதியின்படி ஒரு சிறிதளவும் தவறுமல் செயல்படுகின்றன. மிக நுண்ணியதான எலக்ட்ரானின் அசைவிலிருந்து ஆற்றல் மிக்க கோள் ஒன்றின் சுழற்சி வரையிலும், மாங்காய் ஒன்று தரையில் வீழ்வது முதல் ஒரு யோகியின் ஆற்றல் மிக்க எண்ணம் வரையிலும், விளையாட்டுப் போட்டியில் ஓடும் ஒருவரின் அசைவு முதல் நுண்ணிய விண்வெளியிலுள்ள ரேடியோ அலைகளின் அசைவு வரையிலும், தந்தி வழியே ஒரு செய்தியை அனுப்புவது முதல் எண்ணவுலகில் ஒரு யோகி ஒரு செய்தியை வேறொருவர் மனதில் தோன்றும்படிச் செய்வது வரையிலும், உள்ள ஒவ்வொரு நிகழ்ச்சியும் காரண காரிய விதியோடு நன்கு இணைந்து, இசைந்து செயல்படும் மறைமுகமான ஒரு ஆற்றலின் விளைவுதான்.

இந்த விதியை ஆழ்ந்து கவனிப்பதால், நம்பிக்கை இழந்த ஒரு மனிதனுக்கும் மனச் சோர்வுடன் வருந்திக் கொண்டிருக்கும் மனிதனுக்கும் புத்துணர்ச்சி உண்டாகிறது. ஒரு மனிதனுடைய எண்ணங்கள், பழக்கங்கள், குணம் ஆகியவற்றால் தான் அவன் தலைவிதி உண்டாக்கப்படுகிறது. ஆகையால் அவன் எண்ணங்களையும் பழக்கங்களையும் மாற்றிக் கொள்வதால் தவறைத் திருத்திக் கொண்டு முன்னேற்றம் அடைவதற்கு வாய்ப்பிருக்கின்றது. 'ஒரு அயோக்கியன் ஞானியாக மாறலாம்; நெறிகெட்ட பெண் கற்புள்ள பெண்ணாக மாறலாம்; பிச்சைக்காரன் அரசனாகலாம்.' ஆற்றல்

மிக்க கர்ம விதிக்கு இவ்வளவு ஆற்றல் உண்டு. உலகத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகளுக்கு அழகான முறையில் விளக்கத்தைக் கர்மவிதி அளிக்கிறது. உலகத்தில் ஒருவன் பணக்காரனாக இருக்கும்போது மற்றொருவன் ஏன் ஏழையாக இருக்கிறான்? ஒருவன் கொடியவனாக இருக்கும்போது மற்றொருவன் ஞானியாக ஏன் இருக்கிறான்? ஒருவன் முட்டாளாகவும் மற்றொருவன் மிகவும் சிறந்த அறிவாளியாகவும் இருக்கக் காரணம் என்ன? ஒருவன் உடல் ஊனத்துடனும் மற்றொருவன் உடலுறுதியுடனும் நலத்துடனும் ஏன் இருக்கிறான்? இந்த வேறுபாடுகளை எவ்வாறு விளக்கப் போகிறாய்? கர்மம்தான் இவைகளுக்கெல்லாம் காரணம். இறைவன் ஒருக்காலும் அநியாயமாகவோ ஒரு தலைப் பட்சமாகவோ நடக்கவே மாட்டார்.

இந்த உலகம் நல்லது, கெட்டது ஆகிய இரண்டும் கலந்தது. ''நன்மை, தீமை, இரண்டும் கலந்தது என்று மூவகைப் பட்டதுதான் கர்மபலன் துறக்காதவனுக்கு'' என்று பகவான் கீதையில் கூறுகிறார்.

இவ்வுலகில் முற்றிலும் நல்லதாகவோ, முற்றிலும் தீயதாகவோ எப்பொருளும் இருக்க முடியாது. உனக்கு வசதியும் இன்பமும் கொடுப்பதும், உலகுக்கும் மற்றவர்களுக்கும் உனக்கும், நன்மை செய்வதும், நல்லது. உனக்கு வசதியற்ற நிலையும், இடைஞ்சலும், துன்பமும் வருத்தமும் உலகுக்கும் உன் அயலானுக்கும் நன்மை தராமலிருப்பதும் தீயது. சிலருக்குத் துன்பமும் வருத்தமும், மற்றவர்களுக்கு இன்பமும் தருவது நன்மை, தீமை இரண்டும் கலந்தது.

நீ செய்யும் ஒவ்வொரு செயலும் இருவகையான விளைவுகளை உண்டாக்குகிறது. இது உன் மனதில் ஆழமாகப் பதிகின்றது. நீ இறக்கும்

பொழுது கர்மாசயம் அல்லது உன் அடி மனத்திலுள்ள வேலைகளைப் பதிவு செய்யும் பகுதியிலுள்ள இந்த அடையாளத்தை உன்னுடன் எடுத்துச் செல்கிறாய். அது உலக முழுவதும் இந்த அடையாளத்தைப் பரவச் செய்கிறது. ஒவ்வொரு செயலும் அதற்குரிய சமமான ஆற்றலும் விளைவுமுள்ள எதிர் செயலை உன்னிடம் உண்டாக்குகிறது. மற்றொருவனுக்குத் துன்பமிழைத்தால், உனக்கே நீ துன்பம் செய்து கொள்கிறாய். இந்தத் தீயசெயல் உன்னிடம் எதிர்ச்செயலை உண்டாக்கி உனக்கே துன்பம் செய்யும். அதனால் உனக்குத் துன்பமும் வருத்தமும் உண்டாகும். வேறொருவனுக்கு நன்மை செய்தால், நீ உண்மையில் உனக்கே உதவி செய்து கொள்கிறாய்; உனக்கே நன்மை செய்து கொள்கிறாய். ஏனென்றால் எங்கும் நிறைந்திருப்பது ஆன்மாவைத் தவிர வேறொன்றுமில்லை. இந்த நற்செயல் அதற்குச் சமமான ஆற்றலுடனும் பயனுடனும் உன்னிடத்தில் செயல்படும். உனக்கு மகிழ்ச்சியும் இன்பமும் உண்டாகும். எனவேதான் ஞானிகளும், முனிவர்களும் தீர்க்கதரிசிகளும், நெறியாளர்களும் ''அயல்வீட்டானையும் உன்னைப் போல் நேசி. மற்றவர்கள் உணர்வுகளைப் புண்படுத்தாதே. அகிம்சா பரமோ தர்ம:—துன்பம் செய்யாமையே மேலான தர்மம். எல்லோருக்கும் நன்மை செய். மற்றவர்கள் உன்னை எவ்வாறு நடத்த வேண்டுமென்று விரும்புகின்றாயோ, அவ்வாறே நீயும் மற்றவர்களிடம் நடந்து கொள்'' என்று கூறுகின்றனர். இந்த விதியை நன்குணர்ந்தவன் மற்றவர்களுக்கு ஒருபொழுதும் தீங்கிழைக்க மாட்டான். அவன் நன்மையின் உருவமாகவே விளங்குவான்.

நீ ஒருவருக்குத் தீங்கிழைத்தால், அது பிரபஞ்சம் முழுவதையும் பாதிக்கின்றது. தீயதை மனதில் நினைத்தால் எண்ண உலகம் முழுவதும்

கெட்டு விடுகிறது. அதனுல்தான் ''நல்ல எண்ணங் களை உருவாக்கிக் கொண்டு, தீய எண்ணங்களைக் களைந்து விடு'' என்று அறிஞர்கள் கூறியிருக்கிருர் கள். ஒவ்வொரு எண்ணத்துக்கும் பின்னே ஒரு காரணம் இருக்கின்றது. மிகவும் அற்பமானதும் முக்கியமல்லாததுமான எண்ணமோ செயலோகூட உலக முழுவதையும் நேராகவோ அல்லது மறைமுக மாகவோ பாதிக்கின்றது. உலகுக்கு எப்போதும் நன்மையே செய்து கொண்டு, உயர்ந்த எண்ணங் களோடு இருக்கும் மேலான ஆன்மா இந்த உலகம் முழுவதுக்கும் வரப்பிரசாதம் ஆவார். அவர் இந்த உலகம் முழுவதையும் தூய்மைப் படுத்துகிருர்.

அரசாங்கத்தைப் பற்றிக் கிளர்ச்சியூட்டும் கட்டுரை ஒன்றை நீ எழுதுகிருய் என்று வைத்துக் கொள்ளலாம். அது படிப்பவர்களின் எண்ணங் களையும் உணர்ச்சிகளையும் தூண்டிவிடும். அதனுல் அவர்கள் அரசாங்கத்துக்கு எதிராக எதையாவது செய்வார்கள். அதன் காரணமாக பெருங் கலவரம் நிச்சயம் ஏற்படும். காவல் படையினர் வருவார் கள். பலர் துப்பாக்கியால் சுடப்படுவர். எதிர் காலத்தில் அம்மாதிரி கலவரங்கள் ஏற்படாமலிருக் கவும் அடக்கவும் பல சட்டங்கள் இயற்றப்படும். கலகத்தில் இறந்தவர்களின் பெற்றேர்கள் வருந்து வார்கள். உலகத்தின் மற்ற பகுதிகளிலுள்ள மக்களின் மனத்திலும் இக்கலகத்திஞல் விளைவுகள் ஏற்படும். உண்மையில் இந்த ஒரு நிகழ்ச்சியின் காரணமாக உலக முழுவதும் பாதிக்கப்படுகிறது. கிளர்ச்சியூட்டும் ஒரு கட்டுரை இவ்வளவு பயங்கர மான விளைவுகளை ஏற்படுத்துகிறது. ஒரு நிகழ்ச்சி ஒரே சமயத்தில் ஒரு காரணமாகவும், காரியமாக வும் இருக்க முடியும். முடிவற்ற சங்கிலித் தொட ராகிய காரண காரியம் எப்பொழுதும் நிலைத்திருக்

கிறது. இந்த இணைப்பு தேவையற்றது அல்லது பயனற்றது என்று உன்னால் சொல்ல முடியாது.

இந்த மகத்தான காரண காரிய விதியைப் பற்றி இப்பொழுது உனக்கு நன்றாகப் புரிந்திருக்கும். எனவே உன்னுடைய எண்ணங்களையும் பழக்கங்களையும் மாற்றிக் கொண்டு புதிய பண்பை உருவாக்கிக் கொள். நற்செயல்களைச் செய்வதாலும், உயர்ந்த தெய்வீக எண்ணங்களை வைத்திருப்பதாலும் நேர்மையான மனிதனாகவும் முனிவராகவுமே மாறி விடலாம். ஆன்மீக ஞானம் பெற்றவுடன், இந்த அற்பமான மனதை அழித்தவுடன், மூன்று விதமான குணங்களையும் அவஸ்தைகளையும் வென்று உன்னுடைய இயல்பான தன்மையிலே நிலை பெற்றிருக்கலாம். சட்டம் இயற்றுபவருடனேயே (இறைவனுடனேயே) ஒன்றுபடலாம். அதன்பின் காரண காரியவிதி உன்னைக் கட்டுப்படுத்தாது.

கண்ணுக்குப் புலப்படாதவனும் இச்சட்டத்தை இயற்றுபவனுமாகிய பிரம்மன் உனக்கு வழிகாட்டியாக விளங்கட்டும்! நீ அவனை இப்பிறவியில் அடைவாயாக!

## 19. செயல், எதிர்ச்செயல் பற்றிய விதி

மகத்தான காரண விதி என்பது செயல், எதிர்ச் செயல் விதி, ஈடு கட்டும் விதி, தண்டனை விதி ஆகியவற்றைத் தன்னுள் அடக்கி இருக்கிறது. இந்த விதிகள் அனைத்தும் எல்லாவற்றுக்கும் பொருத்தமான ''கர்ம தத்துவம்'' என்ற ஒரே தலைப்பின் கீழ் அடங்கும். ஒவ்வொரு செயலுக்கும் எதிர்ச்செயல் ஒன்று இருக்கின்றது. அந்த எதிர்ச் செயல் அதற்குச் சமமான ஆற்றலுள்ளதாயும்,

அதே தன்மையுடையதாயும் இருக்கும். அண்மையில் நடந்த உலகப் போர் பயங்கர விளைவை ஏற்படுத்தியிருக்கின்றது. அதனால் வியாபாரத்தில் மந்த நிலை ஏற்பட்டுள்ளது. நாட்டில் அமைதி இல்லை. மக்கள் மனத்தில் மகிழ்ச்சி இல்லை. பணச் சந்தை இறுகி விட்டது. அநேக உயிர்கள் பலியிடப் பட்டுவிட்டன.

நேர்மையான அரசன் இறந்தால் நாட்டில் பலத்த கிளர்ச்சி உண்டாகிறது. ஒவ்வொரு எண்ணமும் ஆசையும், மனப்பான்மையும், கற்பனையும் ஒரு விளைவை உண்டாக்கும். அறம் அதற்குரிய பரிசையும் அறமற்ற பண்பு அதற்குரிய தண்டனையையும் அளிக்கும். இதுதான் பிரதி பலன் அல்லது எதிர்ச்செயல் பணியாற்றும் முறை. நான் மற்றவர்களை இன்புறச் செய்தால், மற்றவர்களின் துயர் களைந்தால் நானும் மகிழ்ச்சியடைவது உறுதி. இதுதான் எதிர்ச்செயல். நான் ஒருவனைத் துன்புறுத்தினால், நான் மற்றொருவனுக்கு துயரமும் வருத்தமும் கொடுத்தால், நானும் துயரமும் வருத்தமும் அடைவேன். இறைவன் தீயவர்களைத் தண்டிப்பதில்லை; நல்லவர்களுக்கு வெகுமதி அளிப்பதுமில்லை. வெகுமதியும் தண்டனையும் அவரவர்கள் கர்மாவினால்தான் பெறுகிறார்கள். செயலையும் எதிர்ச் செயலையும் பற்றிய விதிதான் பயனை அளிக்கிறது. எனவே அதற்காக எவரையும் குற்றம் சொல்லக் கூடாது. இந்த விதி எப்பொழுதும் மாறாமலும் சிறிதும் தவறாமலும் செயலாற்றுகிறது. இந்த செயல், எதிர்ச் செயல் விதி பூதவுலகிலும் மனத்திலும் செயல்படுகிறது.

ஒரு டென்னிஸ் பந்து தரையில் மோதியவுடனே அதே வேகத்தில் மேலே எழுகிறது. இது செயல், எதிர்ச் செயல் விதியின் விளைவுதான். நான் தலையணையின் மீது அடித்தால் அது எதிர்

விளைவை ஏற்படுத்தும். நான் ஒரு மனிதனிடம் அன்போடு இன்சொல் பேசினால், அவன் என்னிடம் அன்பு செலுத்துவதோடு இன்சொல் பேசுவான். இதுவும் அந்த செயல், எதிர்ச்செயல் விதிதான்.

ஒருவன் அடக்கமும், மரியாதையும், பணிவும் நிறைந்தவனாக இருக்கும் போது, மற்றொருவன் ஏன் முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறான்? ஒருவன் நல்லொழுக்கம் படைத்தவனாக விளங்கும் போது, இன்னொருவன் ஏன் தீய ஒழுக்கம் நிறைந்தவனாக இருக்கிறான்? ஒருவன் உடல் வலிமையும், உடல் நலனும், ஆண்மையும் படைத்தவனாக இருக்கும் போது, வேறொருவன் ஏன் நோய்வாய்ப்பட்டு வருந்துகிறான்? ஒருவன் மனமகிழ்வோடு உல்லாசமாக இருக்கும் போது மற்றவன் ஏன் சோர்வோடு உற்சாகமில்லாமல் காணப்படுகிறான்? இவைகளுக்கெல்லாம் காரணம் செயலும் அதன் எதிர்ச் செயலும் குறித்த விதிதான். வேறு எவரையும் குற்றம் சொல்ல முடியாது. நம்முடைய கர்மத்தினால்தான் நமக்கு மகிழ்ச்சி, துயரம், இன்பம், துன்பம், லாபம், நஷ்டம், வெற்றி, தோல்வி ஆகியவை உண்டாகின்றன. செயல் எதிர்ச்செயல் விதி நம்மை அடக்கியாள்கின்றது. ஒருவருடைய பண்பு அந்த விதிக்கேற்றபடி அமையும். ஒருவருடைய மனப்பாங்கு அல்லது தனி இயல்பு முன்னர் அவருக்கிருந்த மனத்தின் இயக்கம் அல்லது செயலைப் பொருத்திருக்கும். எண்ணங்களும், பழக்கங்களும் மாறுவது போலவே, ஒருவருடைய மனப்பாங்கும் மாறுகிறது. நம்முடைய இப்போதைய பண்பு முன்னர் நாம் செய்த செயலுக்கேற்றபடி அமைந்துள்ளது. அது எதிர்காலத்தில் நம்முடைய இன்றைய செயலைப் பொருத்திருக்கும். மனிதன் தன்னுடைய மனப்பண்பையும் தலைவிதியையும் தானேதான் உருவாக்கிக் கொள்கிறான்.

அவனுடைய எண்ணங்கள், பழக்கங்கள், பண்பு, தலைவிதி ஆகியவற்றை உருவாக்கவோ அல்லது அழிக்கவோ அவனால் முடியும். செயல் எதிர்ச் செயல் பற்றிய விதி எங்கும் செயல்படுகிறது.

இந்த எதிர்ச் செயலைப் பற்றிய விதியை நன்கு உணர்ந்துள்ள ஒருவன் எப்பொழுதும் எவ்வித தீங்கும் செய்ய மாட்டான். அவ்விதம் தீங்கு செய்தால் அதன் எதிர் விளைவால் தனக்குத் துன்பமும் துயரமும் ஏற்படும் என்று அவனுக்குத் தெரியும். அவன் எப்பொழுதும் அறச் செயல்களையே செய்வான். ஏனென்றால் அவைகளால் அவன் அமைதியும், மகிழ்ச்சியும், வலிமையும், கலப்பற்ற அன்பும் பெறலாம்.

அருமை நண்பர்களே! இந்த விதியை நன்கு புரிந்துகொள்ளுங்கள். அதை மீறி நடக்க வேண்டாம். அந்த விதியைப் பின்பற்றிச் செயல் பட்டு அமைதியாக இருங்கள். பலவிதமான பெயர்களுக்கும் உருவங்களுக்கும் பின்னே மறைந்து நின்று, இவ்விதியை இயக்கிக் கொண்டிருக்கும் இறைவன், உன் எண்ணத்துக்கும், சொல்லுக்கும், செயலுக்கும் வழிகாட்டியாக அமையட்டும். இந்த விதியையும் இதை வகுத்துக் கொடுத்த இறைவனையும் போற்றுவோமாக!

## 20. சமன் செய்யும் விதி

இயற்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் சமன் செய்யும் விதி அல்லது ஈடுகட்டும் விதி செயல் படுகிறது. விதை வெடித்து முளைத்து அதிலிருந்து பெரிய மரம் தோன்றுகிறது. சமன் செய்யும் விதியின் அடிப்படையில் மரம் தோன்றுகிறது. விறகு எரிந்து சாம்பலாகிறது. ஆனால் அதிலிருந்து சமன் செய்யும் விதியின்படி சூடு தோன்றுகிறது.

சூட்டினால் தோன்றும் நெருப்பில் உணவுப் பொருள்கள் சமைக்கப்படுகின்றன. விஜயவாடா நகரில் வெப்பம் அதிகமாக இருந்தால், இமய மலையிலுள்ள கைலாச பர்வதத்திலும், உத்தர காசியிலும் குளிர் அதிகமாயிருக்கிறது. இதுதான் ச ம ன் செய்யும் விதி. ஓரிடத்தில் பத்து போக்கிரிகள் இருந்தால், அதை ஈடு செய்வதற்கு அங்கு சாத்வீக ஆத்மாக்கள் இருவர் இருக்கிறார்கள். பூரியில் வெள்ள அலைகள் உயரமாக எழும்பியிருந்தால், வால்டேரில் தாழ்வு அலைகள் இருக்கின்றன. இதுதான் சமன் செய்யும் விதி. இந்தியாவில் ப க ல ா க இருக்கும்போது அ மெ ரி க் கா வி ல் இ ர வ ா க இருக்கின்றது. போருக்குப் பின் அமைதியும், அமைதிக்குப் பின் போரும் மாறி மாறி வருகின்றன. த ண் ணீ ர் ஆ வி ய ா க மாறி இயந்திரத்தை இயக்குகிறது. சாடியிலுள்ள கந்தக அ மி ல ம் செலவாகிறது. ஆனால் விளக்கை எரிக்கும் மி ன் ச க் தி உண்டாகி ஒளி கிடைக்கிறது. இதுதான் சமன் செய்யும் விதி. இந்த ஈடுகட்டும் விதி மனத்தளவிலும் செயல் படுகிறது.

ஒவ்வொரு விளைவுக்கும் காரணம் இருக்கிறது. ஒவ்வொரு பின் விளைவுக்கும் முன் செயல் ஒன்று இருக்கிறது. காரணத்துக்கும் காரியத்துக்கும், முன் செயலுக்கும் அதன் பின் பயனுக்குமிடையே சரியான சமநிலை இருக்க வேண்டும். இந்த சம நிலையை சமநிலைப்படுத்தும்விதி சரியாக இருக்கும் படி பார்த்துக்கொண்டு, அமைதி, ஒற்றுமை, சம நிலை, இசைவு, நீதி ஆகிய அனைத்தும் இயற்கையில் நிலை பெறுமாறு செய்கிறது. ஆழ்ந்து சிந்தித்துப் பார். மீண்டும் மீண்டும் ஆழ்ந்து எண்ணிப் பார். அப்பொழுது இந்த சமன்செய்யும் விதி இயற்கையில் நடைபெறும் நி க ழ் ச் சி க ள் அனைவற்றிலும் மிகவும் அ ழ க ா ன முறையில் செயல்படுவதைக்

காண்பாய். அது அழியாதது, மாருதது, அந்த மாருத, அழிக்க முடியாத விதியை எதிர்த்து எவரும் செயல்பட முடியாது. ஒரு தீய செயலைச் செய்தால் அதற்கீடாக தீய பயனை அடைவாய்.

சில நேரங்களில் மனிதன் கீழ்க்கண்டவாறு முணு முணுக்கிருன்: ''கடவுள் நியாயமாக நடப்பதில்லை. நான் எப்பொழுதும் உண்மையாகவே நடக்கிறேன். நான் எவருக்கும் தீங்கு செய்வதில்லை. நான் எப்பொழுதும் மக்களுக்குத் தொண்டு செய்து கொண்டிருக்கிறேன். இருப்பினும் நான் இந்தக் கொடிய ஆஸ்த்மா நோயினுல் துன்பப்படுகிறேன்''. இவ்வாறு சொல்வது சரியல்ல. பகுத்தறிவுக்கு ஏற்றதுமல்ல. எப்பொழுதும் காரியத்தை அதற்குரிய காரணத்தோடு தொடர்புப்படுத்திப் பார்க்க வேண்டும். உனக்கு நேரிடும் துன்பம் எல்லாம் நியாயமற்றதாகவே தோன்றும். உனக்கு அது நேரிடக்கூடாது என்று நீ நினைக்கலாம். ஆனுல் அதன் காரணத்தை ஆராய்ந்தால், அது முற்றிலும் சரியானதென்றும், உன் செயலுக்கு ஈடு செய்ய ஏற்பட்டது என்றும் அறிவாய். அதன் பின் நீ மன அமைதி அடைவாய். அதற்குச் சில உதாரணங்களைப் பார்க்கலாம். அப்பொழுது நீ குறை கூறவோ வருத்தப்படவோ இடமிருக்காது. இந்த சமன் செய்யும் விதி எவ்வளவு அழகாக வேலை செய்கிறது என்பதைப் புரிந்து கொள்வாய். நம் வாழ்க்கையில் நடக்கும் நிகழ்ச்சிகள் சிக்கல்கள் நிறைந்தவையாயும் குழப்பமுள்ளவைகளாகவும் இருப்பதால், நாம் படும் அன்ருட துன்பங்களுக்கான உண்மையான காரணத்தை நம்மால் அறிய முடிவதில்லை. காரணத்தையும், இந்த விதி செயல்படும் முறையையும் நம்மால் அறிய முடியாவிட்டாலும் அதற்குரிய காரணம் இருக்கத்தான்

செய்கிறது. நம் அறிவாற்றல் குறைவாக இருப்பதால், அதற்கு முன் நடந்த செயலையோ துன்பத்துக்குரிய காரணத்தையோ நம்மால் அறிய முடிவதில்லை.

ஒரு மனிதன் தன் செயலுக்குரிய ஈடுகட்டும் பயனை இப்பிறவியிலோ அல்லது மறு பிறவியிலோ அனுபவிக்கலாம். முற்பிறவியோ, மறு பிறவியோ இல்லையென்றும், நம் வாழ்க்கை நம் பிறப்பில் தொடங்கி இவ்வுடல் இறக்கும் போது முடிவடைந்துவிடுகிறது, அதற்குமேல் ஒன்றுமில்லை என்றும் கருதுவோமானால், அறச் செயல்கள் செய்யும் நல்ல மனிதர்களுக்கும், தீச் செயல்களைச் செய்யும் கெட்டவர்களுக்கும் அவர்கள் செயல் களுக்குரிய பயன்கள் இல்லாமற்போகும். காரணம் காரியம், ஒரு நிகழ்ச்சி அதைப் பின் தொடரும் விளைவு என்னும் சங்கிலித் தொடர் அறுந்து போகும். எங்கும் பயங்கர அநியாயமே மலிந்திருக்கும். அவ்வாறிருக்க முடியாது. உன்னுடைய நிகழ்கால வாழ்க்கையை, முற்பிறவி, அடுத்த பிறவி ஆகியவற்றின் வாழ்க்கையோடு இணைத்துப்பார்த்து, இப்பிறவிக்கான வாழ்க்கையை இவை மூன்றும் சேர்ந்த தொடர் வாழ்க்கையோடு கணித்துப் பார்த்தால், முற்றிலும் நியாயமான முடிவுக்கு வரமுடியும். அப்போதுதான் வாழ்க்கை யின் நிகழ்ச்சிகளுக்குள் சமநிலை ஏற்படும்.

உன் இந்த வாழ்க்கை முற்பிறவியோடும் அடுத்த பிறவியோடும் நேரடியான தொடர் புள்ளது. நீ வெவ்வேறு உடம்புகளோடு பல பிறவிகள் எடுத்தாலும், உன் வாழ்க்கை தொடர்ந்து நடைபெறும் ஒன்றாகும். உன் ஆன்மாவின் எண்ணற்ற பிறவிகளை ஒன்றாக இணைக்கும் பொதுவான நூல் ஒன்றிருக்கிறது. தனிப்பட்ட ஆன்மாவின் வாழ்க்கை என்பது, அது

இவ்வுலகில் எடுக்கும் எண்ணற்ற பிறவிகளில் நடை பெறும் ஒன்ருகும். முற்பிறவி, இப்பிறவி, மறு பிறவி ஆகிய மூன்றுக்கும் இடையே நெருக்கமான தொடர்பு இருக்கிறது. சமன் செய்யும் விதி சரியான நியாயத்தோடும், இசைவோடும் சிறிதும் தவருமல் செயல்படுகிறது. பூதவுடல்தான் மாறு படுகிறது. ஆனுல் நிகழ்ச்சிகளும் சமன் செய்யும் விதியும் தொடர்ச்சியாக இடைவிடாமல் நடை பெறுகின்றன. மனிதனுடைய இன்றைய வாழ்க்கை, நேற்று, நாளை ஆகிய இரண்டோடும் தொடர்புள்ளது அதைப் போலவே இவ்வுலக வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியும் அதற்கு முன்னரும், பின்னருமுள்ள வாழ்க்கைகளோடு நெருக்கமான தொடர்புள்ளதாக இருக்கிறது. அப்பொழுதுதான் சரியான நியாயமும் சமநிலையும் இருக்கும்.

வாழ்க்கை என்பது இந்த உடல் பிறவி எடுத்ததிலிருந்து அது இறக்கும் போது முடிவடை யும் தனியொரு நிகழ்ச்சியாகக் கருதுவாயாளுல், வாழ்க்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கான சரியான விளக்கத்தையோ தீர்வையோ உன்னுல் காண முடியாது. இருளில் தடவித் திரியும் குருடனைப்போல் தேட வேண்டும். நல்ல மனிதன் ஒருவன் இப்பிறவியில் எவ்வித கெடுதலைச் செய்யாமலே துன்பப்படுகிருன். அது அவன் முற் பிறவியில் செய்த ஏதாவதொரு தீய செயலின் காரணமாக இருக்கலாம். அதற்கு ஈடு செய்யும் நற்பயனை அடுத்த பிறவியில் பெறலாம்.

கெட்டவன் ஒருவன் ஒவ்வொரு நாளும் பல தீய செயல்களைச் செய்துகொண்டே இருந்தாலும், இப்பிறவியில் இன்பத்தை அனுபவித்துக்கொண்டே மகிழ்ச்சியோடு இருக்கிருன். அது அவன்

முற்பிறவியில் செய்த நல்ல கர்மாவின் பயனுக இருக்கலாம். அவன் தீய செயல்களுக்கு ஈடு செய்யும் விளைவை அடுத்த பிறவியில் அனுபவிப்பான். அவன் அடுத்த பிறவியில் துன்பத்தை அனுபவிப்பான். ஈடு செய்யும் விதி எப்பொழுதும் தவருமலும் மாருமலும் செயல்படக் கூடியது.

ஆன்மாவின் முழு வாழ்க்கையை நோக்கும் போது இப்பிறவியில் உன்னுடைய வாழ்க்கை மிகவும் அற்பமானது. அது ஒரு கண நேரத்தைப் போன்றது. அது மிகவும் சிறிய பகுதியாகும். எந்த நிகழ்ச்சிக்குரிய, காரணத்தையோ அதற்கு முந்தைய நிகழ்ச்சியையோ அறிய முயலும்போது, ஆன்மாவின் நிரந்தரமான பல பிறவிகளில் நடந்த முழுவாழ்க்கையையும் ஆழமாக ஊன்றிக் கவனித்துப்பார்க்க வேண்டும். அப்பொழுதுதான், காரண காரியம், ஒரு நிகழ்ச்சி அதன் பின் விளைவு ஆகியவை களுக்கிடையே சரியான சமநிலை ஏற்படும். ஆன்மாவின் நிரந்தர வாழ்க்கையை நன்கு ஆராய்ந்து பார்க்க வேண்டும். ஈடு செய்யும் விதி ஆன்மாவின் முழு வாழ்க்கையிலும் பரவி அதைக் கட்டுப்படுத்துகிறது. இந்தப் பூதவுடலின் அழிவோடு வாழ்க்கை முடிவதில்லை. மறு பிறவி இருக்கிறது. இதற்கு முன்னரும் எண்ணற்ற பிறவிகள் இருந்திருக்கின்றன. ஆன்மாவின் முழு வாழ்க்கையையும் பரவலாக எண்ணிப் பார்க்க வேண்டும். அப்பொழுதுதான் நம் எண்ணத்தில் எவ்விதத் தடையும் இருக்காது. அப்போது வாழ்க்கையின் பல்வேறு வகையான சிக்கலும் குழப்பமும் நிறைந்த நிகழ்ச்சிகளுக்கான சரியான, மன அமைதியைத் தரும் தீர்வைக் காண முடியும். அதன் பின் எவ்விதமான முணுமுணுப்புக்கும், வருத்தத்துக்கும், தவருன எண்ணத்துக்கும் இடமிருக்காது.

## 21. தண்டனை விதி

ஒவ்வொரு தவறான செயல் அல்லது, குற்றத் துக்கு ஏற்ற தண்டனை 'தண்டனை விதி'யின்படி இருக்கின்றது. காரண விதி, செயல் எதிர்ச்செயல் விதி, தண்டனை விதி ஆகிய எல்லாம் இணைந்து செயல்படுகின்றன. மற்றவர்கள் பொருளைக் கொள்ளையிடும் ஒருவன் தன் பொருளையே கொள்ளையிடுகிறான். மற்றவர்களுக்குத் தீங்கு செய்யும் ஒருவன் தனக்கே முதலில் தீங்கு செய்து கொள்கிறான். மற்றவர்களை ஏமாற்றும் ஒருவன் தன்னையே ஏமாற்றிக்கொள்கிறான். ஒவ்வொரு தவறான செயலுக்கும் தண்டனை உண்டு. அது முதலில் உள்ளியல்பு அல்லது ஆன்மாவுக்கும், பின்னர் வெளிப்படையாக சந்தர்ப்பத்துக்குத் தக்க படி துன்பம், துயரம், இழப்பு, தோல்வி, நோய், துரதிருஷ்டம் அல்லது தீவினை ஆகிய உருவங்களில் இருக்கும்.

மனிதன் அறியாமையில் மூழ்கி இருக்கிறான். உணர்ச்சி வேகம், கோபம், பேராசை, பற்றுதல், கர்வம், வெறுப்பு ஆகியவை அவனை ஆட்டி வைக்கின்றன. அவனுடைய அறிவு நெறி தவறி விடுகிறது. அவன் பலவிதமான தீய செயல்களைச் செய்கிறான். நினைவாற்றலை இழந்துவிடுகிறான். தன்னலமும் பேராசையும் அவனுடைய அறிவை மூடி மறைத்துவிடுகின்றன. அவன் தான் என்ன செய்துகொண்டிருக்கிறான் என்பதையே அறிவ தில்லை. பின்னர் தன் செயலுக்கு வருந்துகிறான். புலனுறுப்புக்களின் கட்டுப்பாடு தேவை. அவன் தன்னுடைய அன்றாட வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு நிலையிலும், காரண விதி, செயல் எதிர்ச்செயல் விதி, தண்டனை விதி ஆகிய வற்றை மறக்காமல் நினைவில் வைத்துக்கொள்ள

வேண்டும். பிராணாயாமம், தியானம் ஆகியவற்றைப் பயின்று, அவனுடைய உணர்ச்சிகள், உணர்ச்சிவேகம் ஆகியவற்றைக் கட்டுப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் அவன் எவ்விதமான தவருன செயலையும் செய்ய மாட்டான்.

இறைவன் எவரிடமும் ஒருதலைப் பட்சமாகவோ, அநியாயமாகவோ நடந்துகொள்வதில்லை என்பது உன் நினைவிலிருக்கட்டும். உன்னுடைய தவருன செயல்களினுல்தான் உனக்குத் துன்பம் உண்டாகிறது. நல்ல பலன்களைத் தரும் விதைகளைப் பயிர் செய்து அதனுல் இவ்வுலகத்திலும் அதன் பிறகும் இன்பத்தைப் பெற ஆவன செய். இந்தப் பிறவியிலும் அதன் பின்னர் ஏற்படும் பிறவிகளிலும் துன்பத்தை விளைவிக்கும் விதைகளைப் பயிர் செய்யாதே. உன் அன்ருடக் கடமைகளைச் செய்வதில் கவனத்தோடு இரு. ஒவ்வொரு எண்ணத்தையும், சொல்லையும், செயலையும் நன்கு கவனி. எண்ணங்களின் அடித்தளத்திற்கே சென்று அவற்றைத் தூய்மைப்படுத்து. பிரார்த்தனை, ஜெபம், தத்துவ நூல்களைப் படித்தல், தியானம், தூய உணவு, ஆன்மீக ஆராய்ச்சி, சத்சங்கம் ஆகியவை உன் மனதைத் தூய்மையாக்கி இழிவான தீய எண்ணங்களை அங்கிருந்து நீக்கிவிடும். மௌன விரதத்தை மேற்கொள்வதால் உன்னுடைய பேச்சைக் கட்டுப்படுத்த முடியும். இயமம், நியமம், அஹிம்சை, சத்தியம், ஆஸ்தேயம், பிரம்மசரியம், அபரிக்ரஹம் ஆகியவற்றைப் பயிற்சி செய். சாத்வீக குணங்களை வளர்த்துக்கொள். எதிர்மறையான பண்புகளை அறவே நீக்கிவிட வேண்டும். இந்தப் பயிற்சிகளின் விளைவாக நீ எப்பொழுதும் தவறே செய்யமாட்டாய். சாத்வீக குணங்களின் ஆற்றல் எப்பொழுதும் நல்ல செயல்களை மட்டுமே செய்யும்படித் தூண்டும்.

ஆழ்ந்த நம்பிக்கையுள்ள கிறிஸ்தவர்களும், மதவாதிகளும் ஒரு மனிதன் இவ்வுலகில் பிறவி எடுப்பதற்கு முன்பே இறைவன் அவனுடைய தலை விதியை நிர்ணயித்துவிடுகிறார் என்று சொல்லுகிறார் கள். இதை யாரும் வாதத்திற்காகக் கூட ஏற்றுக் கொள்ள முடியாது. அதில் எவ்விதமான பொருளும் இல்லாத காரணத்தால் அதன் அடிப் படையே தகர்ந்துவிடுகிறது. மனிதன் பெருங் காற்றினால் இங்குமங்கும் அலைக்கழிக்கப்படும் வைக் கோலைப்போன்றாகிறான். அவனுக்கு எவ்வித சுய இச்சையும் உரிமையும் இருக்காது. இதனால் இறைவன் ஒருதலைப் பட்சமாகவும், நியாயமற்ற முறையிலும், தன்னிச்சையாக நடப்பது போலாகி விடும். மனிதனுடைய சுதந்திரமும் நல்லொழுக்க மும் சிதைந்து போகிறது. மனிதன் கைகால்கள் சங்கிலியால் கட்டுண்ட கைதியாகிறான். இறைவன் ஏன் ஒருவனை மகிழ்ச்சியோடும் மற்றொருவனை வருத்தத்துடனும் இருக்கச் செய்ய வேண்டும்? அவர் அவ்வளவு தன்னிச்சையாகவும் விவேகமற்ற வராகவும் நடந்துகொள்வாரா? ஒருவர் பிறப் பதற்கு முன்னரே எவ்வாறு இறைவனுடைய அருளைப் பெற முடியும்? அவர் அவ்வளவு ஒருதலைப் பட்சமானவரா? இறைவன் இரக்கமே வடிவானவர் என்றால் ஏன் மனிதர்கள் அனைவரையும் பெருந் தன்மையுடையவர்களாகவும், பண்புள்ளவர்களாக வும், மகிழ்ச்சியோடிருப்பவர்களாகவும், நல்லவர் களாகவும், நல்லொழுக்கமுடையவர்களாகவும், ஆன்மீகத்தில் பற்றுள்ளவர்களாகவும் படைக்கக் கூடாது? ஒருவன் ஏன் குருடனாகப் பிறக்கிறான்? பாவி ஒருவன் ஏன் பாவம் செய்யவேண்டுமென்று முன்னரே தீர்மானிக்கப்படுகிறது? அந்த மாதிரி படைப்பவரின் தன்னிச்சையான விருப்பத்தின் காரணமாக அவன் ஏன் துன்பப்படவேண்டும்?

எனவே அவர்கள் சொல்லும் ''பிறவிக்கு முன்னரே இறைவன் மனிதனின் தலை விதியைத் தீர்மானித்து விடுகிறான்'' என்ற கொள்கையை ஏற்றுக்கொள்வதானால், முன்னே கூறியதைப் போன்ற வினாக்கள் தோன்றி அவைகளுக்கு விடைகாணமுடியாத புதிர்களாகவே நின்றுவிடும். எனவே கர்மவிதி ஒன்றே நமக்கு மன அமைதியைத்தரும். அதுவொன்றே பகுத்தறிவுக்கு ஏற்ற முறையில் விடைகாண உதவும். அது மிகத் தெளிவான விளக்கத்தை அளிக்கிறது. ஒவ்வொருவனும் தன்னுடைய செயல்களின் பலன்களை அனுபவிக்கிறான் மனிதன் தன்னுடைய எண்ணங்கள் ஒழுக்கம் ஆகியவற்றால் தன் தலைவிதியை ஆக்கவும் அழிக்கவும் முடியும். அவன் விரும்பிய வண்ணமே செய்யலாம். அவன் இப்பிறவியில் கெட்ட மனிதனாக இருக்கலாம். ஆனால் தன் எண்ணங்களையும், பழக்கங்களையும், இயல்புகளையும், ஒழுக்கத்தையும் மாற்றிக் கொள்வதால் மறுபிறவியில் ஒரு நல்ல மனிதனாகவோ அல்லது ஞானியாகவோ விளங்கலாம். அவனுக்கு எப்படிவேண்டுமானாலும் இருக்கும் உரிமை இருக்கிறது. ஒவ்வொரு நிலையிலும் இந்த இரண்டில் எதைவேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். முன்னர் சொன்னபடி ''பிறப்புக்கு முன்னே தலைவிதி நிர்ணயிக்கப்படும்'' கொள்கையை ஏற்றுக்கொள்ள முடியாது. அது வலுவற்றதாகவும் எவரும் ஏற்றுக்கொள்ள முடியாததாகவும் இருக்கிறது.

கர்மாவைப்பற்றிய கொள்கை ஒன்றுதான் இவ்வுலகிலுள்ள நன்மை தீமைகளைப்பற்றிய விந்தையான பிரச்சினையைத் தீர்க்கவல்லது. அந்தக் கொள்கையால்தான் தேறுதல், போதுமென்ற மனம், நம்பிக்கையிழந்தவர்களுக்கும் துன்பப் படுகின்றவர்க்கும் தேவையான ஆறுதல் ஆகியவை

களை அளிக்கமுடியும். நமக்கு வாழ்க்கையில் ஏற்படும் இடையூறுகளையும் பிரச்சினைகளையும் அது தீர்க்கிறது. நம்பிக்கையிழந்தவர்களுக்கும் ஆதரவற்றவர்களுக்கும் அது உற்சாகத்தை அளிக்கிறது. அது ஒரு மனிதன் நல்ல முறையில் எண்ணவும், பேசவும், செயலாற்றவும் உதவுகிறது. இந்தப் பிரபஞ்ச விதியைப் பின்பற்றி நடக்கும் மனிதனுக்கு ஒளிமயமான எதிர்காலத்தைக் கொடுக்கிறது. மக்கள் அனைவரும் இந்த விதியைச் சரியாக உணர்ந்துகொண்டு, தங்கள் அன்றாட கடமைகளைச் சரிவரவும் கவனத்துடனும் செய்வார்களானால், அவர்கள் ஆன்மீக ஏணியில் மேலான நிலையை அடைவார்கள். அவர்கள் ஒழுக்கமும் நற்பண்பும் நிறைந்தவர்களாய், இன்பமும் அமைதியும் போது மென்ற மனமுமுடைய வாழ்க்கையை நடத்துவார்கள். அவர்கள் இல்லறமாகிய சுமையைப் பொறுமையுடனும், சகிப்புத்தன்மையுடனும் மனவலிமையுடனும் தாங்கிக் கொள்வார்கள். பிறவியிலும், செல்வ நிலையிலும், அறிவிலும், ஆற்றலிலும் ஏற்றத்தாழ்வுகளைக் காணும்போது அவர்கள் குறைகூற இடமிருக்காது. இம்மண்ணுலகத்திலேயே விண்ணுலகத்தைக் காணலாம். துன்பத்திலும் இன்பத்தையே காண்பார்கள். பேராசை, பொறாமை, வெறுப்பு, கோபம், காமம் ஆகியவை மறைந்துவிடும். எங்கும் அறமே மேலோங்கி நிற்கும். அமைதியும் செழிப்பும் நிறைந்த பொற்காலமே எங்கும் காணப்படும். இந்த விதியை நன்குணர்ந்துகொண்டு, அதன் வழியே நடப்பவன் பெரும்பேறு பெற்றவன். ஏனெனில் அவன் விரைவில் இறையுணர்வுபெற்று, இந்த விதியை இயற்றியவராகிய இறைவனோடு ஒன்றுபடுவான். அதன் பிறகு இந்த விதி அவனை எந்தவிதத்திலும் பாதிக்காது.

## 22. எதிர்ப்பு விதி

நீ எதைச் செய்தாலும் அல்லது செய்ய நினைத்தாலும், அதன் அடையாளம் சித்தம் அல்லது உன் மனதில் பதிகிறது. அந்த அடையாளம் சம்ஸ்காரம் எனப்படும். நீ பார்க்கும்போதும், கேட்கும் போதும், உணர்ந்தாலும், முகர்ந்தாலும், சுவைத்தாலும் இவ்வாறு சம்ஸ்காரங்கள் உண்டாகின்றன. சுவாசித்தல், எண்ணுதல், உணர்தல், விரும்புதல் ஆகிய செயல்கள் மனதில் அடையாளங்களை ஏற்படுத்துகின்றன. இந்த அடையாளங்கள் அழிக்கமுடியாதவை. இவைகளை சமாதி அல்லது மேலான உணர்வினுல்தான் முற்றிலும் மறையச் செய்ய முடியும். மனிதன் சம்ஸ்காரங்களால் உருவானவன். மனம் என்பது சம்ஸ்காரங்கள் அல்லது அடையாளங்கள் மொத்தமாகச் சேர்ந்திருப்பதால் உண்டானது. இந்த சம்ஸ்காரங்கள் தான் மனிதனை இந்த உலகுக்குத் திரும்பிவரச் செய்கின்றன. மறுபிறவி எடுப்பதற்கு அவைகளே காரணமாகின்றன. நினைவுகள், வெளிப்படையான அல்லது உள் மனதில் ஏற்படும் தூண்டுதல்கள் மூலம் இந்த சம்ஸ்காரங்கள் பெருத்த அலைகளின் வடிவத்தை எடுக்கின்றன. இவைகளெல்லாம் ஒன்ருகச் சேர்ந்த உருவம்தான் ஒரு மனிதனின் பண்பாகும். நீ நல்ல காரியங்களைச் செய்தால், உன் மனதில் நல்ல பதிவுகள் அல்லது அடையாளங்கள் இருக்கும். நீ நல்லொழுக்கமும் பண்பும் உடையவனுவாய். தீய செயல்களை செய்தால், உன் மனதில் தீய அடையாளங்களே பதிந்து, நீ தீய பண்பும் ஒழுக்கமும் உடையவனுவாய். மனதிலுள்ள நல்ல எண்ணங்கள் அல்லது அடையாளங்கள் நற்செயல்களைச் செய்யும்படி ஒரு மனிதனைத் தூண்டுகின்றன. அவ்வாறே நற் செயல்கள் மனதில் நல்ல அடையாளங்களை

உருவாக்குகின்றன. மனதில் நல்ல சம்ஸ்காரங்கள் நிறைய இருந்தால், நீ தீய செயல்களை செய்யவே மாட்டாய். உன்னிடம் நற்பண்பு நிரந்தரமாக அமைந்துவிடும். மாறன் அல்லது சாத்தான் எனப்படுபவன் உன்னை ஒன்றும் செய்ய முடியாது.

நீ செய்யும் செயல்கள் மனதில் சமஸ்காரங்களை ஏற்படுத்துகின்றன. அவை மீண்டும் மீண்டும் தோன்றுவதாலும், பழக்கங்களாலும் அவை நிரந்தரமாகப் படிகின்றன. இந்த இயல்புகள் பழக்கங்களாகவும், குணங்களாகவும் வளர்ச்சி பெறுகின்றன. இந்த இயல்புகள் அனைத்தும் ஒன்றாகச் சேர்ந்த அமைப்பு ஒரு மனிதனின் பண்பு அல்லது ஒழுக்கமாகிறது. கர்மம் இந்தப் பண்பை உருவாக்குகிறது. இந்தப் பண்பு உள்ளத்தை உருவாக்குகிறது. ஒரு மனிதனின் பண்பு தூயதாக வும் வலிமையுடையதாகவுமிருந்தால், அவன் உள்ளமும் தூய்மையாகவும் வலிமை மிகுந்ததாகவும் இருக்கும்.

பழக்கம் மனிதனின் இரண்டாவது இயல்பா கிறது எனப்படும். ஆனால் பழக்கம்தான் மனிதனின் இயல்பு முற்றிலுமாகிறது என்று நான் எப்பொழுதும் சொல்வேன். ஒருவன் பழக்கங்களைக் கட்டுப்படுத்துவது, அவன் இயல்பையே கட்டுப் படுத்துவதாகும். தூய எதிர்ப்பற்ற உள்ளத்தின் உதவியால், நம்மிடமுள்ள பழமையான தீய பழக்கங்களை, பயனுள்ளவையும், விரும்பத்தக்கவை யுமான பழக்கங்களாக மாற்ற முடியும். மன வலிமையற்றவனும் ஆண்மையற்றவனுமாகிய ஒரு மனிதன் பழக்கங்களுக்கு அடிமையாகிறான். பழக்கங்கள் நம்மோடு பிறந்தவை. எனவே அவைகளை நம் வாழ்நாளில் மாற்ற முடியாது என்று

எப்பொழுதும் எண்ணுகிருன். இது தவருன எண்ணமாகும். பழமையான, தீய பழக்கங்களை, நல்ல, பயனுள்ள, புதிய பழக்கங்களாக மாற்ற விரும்பினுல், நீ கடுமையாகப் போராடவேண்டும். பழைய பழக்கங்கள் மீண்டும் வரவும், எதிர்த்துப் போராடவும், நிரந்தரமாக நிலைத்திருக்கவும், அடிக்கடி தோன்றவும் முயற்சி செய்யும். நீ விழிப்புடனும், கவனத்துடனும், அவை மீண்டும் திரும்ப நேரிடும் என்று எதிர்பார்த்து எச்சரிக்கை யுடனும் இருக்க வேண்டும். இராணுவப் பாது காப்புத்தளத்தில் காவல்புரியும் போர்வீரனைப் போல், நீ விழிப்புடனும் எச்சரிக்கையுடனும் இருக்க வேண்டும். ''நண்பனே! எனக்கு உன் மனதிலும் உடலிலும் இருபது ஆண்டுகள் வாசம் செய்வதற்கு இடம் கொடுத்தாய். என்னுல் பல விதமான வசதிகளைப் பெற்று அனுபவித்தாய். இப்பொழுதுமட்டும் என்னை வெளியே விரட்ட ஏன் முயலுகிருய்? நீ மிகவும் கொடியவன். என் தாயாராகிய இயற்கையின் பெயரால், எனக்கு இங்கே இருப்பதற்கு எல்லவிதமான உரிமைகளும் உண்டு. மாயை என் மூலமாகத்தான் செயலாற்று கின்றது. உலக முழுவதும் பழக்கங்களால் தான் இயங்குகின்றது. பழக்கத்தின் வலிமை காரண மாகத்தான் மனிதன், தேநீர், காப்பி, மது, புகையிலை, புகைபிடிப்பது, சினிமா, நவீனங்கள், சூதாட்டம், சீட்டாட்டம் ஆகியவைகளை விடாமல் உறுதியாகப் பிடித்துக் கொண்டிருக்கிருன். நானில்லாவிட்டால், உலக முழுவதும் ஒன்று மில்லாமல் ஆவியாகப் போய்விடும். உன் உடலில் நான் இல்லாவிட்டால், இறைவனுடைய லீலை இயங்காது. எனவே நான் உன் உடலைவிட்டு வெளியே செல்லமாட்டேன்,'' என்று உன் பழைய பழக்கம் பிடிவாதமாகச் சொல்லும்.

இதுதான் எதிர்ப்பு விதி. தீய பழக்கத்தை அடியோடு ஒழிக்க விரும்பும் ஒருவன் கவன மில்லாமல் இருப்பானுல் பழைய பழக்கம் மீண்டும் தோன்ற முயற்சி செய்யும். முதலில் நீண்ட இடைவெளிகளில் தோன்றி, அதிக நேரம் நீடித்திருக்கும். பிறகு நீண்ட இடைவெளிகளில் தோன்றி, குறைந்த நேரம் இருந்து மறையும். ஆனல் நீ மன வலிமை பெறுவதால், அது படிப் படியாகக் குறைந்து முடிவில் முற்றிலும் அழிந்து விடும். அதன் பிறகு நல்ல பழக்கங்கள் மேலோங்கி விடும்.

புதிய நல்ல பழக்கம் ஒன்று ஒருமுறை தோன்றி ஞலும், அதை நிலைபெறச் செய்வதற்கு ஒருமுறை முயற்சி செய்வாயாஞல் அந்த நல்ல பழக்கம் படிப் படியாக வளர்ச்சியடையும். அது உடலிலும் மனதிலும் நிரந்தரமான இடத்தைப் பெறுவதற் காகப் பாடுபடும். அதில் முழு வெற்றியடைந்து பழைய கெட்ட பழக்கத்தை முறியடிக்கும் வரையில் அது தீவிரமாகப் பாடுபட்டுக் கொண்டே இருக்கும். இது இயற்கையின் மற்ருெரு விதியாகும். தெய்வீக மானதும் தெய்வீகமற்றதுமான இருவகைப்பட்ட வாழ்க்கை இயற்கையில் எப்பொழுதும் இருக்கிறது. உடலிலும் மனத்திலும் எப்பொழுதும் தேவாசுரப் போராட்டம் நடைபெற்றுக்கொண்டே இருக்கிறது. நீ கடுமையாகப் போராடிஞல், புதிய நல்ல பழக்கங்கள் விரைவில் நிலைபெறும். ஆன்மீகப் பாதையில் விரைவில் முன்னேற்றம் அடைவாய். தூய, வலிமையான, வெல்லமுடியாத உன் உள்ளம் முடிவில் வெற்றி பெறுவது உறுதி. இது எதை வேண்டுமாஞலும் செய்ய முடியும். அதன் ஆற்றல் விவரிக்க முடியாதது, விந்தையானது.

## 23. கர்மமும் சுதந்திரமும்

மனிதன் தான் செய்யும் காரியங்களில் எந்த அளவுக்குச் சுதந்திரமுள்ளவனாக இருக்கிறான் என்பதை வேதாந்தத்திலிருந்து நன்றாகப் புரிந்து கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் திருப்தி கரமான விடையையும் தீர்வையும் பெறமுடியும். மேலை நாடுகளில் இந்தப் பொருளைப்பற்றி, பல அறிஞர்கள் பல்வேறு கோணங்களிலிருந்து விவாதம் செய்து ஆராய்ந்து பார்த்துள்ளார்கள். இருந்தும் அவர்கள் ஒரு சரியான முடிவுக்கு வரவில்லை. அவர்கள் நிகழ்காலம் ஒன்றைப்பற்றியே ஆராய்ந் துள்ளார்கள். இது ஒரு வருந்தத்தக்க தவறாகும். நிகழ்காலம் என்பது அநந்தமான காலத்திலும் முடிவில்லாத நிரந்தமான வாழ்க்கையிலும் மிகச் சிறிய பகுதியாகும். அவர்கள் முடிவற்ற இறந்த காலத்தையும், முடிவில்லாத எதிர்காலத்தையும் கணக்கில் கொண்டு பார்த்தால், அமைதியற்ற மனதுக்கு அமைதியையும் ஆறுதலையும் அளிக்கும் தீர்மானமான முடிவுக்கு உறுதியாக வரமுடியும். ஒரு கேடயத்தின் ஒவ்வொரு பக்கத்தை மட்டுமே பார்த்த இரு வீரர்கள் அவைகளிலுள்ள நிறத்தைப் பற்றிச் சண்டையிட்டுக்கொண்ட கதையைப்போல, அரைகுறையான உண்மைகளை அறிந்த மக்கள் தங்களுக்குள் சச்சரவிட்டுக்கொண்டு பயனற்ற வாதங்களிலும் கருத்து வேற்றுமைகளிலும் ஈடுபடுகிறார்கள். அந்தக் கேடயத்தின் இரண்டு பக்கங்களையும் பார்த்த ஒருவன், ஒருபக்கத்தை மட்டும் பார்த்த இருவரின் சண்டையைத் தீர்க்க முடியும். அதுபோலவே உண்மை முழுவதையும் அறிந்த வேதாந்தி ஒருவரால்தான் மனிதன் தான் புரியும் செயல்களில் எந்த அளவுக்குச் சுதந்திர முள்ளவனாகிறான் என்ற உண்மையை அறிய

முயலும் மற்றவர்களின் வாதத்தைத் தீர்க்க முடியும்.

பிரபஞ்சத்திலுள்ள மற்றவைகளைப்போலவே மனித உள்ளமும் காரண விதிக்குக் கட்டுப்பட்டு செயல்படுகிறது என்று காரண காரிய விதியில் நம்பிக்கையுள்ளவர்கள் கூறுகின்றார்கள். மனித உள்ளத்துக்குத் தேவையான சுதந்திரமில்லாவிட்டால் நீதி சாஸ்திரமே சிதைந்துபோய்விடும். மனிதன் செய்யும் காரியங்களில் சுதந்திரமற்றவனாக இருந்தால், அவனுடைய செயல்களுக்குரிய விளக்கத்தை எவ்வாறு அறியமுடியும்? சுயவிருப்பமில்லாமல் பிறர் கட்டாயத்தின் காரணமாக அவன் ஒரு காரியத்தைச் செய்யும்போது அதற்குரிய நியாயமான பரிசையோ தண்டனையையோ அவனுக்கு எவ்வாறு வழங்கமுடியும்? அப்போது மனிதன் கை கால்கள் சங்கிலியால் இறுக்கிக் கட்டப்பட்டு ஒரு இயந்திரம் அல்லது மரக்கட்டை போன்றவனாகிறான். அவன் செய்யும் செயல்களுக்கு அவன் எவ்விதத்திலும் பொறுப்பேற்க முடியாது.

ஆன்மாவைப் பற்றிய தெளிவு ஒருவனை உணரும்படிச் செய்கிறது. சுதந்திரத்தைப் பற்றிய கருத்து ஒவ்வொரு மனிதனுடைய மனத்திலும் ஆழமாகப் பதிந்துள்ளது. ஆன்மாவைப் பற்றிய உணர்விலே அது மறைந்து நிற்கின்றது. உண்ண உணவின்றியும், மிகவும் துன்பமான நிலையிலிருந்த போதிலும், தான் சுதந்திரமாகச் செயல்படக் கூடியவன் என்ற எண்ணத்தை அவனுக்கு நினைவூட்டக் கூடிய ஒரு விந்தையான உணர்வு அவனுக்குள்ளே இருக்கின்றது. அவனுடைய மனம், மனப்பாங்கு, உணர்வுகள் ஆகியவற்றின் பின்னே எப்பொழுதும் சுயேட்சையாகவுள்ள ஆன்மா ஒன்று இருப்பதால், அவன் சுயேட்சையாகச் செயல்படக் கூடியவன் என்பதை உணர்கிறான். தற்காலிகமாக

இந்த உடலாகிய தசையாலாகிய கூட்டுக்குள்ளே அடைக்கப்பட்டு, கட்டுப்பட்டிருக்க வேண்டியிருக்கிறது என்று உணர்கிறுன். தான் மாயைக்கும் அறியாமைக்கும் அடிமை என்பது அவனுக்கு நன்ருகத் தெரியும். எனினும் தான் சுதந்திரமாகச் செயல்படக்கூடியவன் என்பதை அவனுக்குள்ளே இருக்கும் ஏதோவொன்று அவனுக்குச் சொல்கிறது.

அவனுக்கு இருவகைப்பட்ட உணர்வுகள் இருப்பதற்குக் காரணம் என்ன? ஏனெனில் உண்மையில் எங்கும் நிறைந்துள்ள ஞானத்தின் உருவம்தான் அவன். மிகவும் துன்பமான சூழ்நிலையில் வருந்தி உழைத்துக்கொண்டிருக்கும் போது கூட இந்த சுதந்திரத்தைப் பற்றிய எண்ணங்கள் அவனுக்குத் தோன்றுகின்றன. துன்பத்துடன் போராடிக்கொண்டிருக்கும் ஆன்மாவுக்கு உள்ளேயிருந்தும் ஊக்கமும் உற்சாகமும் கிடைக்கின்றது. சாகும் தருவாயில் ஒருவன் இருக்கலாம். மருத்துவர்களும் இனிமேல் நம்பிக்கையில்லை என்று சொல்லி இருக்கலாம். எனினும் உள்ளே இருக்கும் நுண்ணிய, மெல்லிய குரல், ''நான் அழிவற்றவன்; நான் சுதந்திரமுள்ளவன்,'' என்று அவனிடம் சொல்லுகின்றது. ''நான் கட்டுண்டவன் போல் தோன்றினுலும், நான் சுதந்திரமுள்ளவன். இந்த அடிமைத்தளை உண்மையானதல்ல. இது பொய்யானது,'' என்ற உள்ளுணர்வுடன் அவன் இருக்கிறுன்.

கர்மத்தைச் செய்வதில் ஒரு மனிதனுக்குள்ள சுதந்திரத்தைப்பற்றி பகவான் கீதையில் கூறியுள்ள சொற்களை இங்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

''ஒருவன் தன்னைத்தானே உயர்த்திக் கொள்ளட்டும். அவன் தன்னைத்தானே தாழ்த்திக் கொள்ளாமல் இருக்கட்டும். ஏனெனில் அவன்

த ன க் கு த் த ா னே நண்பனும், பகைவனும் ஆகிறான்.''

தன்னைத்தானே வெற்றிகொண்ட ஒருவன் தனக்குத்தானே நண்பனாகிறான். தன்னையே வெல்ல முடியாத ஒருவனுக்கு வெளியில் பகைவன் எவனுமில்லை. அவன் தனக்குத்தானே பகைவனாகிறான்''.

உபநிடதங்களும் இதே கருத்தைக் கீழ்க் கண்டவாறு பிரதிபலிக்கின்றன; ''விழித்துக் கொள்! எழுந்திரு! கற்றறிந்த ஆசானை அணுகி, கற்றுக்கொள்வாயாக.''

முடிவாக, செயல்படும் முறையில் மனிதன் சுதந்திரமுள்ள கர்த்தா ஆகிறான் என்பதை மீண்டும் குறிப்பிட விரும்புகிறேன். செயல் புரிவதில் அவன் சுதந்திரமுள்ளவன். அவனுடைய இன்றைய நிலை எப்படி இருந்தபோதிலும், சரியான முயற்சி, நேர்மையான எண்ணம் ஆகியவற்றின் உதவியால் அவன் போற்றுதற்குரிய எதிர்காலத்தை அடைய முடியும். நேர்மையான முயற்சியின் உதவியால் பலர் வெற்றியையும் மேன்மையையும் அடைந் திருக்கிறார்கள். அநேகர் வாழ்க்கையின் இலட்சி யத்தை அடைந்திருக்கிறார்கள். இது எல்லோருக் கும் பொருந்தும். மனிதன் எக்காலத்திலும் சுதந்திரமுள்ளவன்.

சுதந்திரம் உன் வாழ்க்கையின் இலட்சியமாக இருக்கட்டும்! மனிதனின் பிறப்புரிமையாகிய சுதந்திரத்தை அடைவதற்காக நாம் அனைவரும் நேர்மையான முறையில் முயற்சி செய்வோமாக! நமக்குள்ளே சாட்சியாக விளங்கும் பரப்ரம்மன் நம் செயல்கள் அனைத்துக்கும் நமக்கு வழிகாட்டியாக இருக்கட்டும்!

## 24. தர்ம, அதர்ம தத்துவம்

சரி அல்லது தவறு - தர்மம் அல்லது அதர்மம் ஆகிய இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள சொற்கள். அவைகளைச் சரியான முறையில் விளக்குவது கடினம். சில தனிப்பட்ட சூழ்நிலை களில் ''சரியானது எது?,'' ''தவறானது எது?'' என்பதைக் காண முடியாமல் ஞானிகள் கூடத் திகைப்படைகிறார்கள். அதன் காரணமாகத்தான் பகவான் கீதையில் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

''செயல் என்பது என்ன? செயலற்ற நிலை என்பதென்ன? ஞானிகள் கூட இங்கே குழப்பமடை கிறார்கள். ஆகவே 'நீ விடுதலை பெறுவதற்கு செய்ய வேண்டிய செயல் எது?' என்று நான் உனக்கு விளக்கமாகக் கூறுகிறேன். செயலின் உண்மையான இயல்பு, செய்யத் தகாத செயல், செயலற்ற தன்மை ஆகியவைகளைப் பற்றி நன்றாகத் தெரிந்திருக்க வேண்டும். செயலின் தன்மையைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். செயலில் செயலற்ற தன்மையையும், செயலற்ற தன்மையில் செயலையும் எவன் காண்கிறானோ, அவனே மக்களுள் சிறந்த ஞானி. அவன் ஒரு யோகி. அவன் செயல் கள் அனைத்தும் செய்யவல்லவன்.''

சரி, தவறு என்ற சொற்களை விளக்குகிறேன். வைசேஷக தத்துவத்தின் ஆசிரியரான கனடரிஷி. தம் நூலின் முதல் சூத்திரத்தில் கீழ்க்கண்டவாறு சொல்கிறார்: மிகவுயர்ந்த பேரின்பத்தையும் மேன்மையையும் அளிப்பதுதான் தர்மம். உன்னுடைய நிலையை உயர்த்துவதும், உன்னை இறைவனுக்கு அருகில் அழைத்துச் செல்வதும் சரியானது. உன்னைத் தாழ்ந்த நிலைக்குத் தள்ளு வதும், இறைவனை விட்டுத் தொலைவாக அழைத்துச்

செல்வதும் தவருனது. சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள கட்டளைகளுக்குச் சிறிதும் தவருமல் செய்யப்படுவது சரியானது. சாஸ்திரங்களிலுள்ள கட்டளைகளுக்கு விரோதமாகச் செய்யப்படுவது தவருனது.'' இந்த சொற்களின் பொருளை விளக்குவதற்கு உதவும் முறைகளில் இதுவும் ஒன்று. இறைவனின் திருவுள்ளப்படி செய்வது சரியானது; இறைவன் திருவுள்ளத்திற்கு மாருகச் செயல்படுவது தவருனது.

சில சந்தர்ப்பங்களில் இறைவனின் திருவுள்ளம் என்ன என்பதைச் சரிவர புரிந்துகொள்வது சாதாரண மனிதர்களுக்கு மிகவும் கடினம். அதனுல்தான் சாஸ்திரங்களையும், கற்றறிந்த பண்டிதர்களையும், உண்மையை அறிந்து தெரிந்தவர்களையும் அணுகி ஆலோசனை பெற வேண்டுமென்று அறிஞர்களான ஞானிகள் கூறுகிருர்கள். பல ஆண்டுகள் தன்னலமற்ற சேவை செய்தவனும், நீண்ட காலம் இறைவனை வழிபட்டு வருபவனுமாகிய தூய்மையான மனிதனுல், சில குறிப்பிட்ட காரியங்களைச் செய்ய விரும்பும்போது இறைவனுடைய திருவுள்ளம் என்ன என்பதைச் சரியாக அறிந்துகொள்ள முடியும். தனக்குள்ளே இருந்து அந்த மெல்லிய குரலைக் கேட்க முடியும். சாதாரண மக்கள் இந்த தெய்வீகக் குரலைக் (இறைவன் குரலை) கேட்க முயற்சி செய்யக்கூடாது. அவர்கள் தங்கள் தூய்மையற்ற மனதின் குரலையே இறைவன் குரல் என்று தவருக எண்ணிவிடக் கூடும். தாழ்ந்த நிலையிலுள்ள அவர்கள் மனம் அவர்களை ஏமாற்றிவிடும்.

மனதுக்கு மேன்மை, இன்பம், அமைதி ஆகியவற்றைத் தருவது சரியான செயலாகும்; மனதுக்கு சோர்வு, துன்பம், அமைதியற்ற நிலை ஆகியவற்றைக் கொடுப்பது தவருன செயல்.

செயல்களில் சரியானது எது, தவருனது எது என்று எளிதில் அறிந்துகொள்ள உதவும் வழி இது. தன்னலம் நம் அறிவை மறைத்து விடுகின்றது. ஒருவனுக்குச் சிறிதளவு தன்னலம் இருந்தாலும் அவனுல் சரியானது எது தவருனது எது என்று கண்டுபிடிக்க முடியாது. இதைச் செய்வதற்குத் தூய்மையான, நுண்ணிய, கூர்மையான அறிவு தேவை. கீதையின் பதினெட்டாவது அத்தியா யத்தில் சத்வ, ராஜஸ, தாமஸ குணங்களைப் பற்றி கீழ்க்கண்டவாறு விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

வேலை முறையைப் பற்றியும், துறவைப் பற்றியும், செய்ய வேண்டியது எது, செய்யத் தகாதது எது, அச்சம், அச்சமின்மை, பந்தம், விடுதலை ஆகியவைகளைப் பற்றியும், அறியும் அறிவு சாத்வீகமானது.

தர்மம், அதர்மம் ஆகியவைகளைப் பற்றியும், செய்யவேண்டிய அல்லது செய்யத்தகாதவைகளைப் பற்றியும் தவருக புரிந்துகொண்டுள்ள அறிவு ராஜஸமானது.

அறியாமையில் மூழ்கி, தர்மம் அதர்மம் ஆகியவைகளைத் திரித்து நேர்மாருகக் காண்பது மாகிய அறிவு தாமஸமானது என்பதை அறிந்து கொள், அர்ச்சுனு!

நேர்மையான நெறியில் செல்லவிரும்பும் மாணுக்கர்களுக்கு உதவும் வகையில் இன்னும் பல் வேறு விளக்கங்கள் அறிஞர்களால் கொடுக்கப் படுகின்றன. ''மற்றவர்கள் உன்னை எவ்வாறு நடத்தவேண்டுமென்று நீ விரும்புகிருயோ, அவ்வாறே நீயும் அவர்களிடம் நடந்து கொள்,'' என்று விவிலிய நூலில் கூறப்பட்டுள்ளது. இது ஒரு நல்ல அறிவுரை. சதாசாரம் அல்லது நல்லொழுக்கத்தின் சாரம் முழுவதும் இங்கே

கொடுக்கப்பட்டுள்ளது. இதைக் கவனமாக அனுசரிக்கும் ஒருவன் எந்தத் தவறையும் செய்ய மாட்டான். அஹிம்சா பரமோ தர்ம:— துன்ப மிழையாமைதான் மிகவுயர்ந்த அறம். எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றிலும் அஹிம்சையைத் தவறுமல் கடைப்பிடிக்கும் நிலையை ஒருவர் அடைந்துவிட்டால், அவர் எப்பொழுதும் எவ்வித மான தவறுன செயலையும் செய்யமாட்டார். அதனுல்தான் பதஞ்சலி முனிவர் தம்முடைய ராஜ யோக தத்துவத்தில் அஹிம்சைக்குச் சிறப்பான இடத்தைக் கொடுத்திருக்கின்ருர். இமயம் அல்லது தன்னடக்கப் பயிற்சியில் அகிம்சைக்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. மற்றவர்களுக்கு இன்பமும் மகிழ்ச்சியும் கொடுப்பதுதான் சரியானது; மற்றவர்களுக்குத் துயரமும் வருத்த மும் தருவது தவறுனது. அன்ருடம் மற்றவர் களிடம் நடந்துகொள்ளும் முறையில் இதைப் பின்பற்றுவதால் ஆன்மீகப் பாதையில் முன்னேற்றம் பெறலாம். உனக்கு அவமானத்தை யும் பயத்தையும் உண்டாக்கும் செயலைச் செய்யக் கூடாது. இந்த விதியைப் பின்பற்றுவது உனக்குப் பாதுகாப்பைத் தரும். உன் பகுத்தறிவுக்கும் மனசாட்சிக்கும் தகுதியான விதியை ஏற்றுக் கொண்டு, அதைக் கவனத்துடனும் நம்பிக்கை யுடனும் பின்பற்று. அதனுல் நீ மேன்மை அடைந்து நிரந்தரமான பேரின்பநிலையைப் பெறுவாய்.

இப்பொழுது வேருெரு முக்கியமான விஷயத்தைப்பற்றிச் சொல்கிறேன். இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்திலேயே ‘சரி’, ‘தவறு’ என்ற சொற்கள் ஒன்றுக்கொன்று தொடர் புடையவை என்று கூறியிருக்கிறேன். செய்யும் காலம், குறிப்பிட்ட சூழ்நிலைகள், சாதி, வாழ்க்கை நிலை ஆகியவைகளுக்கேற்றபடி அவை மாறுபடும்.

ஒழுக்கம் என்பது சந்தர்ப்பத்துக்கேற்றபடி மாறிக் கொண்டே இருக்கும். பகைவனைக் கொல்வது ஒரு க்ஷத்திரிய அரசனுக்குச் சரியான செயலாகும். அந்தணனும், துறவியும் ஆபத்துக் காலத்தில் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கூட எவரையும் கொல்லக் கூடாது. அவர் சகிப்புத் தன்மையையும் பிறரை மன்னிக்கும் இயல்பையும் தவறாது கடைப்பிடிக்க வேண்டும். அரசாங்கத்தி லுள்ள அதிகாரி ஒருவரால் அநியாயமாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ள ஒரு மகாத்மா அல்லது தன்னுடைய குருவின் உயிரைக் காப்பாற்றுவதற் காகப் பொய் சொல்லுவது சரியானது. இந்தச் சமயத்தில் பொய்யும் மெய்யாகிறது. பலருக்குத் தீங்கு விளைவிக்கும் மெய்கூடப் பொய்யாகும். வழிப்போக்கர்களைக் கொலை செய்யும் ஒரு கொள்ளைக்காரனைக் கொல்வது அகிம்சையே. இம்சையும் சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் அகிம்சையாகிறது.

## 25. விதைத்த வண்ணமே அறுவடை செய்வாய்

உலகம் நன்கு நிலைபெற்ற விதிகளின்படி நடக்கிறது. எதிலும் குழப்பமேயில்லை. தற்செய லாகவோ, எதிர்பாராமலோ எதுவும் நடப்பதில்லை. நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக முறைப்படி நடக்கின்றன. எல்லாவற்றிலும் ஒருமைப்பாடும் இசைவும் சிறப்பாகக் காணப்படுகின்றன. குழந்தை வளர்ந்து சிறுவனாகி வாலிப வயதை அடைந்து, மக்களைப்பெற்று, முதுமைப் பருவத்தை அடைந்து மரணமடைகிறான். குழந்தை தகப்பனாகி, தகப்பன் குழந்தையைப் பெறுகிறான். மனிதனுக்கு மனிதனும், குதிரைக்குக் குதிரையும், பூனைக்குப்

பூனையும், நாய்க்கு நாயும், குரங்குக்குக் குரங்கும் தவருது பிறப்பது எப்படி? விதை முளைத்து, தண்டு, கிளை, பூ ஆகியவைகளுடன் வளருகிறது. அதில் உரிய பருவத்தில் பழம் பழுத்து, விதை தோன்றுகிறது. ஒரு பழத்தின் விதையிலிருந்து, அதுதோன்றிய மரத்தைப்போன்றே வேருெரு மரம் உண்டாகிறது. ஒரு மாமரத்தின் விதையிலிருந்து ஆப்பிள் மரம் முளைக்காது. மாமரத்தின் விதையிலிருந்து மாமரமும், ஆப்பிள் மரத்தின் விதையிலிருந்து ஆப்பிள் மரமும் மட்டுமே ஏன் முளைக்கின்றன? இது மிகவும் விந்தையானது. இந்த விந்தையான நிகழ்ச்சிகளுக்குப்பின்னே ஒரு விந்தையான ஆற்றல் செயல்படுகின்றது. அந்த விந்தையான, எங்கும் நிறைந்த ஆற்றல் அல்லது அறிவுக்குப் பெயர்தான் இறைவன் என்பது. நெல் விதைப்பவன் நெல்லை அறுக்கிருன். பாசிப்பயறு விதைப்பவன் பாசிப்பயறு அறுவடை செய்கிருன். ஆரஞ்சுப் பழம் பயிர் செய்பவன் ஆரஞ்சுப் பழங்களையே அறுவடை செய்கிருன். தான் விரும்பும் பொருளை அறுவடை செய்வதற்காக அதன் விதையை விதைக்கிருன். அவ்வாறே மனிதன் தீய செயல்களைப் பயிர் செய்து, துன்பமாகிய பயனை அறுவடை செய்கிருன். அறச் செயல்களைச் செய்பவன் நற்பயன்களை அறுவடை செய்கிருன். ஒருவன் அவன் செய்யும் கர்மா அல்லது செயல்களுக் கேற்றபடியே பயன்களை அறுவடை செய்கிருன்.

ஒருவன் அர்சனுகவும் மற்ளுெருவன் பிச்சைக் காரனுகவும், ஒருவன் அறிவாளியாகவும் மற்ளுெருவன் முட்டாளாகவும், ஒருவன் செல்வந்தனுகவும் மற்ளுெருவன் ஏழையாகவும், ஒருவன் எப்போதும் உடல் நலத்துடனும், மற்ளுெருவன் இடைவிடாது நோய்வாய்ப்பட்டும், ஒருவன் அழகாகவும் மற்ளுெருவன் விகாரமாகவும், ஒருவன்

கொடியவனுகவும் மற்ருெருவன் சாதுவாகவும், ஒருவன் பத்து வயதில் இறப்பதும், மற்ருெருவன் தொண்ணூறு வயதில் இறப்பதும் ஆக இருக்கும் இத்தகைய நிகழ்ச்சிகள் எவ்வாறு நடைபெறு கின்றன? இது பரம்பரைக் குணத்திஞலா? இல்லை. இதற்கெல்லாம் கர்மத்தின் செயல்தான் காரணம். முற்பிறவியில் ஏராளமாக அறம் செய்தவன் அரசனுகப் பிறந்திருக்கிருன். கர்மத்தைப் பற்றிய தத்துவம்தான் இவற்றைப் பற்றி அழகாகவும் திருப்தியாகவும் விளக்கிக் கூற முடியும். பகவான், இதைப்பற்றி கீதையில் கீழ்க்கண்டவாறு விளக்க மாகக் கூறுகிருர்:

குந்தியின் மகனே! ஒருவன் இந்த உடலைவிட்டு நீங்கும்போது எந்தப் பொருளைப்பற்றி எண்ணிக் கொண்டே இறக்கின்ருனே, அவன் அதைப் பற்றியே இடைவிடாது சிந்தித்துக் கொண்டே இருந்த காரணத்தால், அதையே சென்றடைகிருன்.

அறியாமை, ஆசை, தன்னலத்தோடு கூடிய செயல் ஆகிய மூன்றும்தான் மனிதனை பிறப்பு இறப்பு என்னும் சுழலோடு பிணைத்து வைக்கும் மூன்று கிரந்திகள் அல்லது முடிச்சுகளாகும். மனிதன் முதலில் ஒரு போர்வை வேண்டும் என்று ஆசைப்படுகிருன். ''குளிர் மிகவும் கடுமையாக இருக்கிறது. ஒரு போர்வை வேண்டும்'' என்று ஆசையுடன் சொல்கிருன். அதன் பிறகு 'அது எங்கே கிடைக்கும்?' என்று எண்ணிப்பார்க்கிருன். உள்ளூரிலேயே இருக்கும் கடையில் வாங்க முடிவு செய்கிருன். பணத்தை எடுத்துக் கொண்டு, கடைக்குப்போய் போர்வையை வாங்குகிருன். முதலில் அவனுக்கு ஆசை உண்டாயிற்று. அதன் பின் எண்ணம் தோன்றியது. அதன் பிறகு கடைக்குச் சென்று, போர்வையை வாங்குவதாகிய கர்மா அல்லது செயல் நடைபெற்றது. எனவே

ஆசை, எண்ணம், செயல் ஆகிய மூன்றும் ஒன்ருக இணைந்து நடைபெற்றன. ஆசையும் எண்ணமும் (மனதுக்கு) உள்ளே நடைபெறும் செயல்கள். செயல் என்பது வெளிப்படையாக நடைபெறுகின்றது. ஒரு மனிதனுக்கு நல்ல ஆசைகள் ஏற்பட்டால், அவனுக்கு நல்ல எண்ணங்கள் உண்டாகும். அதனுல் நல்ல செயல்களைச் செய்வான். ஒரு மனிதனுக்கு கெட்ட ஆசைகள் உண்டானுல், அவனிடம் கெட்ட எண்ணங்கள் தோன்றி அவன் கெட்ட செயல்களைச் செய்கிருன். மனிதனுக்குள்ள எண்ணங்கள்தான் அவன் பண்பை உருவாக்குகின்றன. இரக்கம், அன்பு, சகிப்புத் தன்மை, ஈகை, மற்றவரைப் புரிந்து கொள்ளும் தன்மை ஆகிய எண்ணங்களை ஒருவன் மனதில் வளர்த்துக் கொள்ளுவானுனுல், இவைகளை அவன் பண்பாட்டிலும் சமுதாயத்திலுள்ள மற்றவர்களோடு அவன் பழகும்போதும் வெளிப்படுத்துகிருன். மண்ணில் விதை விதைக்கும்போது கவனிக்க வேண்டிய விதியே இதற்கும் பொருந்தும். இரக்கமாகிய நல்ல பண்பை விதைக்கும் ஒருவன், இரக்கமாகிய பயனை நல்ல முறையில் அறுவடை செய்கிருன். அவன் இரக்கம் நிறைந்தவனுகிருன். கொடுமையை விதைக்கின்றவன், கொடுமையையே ஏராளமாக அறுவடை செய்கிருன். அவன் கொடிய செயல்களைச் செய்கிருன். நல்ல பழக்கங்களையும் எண்ணங்களையும் வளர்த்துக்கொள்வதால், ஒருவன் தன்னுடைய பழக்கங்களையும், எண்ணங்களையும் பண்பையும் மாற்றிக்கொள்ள முடியும். எண்ணம்தான் உடலைச் செயல்புரியத் தூண்டுகிறது. ஒவ்வொரு செயலுக்குப் பின்னேயும் ஒரு எண்ணம் இருக்கிறது. அந்த எண்ணத்துக்குப் பின்னே ஆசை இருக்கின்றது.

ஆசைகள் உன் எண்ணங்களை அடக்கியாளாமல் பார்த்துக்கொள். எல்லா விதமான ஆசைகளும் உன்னை உணர்ச்சிவசப்படும்படி தூண்டும் போது ஏமாந்துவிடாதே. ஆசை தோன்றும் போது, நன்கு சிந்தித்துப் பார். ''இந்த குறிப்பிட்ட ஆசையினால் கிடைக்கும் பொருள் அதிக இன்பமும் குறைந்த துன்பமும் உனக்குத் தருமா?'' என்று பகுத்தறிவோடு ஆராய்ந்துபார். அப்படியில்லாவிடில், அந்த ஆசையை ஒதுக்கித் தள்ளிவிடு. ஆசை உன்னுடைய எண்ணத்தை மீறிக்கொண்டு செயல்படும்படி அனுமதிக்கக் கூடாது. ஆசையை அடக்கியாளும் ஆற்றலை உனக்குள்ளே சிறிது சிறிதாக வளர்த்துக் கொள்ள வேண்டும். அடக்கியாளப்பட்ட ஆசை உன்னுடைய உள்ள ஆற்றலாக மாறிவிடுகிறது. பலர் ஆசையின் ஆற்றலுக்கு இறையாகி, காற்றில் அலைபடும் வைக்கோலைப் போல் இங்குமங்கும் ஆதரவின்றி அலைக்கழிக்கப் படுகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்கது. ஆசைகளையும் எண்ணங்களையும் கட்டுப் படுத்தியவன் உண்மையில் மிகவும் ஆற்றலும் மகிழ்ச்சியுமுள்ளவன்.

அறிவோடிருக்கக் கற்றுக்கொள். பொருள்களைப் பகுத்தறியும் பயிற்சியும், எண்ணங்களையும் ஆசைகளையும் அடக்கியாளும் பயிற்சியும் கற்றுக் கொள். உன் எண்ணங்களை விழிப்புடன் கவனி. மனமாகிய தொழிற்சாலையின் வாயிலுக்குள் எவ்விதமான கெட்ட எண்ணங்களையும் நுழைய அனுமதிக்காதே. அவற்றை முளையிலேயே கிள்ளி எறிந்துவிடு. எப்பொழுதும் புனிதமான உயர்ந்த எண்ணங்களையும் ஆசைகளையுமே மனதில் வைத்திரு. புனிதமற்ற தீய எண்ணங்களையும் ஆசைகளையும் வெளியேற்றி விடு. ஆன்மீகத் தெளிவு பெறுவதற்கான வேட்கையைப் பெருக்கிக்

கொள். வலிமை பொருந்திய புனிதமான இந்த ஆசை மற்றெல்லா உலகியல் ஆசைகளையும் அழித்து விடும். கர்ம தத்துவத்தை சரியாகப் புரிந்துகொள். அறியாமையாகிய தளையை அறுத்தெறிந்துவிட்டு ஆன்மீகத் தெளிவைப் பெற முயற்சி செய். அதன் பிறகு கர்ம விதியின் கட்டுப்பாட்டுக்கு வெளியே வந்துவிடுவாய். உயிருடனிருக்கும் போது விடுதலை பெற்ற ஞானி (ஜீவன் முக்தர்) யாவாய். இது தான் வாழ்வின் மிகவுயர்ந்த இலட்சியம். உன்னுடைய மிகவுயர்ந்த கடமை இதுதான். மற்ற கடமைகள் எல்லாம், உன்னுடைய கர்வம், அறியாமை, வீழ்ச்சி ஆகியவற்றின் காரணமாக நீயாகவே உன் மீது சுமையாக ஏற்றுக்கொண்டவை யாகும்.

## 26. மனிதனும் சுற்றுப்புறமும்

ஒரு மனிதன் அவனுடைய சுற்றுப்புறத்தி லுள்ள அமைப்பால் உருவாக்கப்படுகிறான் என்று சொல்லப்படுகிறது. அது உண்மையல்ல. நாம் இதை நம்பமுடியாது. ஏனென்றால் உண்மை இந்தக் கூற்றுக்கு மாறாகவே இருக்கிறது. உலகில் தோன்றிய மிகப் பெரிய மனிதர்களில் அநேகர் ஏழ்மையிலும் மிகவும் மோசமான சூழ்நிலைகளிலும் பிறந்தவர்கள். குப்பங்களிலுள்ள குடிசைகளிலும், வசதியற்ற சுற்றுப்புறங்களிலும் பிறந்த அநேகர் உலகத்திலுள்ள மிகப்பெரிய பதவிகளுக்கு உயர்வு பெற்றிருக்கிறார்கள். அரசியல், கவிதை, இலக்கியம் ஆகிய துறைகளில் அவர்கள் பேரும் புகழும் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் மிகச் சிறந்த அறிவாளிகளாகவும் உலகுக்கே வழிகாட்டும் கலங் கரை விளக்கங்களாகவும் இருந்திருக்கின்றார்கள். இதற்கு எவ்வாறு விளக்கம் கூறப்போகிறீர்கள்?

சென்னை உயர் நீதி மன்றத்தில் முதல் இந்திய நீதிபதியாகப் பணியாற்றிய சர். டி. முத்துசுவாமி அய்யர் மிகவும் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தவர். அவர் இரவில் தெரு விளக்கு வெளிச்சத்தில் படிக்க வேண்டியிருந்தது. அவருக்கு வீட்டில் தேவையான உணவு இல்லை. கிழிந்து போன ஆடைகளையே உடுத்தினார். கடினமாகப் பாடுபட்டு, மேன்மை அடைந்தார். வலிமையான உள்ளம், இரும்பு போன்ற மன உறுதி ஆகியவற்றின் காரணமாகச் சுற்றுப்புறச் சூழ்நிலையை விட உயர்ந்து மேன்மை பெற்றார்.

மேலை நாடுகளில் காலணி தைக்கும் தொழிலாளிகள், மீன் பிடிப்பவர்கள் ஆகியவர்களின் மக்கள் நாட்டில் மிகவுயர்ந்த பதவிகளுக்கு உயர்வு பெற்றுள்ளார்கள். தெருக்களில் காலணிகளுக்கு மெருகேற்றியவர்களும், மதுக்கடைகளில் பீர் விற்றவர்களும், உணவு விடுதிகளில் சமையல் வேலை செய்தவர்களுமான சிறுவர்கள் புகழ்பெற்ற கவிஞர்களாகவும், திறமைமிக்க பத்திரிகையாளர்களுமாகச் சிறப்படைந்திருக்கிறார்கள். ஜான்சன் என்பவர் மிகவும் வசதியற்ற சூழ்நிலையில் பிறந்தவர். கோல்டுஸ்மித் என்பவர் ஆண்டுக்கு நாற்பது பவுண்டு வருமானத்தோடு திருப்தி அடைய வேண்டியிருந்தது. சர் வால்டர் ஸ்காட் என்பவர் மிகவும் ஏழை. அவர் குடியிருப்பதற்கே இடமில்லை. ஜேம்ஸ் ராம்ஸே மாக்டனல்ட் என்பவருடைய வாழ்க்கை குறிப்பிடத்தக்கது. அவர் மிகவும் முயற்சி உடையவர்; ஏழ்மையிலிருந்து உயர் பதவிக்கு உயர்ந்தவர். வயலில் கூலிவேலை செய்வதிலிருந்து தொடங்கி பிரிட்டிஷ் நாட்டின் பிரதம மந்திரி ஆனார். முதன் முதலில் அஞ்சல் உறைகளின் மேல் முகவரி எழுதும் வேலையில் சேர்ந்து, வாரம் ஒன்றுக்கு பத்து ஷில்லிங் வீதம் ஊதியம் பெற்றார்.

தேநீர் வாங்குவதற்குக்கூடக் காசின்றி, அதற்குப் பதிலாகத் தண்ணீர் குடித்தார். மூன்று பென்னி கொடுத்து எளிய உணவை ஒருநாளில் ஒருமுறை மட்டுமே உண்டார். மாணவ—ஆசிரியராக வேலை செய்தார். அரசியலிலும் அறிவியலிலும் அவருக்கு ஆர்வம் அதிகமிருந்தது. அவர் ஒரு பத்திரிகை யாளராகவும் பணியாற்றினார். சரியான முயற்சி யின் விளைவாகப் படிப்படியாக உயர்ந்து பிரதம மந்திரியானார்.

அத்வைதக் கொள்கையைப் பரப்பியவரும், ஆன்மீகச் சிங்கம்போன்றவரும், மிக்க அறிவாளி யுமாகிய ஸ்ரீ சங்கராச்சாரியார் வசதியற்ற சூழ் நிலையிலும் சுற்றுப்புறத்திலும் மிகவும் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தார். இவற்றைப்போன்றே ஆயிரக்கணக்கான எடுத்துக்காட்டுகள் இருக் கின்றன. எனவே வசதியற்ற சூழ்நிலைகள் எதிர் காலத்தில் மிகவும் சிறந்த அறிவாளிகளாக விளங்கக் கூடியவர்களுக்குள்ளே மறைந்திருக்கும் சிறப்பையும் மேன்மையையும் அடக்கி ஒடுக்க முடியாது என்பதும், ஒருவர் இடைவிடா முயற்சி, நேர்மை, செயலில் அக்கரை, எஃகு உள்ளம், வலிமை, தளராத உறுதி ஆகியவற்றின் துணை யோடு தம்முடைய சுற்றுப்புறச் சூழ்நிலைகளையும் கடந்து மேன்மைபெற முடியும் என்பதைத் தெளி வாக உணருகிறோம்.

ஒவ்வொரு மனிதனும் சில சம்ஸ்காரங்கள் அல்லது அடையாளங்களோடு பிறக்கிறான். மனம் என்பது ஒன்றும் எழுதப்படாத வெற்றுக் காகிதம் போல் இருப்பதில்லை. முன்பிறவியின் எண்ணங்கள், செயல்கள் ஆகியவற்றின் பதிவுகள் அல்லது அடையாளங்கள் அதன்மேல் ஆழமாகப் பதிந்திருக் கும். சம்ஸ்காரங்கள் என்பன கண்ணுக்குப் புலப் படாமல் மறைந்துள்ள ஆற்றல்களாகும். இந்த

நல்ல சம்ஸ்காரங்கள் ஒரு மனிதனுடைய விலைமதிப் பற்ற சொத்துக்கள். வசதியற்ற சூழ்நிலைகளில் வசித்தாலும், விரும்பத்தகாத, வெளியிலிருந்து வரும், அவனுக்கெதிரான, சக்திகளிலிருந்து இந்த சம்ஸ்காரங்கள் அவனைப் பாதுகாக்கும். அவைகள் அவனுடைய வளர்ச்சிக்கும் மேன்மைக்கும் உதவி செய்யும். பகவான் கீதையில் அர்ச்சுனனுக்குக் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்:

''குருவம்சத்தினரின் இன்பமே! அர்ச்சுனா! ஒருவன் முற்பிறவிக்குரிய இயல்புகளை மீண்டும் இப்பிறவியில் பெறுகிறான். அவைகளின் உதவியால் அவன் மீண்டும் மேன்மைபெறப் பாடுபடுகிறான்.''

எனவே வாய்ப்புகளைத் தவறவிடாதே. வாய்ப்புகள் அனைத்தையும் பயன்படுத்திக்கொள். ஒவ்வொரு வாய்ப்பும் உன்னுடைய மேன்மைக் காகவும் வளர்ச்சிக்காகவும்தான் ஏற்பட்டுள்ளது. தெருவோரத்தில் ஒரு நோயாளி அனாதையாகக் கிடப்பதைக் கண்டால், அவனை உன் முதுகின் மீதோ அல்லது ஒரு குதிரை வண்டியிலோ அருகிலுள்ள மருத்துவமனைக்கு எடுத்துக் கொண்டுபோ. அவனுக்குச் சேவை செய். அவனுக் குச் சூடான பாலோ, தேநீரோ, காபியோ கொடு. தெய்வீக உணர்வோடு அவன் கால்களுக்கு மருந்து போடு. எங்கும் நிறைந்து, எல்லாம் உணர்ந்து உடலுக்குள்ளுறையும் இறைவன் அவனுக்குள்ளும் இருப்பதை உணர்ந்துகொள். அவன் கண்களின் ஒளியிலும், அவன் குரல் ஒலியிலும், அவன் மூச்சிலும், நாடித்துடிப்பிலும், நுரையீரலின் அசைவிலும் தெய்வீகத்தை உணர்ந்துகொள். உனக்குள் இரக்கத்தையும் அன்பையும் பெருக்கிக் கொள்ளவும், உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ளவும், வெறுப்பு, அன்பின்மை, பொறாமை ஆகியவற்றை நீக்கிக்கொள்ளவும் இறைவன்

இந்த நல்வாய்ப்பை உனக்கு அளித்திருக்கிறார். சிலநேரங்களில் உனக்குத் தைரியமில்லாதபோது இறைவன் உனக்கு இந்தமாதிரி சூழ்நிலையை உண்டாக்கி நீ உன் உயிரையும் பொருட்படுத்தாது, தைரியத்தோடும் நிலைமைக்கேற்ற புத்தியோடும் செயல்படும்படியாகச் செய்வார். உலகப் புகழ் பெற்ற பெரியோர்களும் அறிஞர்களும் தங்களுக்குக் கிடைத்த வாய்ப்புகள் அனைத்தையும் மிகவும் நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்டார்கள். மக்களுக்கு வாய்ப்புகளை கொடுப்பதன் மூலம் இறைவன் அவர்களுடைய மனதை நன்கு உருவாக்குகிறான்.

உன் பலவீனத்தில்தான் உன் வலிமை இருக்கிற தென்பது ஞாபகமிருக்கட்டும். ஏனென்றால் அப்போதுதான் நீ உன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு விழிப்புடன் இருப்பாய். ஏழ்மையில் அதற்குரிய நன்மைகள் இருக்கின்றன. அதனால் அடக்கம், வலிமை, சகிப்புத்தன்மை, விடாமுயற்சி, போராட்டம் ஆகிய உணர்வுகள் பெருகும் செல்வத்தினால் சோம்பல், கர்வம், பலவீனம், மந்தநிலை இவைபோன்ற தீய பழக்கங்கள்தான் அதிகமாகும்.

வசதியற்ற சூழ்நிலையைப் பற்றி முணு முணுக் காதே. உன் மனதிலே ஒரு உலகத்தை உண்டாக்கிக் கொள். அதில் உனக்கேற்ற சூழ் நிலையை உருவாக்கிக்கொள். வசதியற்ற சூழ் நிலையில் மேன்மைபெற முயற்சி செய்யும் ஒருவன் உண்மையில் மிகவும் வலிமை பொருந்திய மனிதனாக விளங்குவான். அவனை எவராலும் அசைக்க முடியாது. அவன் மிகவும் உறுதி யானவன். அவன் வலிமையான நரம்புக் கட்டுகளை உடையவன். மனிதன் உண்மையில் அவனுடைய சுற்றுப் புறத்தாலோ அல்லது சூழ்நிலையாலோ

உருவாக்கப்படுவதில்லை. அவனுடைய ஆற்றல்கள், எண்ணங்கள், நற்செயல்கள், சரியான முயற்சிகள் ஆகியவற்றின் மூலம் சுற்றுப்புறத்தையும் சூழ்நிலையையும் கட்டுப்படுத்தி தேவையானபடி மாற்றி அமைத்துக் கொள்ள முடியும். சரியான முயற்சி தலைவிதியைக் கூட மாற்றிவிடும். அதனால் தான் வசிஷ்டரும் பீஷ்மரும் புருஷார்த்தம் (சரியான முயற்சி) என்பது, தலைவிதியை விட மேலானதென்று கூறியுள்ளார்கள். எனவே, அருமைச் சகோதரர்களே! இயற்கையை வென்று அழியாத ஆன்மாவிலே நிலைபெற்று இன்பம் அடைவீர்களாக!

## 27. மறு பிறப்பு

மறு பிறப்புக் கொள்கையை இன்றைய மக்கட் கூட்டத்தினரால் பெரும்பான்மையினர் ஒத்துக் கொள்கின்றனர். வலிமை மிக்க கிழை நாட்டு மக்களும் அதை உண்மையென்று கருதுகின்றார்கள். எகிப்து நாட்டின் பழங்கால நாகரிகம் இக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டிருந்தது. பின்னர் அது பிளேடோ, பிதாகோரஸ், எம்பிடோகிள்ஸ், வர்ஜில், ஓவிட் அவர்கள் வாயிலாக கிரீஸ், இத்தாலி ஆகிய நாடுகளில் பரவியது. 'அறிவு அனைத்தும் முற்பிறவி நிகழ்ச்சிகளின் நினைவூட்டலே' என்று பிளேட்டோ சொல்வதால், அவர் கொள்கை மறுபிறப்பை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்கிறது. அவரைப் பின்பற்றிய பிளாட்டிநஸ், பிரர்க்ளஸ் என்பவர்களும் அதை முழுவதுமாக ஏற்றுக் கொண்டார்கள். நூறாயிரக்கணக்கான இந்துக்களும், பௌத்தர்களும், ஜைனர்களும் தத்தம் தத்துவம், மதம், அரசாங்கம், சமுதாய நிறுவனங்கள் ஆகியவற்றின் ஆதாரமாகவே இந்தக் கொள்கையை அமைத்துக் கொண்டார்கள். பாரசீக உஞகி மதத்தில் அது முக்கியமான

கொள்கையாக இருந்தது. மரணத்துக்குப் பின் ஆத்மா வேறொரு உடலுக்குள் செல்கிறது என்ற தத்துவம் ட்ரூயிடுகளின் மதத்தில் முக்கியமான கொள்கையாக இருந்தது. கெல்டுகள், கால்கள், பிரிட்டானியர் ஆகிய இனத்தவர்களாலும் இது வற்புறுத்திக் கூறப்பட்டது. அரேபிய தத்துவ ஞானிகளிடையே இது மிகவும் பிடித்தமான கொள்கையாக இருந்தது. ரோமானியர், ட்ரூயிடுகள், ஹீப்ருக்கள் ஆகியவர்களின் சடங்குகளும் சம்பிரதாயங்களும் இந்த நம்பிக்கையை வற்புறுத்திக் கூறின. பாபிலோனியாவைப் பிடித்தவுடன் யூதர்களும் இதை ஏற்றுக் கொண்டார்கள். யோவான் ஸ்நானன் அவர்களுக்கு எலிஜாவின் அவதாரமாகவே காணப்பட்டார். இயேசுவை, யோவான் ஸ்நானன் அல்லது பழைய தீர்க்கதரிசி ஒருவரின் மறுபிறவியாகவே கருதினார்கள். ரோமன் கத்தோலிக்கர்கள் மரணத்துக்குப் பின் ஆன்மாவைத் தூய்மைப்படுத்துவதாகக் கூறுவது கூட இந்த அடிப்படையிலேதான் என்று சொல்லலாம். ஷெல்லிங், ஷோபனேர், கான்ட் போன்ற தத்துவ ஞானிகள் இந்தக் கொள்கையை ஆதரித்துள்ளார்கள். ஜூலியஸ் முல்லர், டோர்னர், எட்வர்ட் பீச்சர் போன்ற மதவாதிகளும் இதை வற்புறுத்திக் கூறியுள்ளார்கள். இன்றும் அது கிழக்கு இந்தியா, பர்மா, சயாம், சைனு, ஜப்பான், டார்டார், திபேத், சிலோன் ஆகிய நாடுகளிலும் ஏறக்குறைய உலக மக்கட் தொகையில் குறைந்தது மூன்றில் இரண்டுபங்கு பேருக்கிடையே நம்பப்பட்டு வருகிறது.

இந்துக்களின் கொள்கையாகிய மறுபிறப்பைப் பற்றிய தத்துவத்தை நம்ப மறுக்கிறவர்களுக்கு ஒரு சவால் விடப்பட்டுள்ளது. சமீபத்தில் சாந்திதேவி என்ற சிறுமி டெல்லி நகரில் தன்னுடையமுன்பிறவி

நிகழ்ச்சிகளைப் பற்றி விளக்கமாகச் சொன்னாள். அது டெல்லி, மதுரா ஆகிய நகரங்களிலும் உத்திர பிரதேசம் முழுவதும் பெருங்கிளர்ச்சியை ஏற்படுத்தியது. அவளுடைய பேச்சைக் கேட்க மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தனர். முன்பிறவியில் அவளுடைய கணவர் குழந்தை என்று, அச்சமயம் மதுராவில் வசித்து வந்த இருவரை அடையாளம் காட்டினாள். பணம் வைத்திருந்த இடத்தையும், அப்போதிருந்த கிணறு தற்சமயம் மூடப்பட்டிருந்த இடத்தையும் காட்டினாள். அவள் சொன்னவை எல்லாம் சரிபார்க்கப்பட்டன. அவை சாட்சிகளால் உண்மையென்று ஒத்துக் கொள்ளப் பட்டன. ரங்கூன், சீதாப்பூர் இன்னும் வேறு இடங்கள் ஆகியவற்றில் இம்மாதிரி சம்பவங்கள் நடந்ததாகக் கூறப்படுகின்றன. இந்த மாதிரி நிகழ்ச்சிகளில் தனியொருவனின் ஆன்மா அல்லது உயிர், பழைய ஆவிவடிவமான உடலுடன் உடனே மறுபிறவி எடுத்துவிடுகிறது. அதன் காரணமாகத் தான் முன்பிறவியின் நிகழ்ச்சிகள் நினைவுக்கு வருகின்றன. முன்பிறவி அனுபவங்களுக்கேற்ற வாறு புதிய மனத்தையும் ஆவிவடிவமான உடலை மாற்றி அமைத்துக் கொள்வதற்கு ஏற்ற அளவில் நீண்ட காலம் ஆன்மா மனவுலகில் தங்கியிருப்ப தில்லை.

பிதாகோரஸும் மற்ற தத்துவஞானிகளும் ஆன்மாவின் மறுபிறப்பைப் பற்றிய கொள்கையை இந்திய நாட்டிலிருந்துதான் பெற்றிருக்கிறார்கள். ஆறும் நூற்றாண்டில் வாழ்ந்த பிதாகோரஸ் ஆவிகள் உடல் விட்டு உடல் பாயும் கொள்கையைப் பற்றிக் கூட போதித்தார். மற்றும் அவர் புலால் உணவை மறுக்கும்படிக் கூறிய நமக்கு வியப்பாக இருக்கிறது. தன் சீடர்களை மரக்கறி உணவையே உண்ணும்படி ஆலோசனை கூறினார்.

குழந்தை தாய்ப்பால் குடிப்பதும் வாத்துக் குஞ்சு நீந்துவதும் ஆகியவை தானுகவே செய்யும் செயல்கள், இம்மாதிரி முற்பிறவியில் நடந்த செயல் களின் பதிவுகள் மனதில் பதிந்து இருப்பதன் விளைவாகத்தான் நடைபெறுகின்றன என்பதை நிரூபிக்கின்றன. நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் உள் மனதில் அடையாளங்களைப் பதிவு செய்து விடுகிறது. இதுதான் பின்னர் நினைவுக்குக் காரணமாகிறது. இதனுல் நினைவு புதிய செயல் களுக்கும், அடையாளங்களுக்கும் வழிகாட்டுகிறது. இந்தச் சுழற்சி மரம், விதை ஆகியவற்றின் உதாரணத்தைப் போலவே முடிவில்லாமல் நடை பெற்றுக் கொண்டே இருக்கிறது.

ஆசைகளுக்கு ஆரம்பமும் இல்லை, முடிவும் இல்லை. தொடர்ந்து இருக்க வேண்டும் என்பது நிலையானது. அனுபவங்களுக்கும் தொடக்கமில்லை. 'அஹம்' அல்லது 'நான்' என்பது இல்லாத காலத்தைக் குறிப்பிட்டுச் சொல்ல உன்னுல் முடியாது. இந்த 'நான்' என்ற உணர்வு இடை விடாமல் தொடர்ந்து இருந்து கொண்டே இருக் கிறது. இதிலிருந்து நமக்கு முற்பிறவிகள் இருந்திருக்கின்றன என்பதை யூகித்தறியலாம்.

ஒவ்வொருவருக்கும் மரணபயம் இருக்கிறது. உலகுக்கே பொதுவான இந்த அனுபவத்திற்குக் காரணம் இம்மாதிரி அனுபவம் முன்னரே இருந்திருக்கிறது என்பதால்தான். சிறு குழந்தை கூட கீழே விழுகின்ற மாதிரி இருக்கும்போது தன் தாயின் கழுத்திலுள்ள நகையை உறுதியாகப்பற்றிக் கொள்வது, இந்த பயம் அச்சிறு குழந்தைக்கும் இருக்கிறது என்பதைக் காட்டுகிறது.

சிறுவயதிலேயே மிகவும் அறிவுள்ளவர்களாக விளங்குகின்றவர்களைப் பார்க்கிறோம். ஐந்து வயது சிறுவன் பியானோ அல்லது வயலின் வாசிப்பதில் மிகவும் திறமையுள்ளவனாக இருக்கிறான். பதினைந்காவது வயதிலேயே பகவத் கீதைக்கு விளக்கவுரை எழுதிய ஞான தேவரைப் பற்றி நாம் அறிவோம். கணிதத் துறையில் இளம் வயதிலேயே மிகவும் திறமை காட்டிய சிறுவர்களும் இருக்கிறார்கள். சென்னையில் இருந்த சிறுவன் ஒருவன் தன்னுடைய எட்டாவது வயதிலேயே கதா காலட்சேபங்களை நடத்தி இருக்கிறான். இவைகளை எல்லாம் எப்படி விளக்கலாம்? இவைகள் இயற்கையின் விபரீதச் செயல்கள் இல்லை. ஆவிகள் ஒரு உடலிலிருந்து வேறொரு உடலில் புகும் கொள்கையை அடிப்படையாகக் கொண்டுதான் இந்த நிகழ்ச்சிகளை விளக்க முடியும். இப்பிறவியில் இசையோ, கணிதமோ கற்றுக் கொள்வதால் ஒரு மனிதனின் மனதிலுண்டாகும் பதிவுகள், அடுத்த பிறவிக்கும் தொடர்ந்து எடுத்துச் செல்லப்பட்டு, சிறுவயதிலேயே அக்கலையில் மிகவும் திறமையுள்ளவனாக விளங்குகிறான்.

மறுபிறப்புக் கொள்கை இந்து மதம், பௌத்த மதம், ஜைன மதம் ஆகியவைகளுக்குப் பொதுவானது. அது என்ன கொள்கை? ஒரு ஆன்மா இப்பிறவியில் தன் வாழ்க்கையைப் புதிதாகத் தொடங்குவதில்லை. நீண்ட காலம் பல பிறவிகள் எடுத்த அனுபவத்தோடு, இதற்குப் பிறகு பல பிறவிகள் எடுத்து, முடிவில் இறைவனோடு ஒன்றுபடுகிறது.

'நான் என்பது நான்' என்ற எண்ணம் உண்டாவதற்கு மூளையின் எந்தப் பகுதியின் அலைவு உதவுகிறது? இம்மாதிரி எண்ணத்தை அறியும் செயல்

தொட்டிலிலிருந்து இடுகாடு வரை மாறுபடுவதில்லை. குழந்தைப் பருவத்திலிருந்து முதுமைப் பருவம் வரையில், மூளையிலுள்ள அணுக்கள் முழுதும் மாறுதலடையும் வரையில் இந்த எண்ணம் எவ்வித மாறுபாடும் அடைவதில்லை. ''நான்'' என்பது ஆன்மா. இந்த ஆன்மாவினுல் நினைவு சாத்தியமாகிறது. அதற்கென்றே தனிப்பட்ட உணர்வு இருக்கின்றது. அது வேறெதையும் சார்ந்ததல்ல. அது தனித்தியங்கும் ஓர் உணர்வு ஆகும். 'ஆற்றல் வீணுகாமல் சேமிக்கப்படுகிறது'' என்ற அறிவியல் உண்மை பௌதிக உலகுக்கு மட்டுமன்றி ஆன்மீக உலகுக்கும் பொருந்தும். ஒரணுவைக் கூட புதிதாக உண்டாக்க முடியாது அல்லது அழிக்க முடியாது. அது போன்றே ஒரு ஆன்மா புதிதாக உண்டாவதோ அல்லது அழிவதோ இல்லை. இவ்வுலகிலுள்ள எந்த ஆற்றலாலும் அதை அழிக்க முடியாது.

ஒருவர் தான் செய்யும் பாவத்தைப் பற்றிய பிரச்னைக்கு முடிவு காண்பதற்கு சரியான தீர்வை அளிப்பது மறு பிறப்புக் கொள்கை ஒன்றைத் தவிர வேறெதுவும் இல்லை. என்னுடைய முன்னோர்களில் ஒருவர் செய்த தவறுக்காக நான் துன்பம் அனுபவிக்க வேண்டும் என்பதைப் போன்ற அநீதி வேறெதுவும் இவ்வுலகில் இருக்க முடியாது. ஒருவன் செய்த தவறுக்காக அவனைத் தவிர வேறு எவரையும் குறை சொல்லக் கூடாது.

இவ்வுலகில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகள், அநீதி, தீமைகள் இவற்றைக் காணும்போதும் அவற்றிற்கெல்லாம் ஒரு தீர்வு காண விரும்பும் போதும், மறுபிறப்புக் கொள்கை நமக்கு உதவி செய்கிறது. உலகில் ஒருவன் செல்வந்தனுகப் பிறந்திருக்கும்போது மற்ருெருவன் ஏன் ஏழை

யாகப் பிறந்திருக்கிறான்? மத்திய ஆப்பிரிக்காவில் மக்களையே அடித்துத் தின்னும் காட்டு மிராண்டி களிடையே ஒருவன் பிறந்திருக்கும் போது, மற்றொருவன் ஏன் இந்திய நாட்டில் அமைதியான சூழ்நிலையுள்ள பகுதியில் பிறக்கிறான்? இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தவரின் தன்னிச்சையைப் பற்றி நம்பும் ஒருவர் கூட, அவரைப் பற்றி கெட்ட எண்ணம் கொண்டவராகக் குறை கூறுதிருக்கும் பொருட்டு இந்தக் கொள்கையை நம்பியாக வேண்டும்.

இந்தக்கொள்கை உண்மையானால், நம்முடைய முற்பிறவிகளைப் பற்றிய நினைவுகள் நமக்கு ஏன் இல்லை — என்று ஒரு சிலர் வாதம் செய்யலாம். இதற்குக் காரணம் நினைவாற்றல் நாளுக்கு நாள் குறைவதுதான். இப்பிறவியிலேயே குழந்தைப் பருவத்தில் நடந்த சம்பவங்களைப் பற்றி நினைவு களிருப்பதில்லை. தவிரவும் ஒருவருக்கு முந்தைய பிறவிகளைப் பற்றிய நினைவுகள் இருக்குமானால், அதிக அளவு குழப்பங்களும் சிக்கல்களும் உண்டாகும். ஆன்மா முழு வளர்ச்சி பெற்று, அதை ஏற்கும் அளவுக்குத் தயாராகும் வரையில் இந்த அறிவு அதனிடமிருந்து மறைத்து வைக்கப் படுகிறது.

தியானத்தின் மூலமும் மேலான உணர்வின் மூலமும் சம்ஸ்காரங்கள் அல்லது மனத்திலுள்ள பதிவுகளை நேரடியாகக் காணக்கூடிய ராஜயோக முறையைப் பற்றிய ஞானம் உனக்கிருக்குமானால், உன் முற்பிறவியைப்பற்றி நினைவு கூரமுடியும். ''அடையாளங்கள் அல்லது பதிவுகளைக் கூர்ந்து கவனிப்பதன் மூலம், முற்பிறவியைப் பற்றிய ஞானம் உண்டாகிறது'' என்று பதஞ்சலி முனிவ ரின் ராஜயோக தத்துவத்தில் கூறப்பட்டுள்ளது.

பல பிறவிகளில் உனக்கேற்பட்ட அனுபவங்கள் உன்னுடைய உள் மனத்தில் பதிவுகள் அல்லது சேமிக்கப்பட்டுள்ள ஆற்றல்களாக தங்கி இருக் கின்றன. இசைத் தட்டுகளில் ஒலிப்பதிவுகள் கண்ணுக்குப் புலப்படாமல் நுண்ணிய முறையில் பதிவு செய்யப்பட்டுள்ளதைப் போல, அவைகள் மிகவும் நுண்ணிய முறையில் பதிவாகி இருக் கின்றன. இந்த நுணுக்கமான பதிவுகள், அலைகளின் உருவத்தைப் பெறுகின்றன. அப்பொழுது முன் அனுபவங்களைப் பற்றிய நினைவுகள் உண்டா கின்றன. ஆகையால் ஒரு யோகி ராஜயோகத்தில் கூறியுள்ளபடி, இம்முறையைப் பயிலுவாரானால், தன்னுடைய முற்பிறவியில் ஏற்பட்ட அனுபவங்களை எண்ணிப் பார்க்க முடியும்.

மனிதன் ஒரே பிறவியில் முழுமை அல்லது பூரண நிலையைப் பெற முடியாது. அவன் உள்ளம், அறிவு, செயல் ஆகியவைகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். அவன் தன் பண்பை முழுமையாக உருவாக்கிக் கொள்ள வேண்டும். இரக்கம், சகிப்புத் தன்மை, அன்பு, மன்னிக்கும் இயல்பு, சமநோக்கு, தைரியம் ஆகிய நற்பண்புகளையும் வளர்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த உலகமாகிய பள்ளியில் பற்பல நீதிகளையும் அனுபவங்களையும் அவன் கற்றுக் கொள்ள வேண்டி யிருக்கிறது. எனவே அவன் பல பிறவிகள் எடுக்க வேண்டியுள்ளது. ஆகையால் மறுபிறப்பு என்பது முற்றிலும் உண்மையானது. சிறிதுகால அளவே யுள்ள ஒருபிறவி என்பது உனக்கு முன்னும் பின்னும் மிகவும் நீளமாகவும் தொடர்ச்சியாகவுள்ளதுமான பிறவியின் மிகச் சிறிய பகுதியேயாகும். அவ்வளவு சிறிய பகுதியைக் கணக்கில் எடுத்துக் கொள்ள முடியாது. அதில் ஆன்மாவுக்கு மிகக் குறைந்த அளவு அனுபவமே கிடைக்கும்; சிறிதளவு வளர்ச்சி

யே அதற்கேற்படும். ஒரு பிறவியில் மனிதன் பல தீய செயல்களையும் மிகச் சில நல்ல செயல்களை மட்டுமே செய்கிறுன்.

இந்த ஒரு பிறவியிலேயே எல்லாம் முடிந்து கணக்கு தீர்க்கப்பட்டு விடுகிறது என்று கிறிஸ்தவர் கள் நம்புகிறுர்கள். அது எவ்வாறு முடியும்? மனிதனுடைய முடிவில்லாத எதிர்காலத்தை எப்படி இந்த மிகச் சிறிய, கணக்கில் கொள்ள முடியாத வாழ்க்கையைக் கொண்டே முடிவு செய்ய முடியும்? "இந்த வாழ்க்கையில் கிறிஸ்துவின் மீது நம்பிக்கையுள்ளவஞுல், விண்ணுலகில் நிரந்தர மான அமைதியைப் பெறுவான்; கிறிஸ்துவின்மீது நம்பிக்கையற்றவஞக இருந்தால், நிரந்தரமான வீழ்ச்சியடைந்து நெருப்புக் குழியில் தள்ளப்படு வான்," என்று சொல்லப்படுகிறது. பகுத்தறிவுக் கெட்டாத நம்பிக்கையல்லவா இது? மனிதனுக்கு தன்னைத் திருத்திக் கொண்டு, முன்னேற்றம் பெறு வதற்கு ஒருமுறையாவது வாய்ப்பளிக்கக் கூடாதா? மனிதன் தன் தவறைத் திருத்திக் கொண்டு, முன்னேற்றம் பெற்று, படிப்படியாக மேன்மை பெறுவதற்கு மறுபிறப்புக் கொள்கை அதிக அளவு வாய்ப்பளிக்கிறது.

ஆன்மா மூன்று வகையான கர்மாக்களுக்குட் பட்டது. இதற்குமுன் எடுத்த பல பிறவிகளில் சேர்த்து வைக்கப்பட்ட பாவ மூட்டை சஞ்சித கர்மம்; இப்பிறவி எடுக்கக் காரணமானதும், ஏற்கனவே பயனளிக்கத் தொடங்கிவிட்டதுமான கர்மாக்கள் பிராரப்தம் எனப்படும்; ஆகாமி என்பது இப்பிறவியில் செய்யப்படும் கர்மாக்கள் அல்லது செயல்கள் ஆகும். அவைகள் இனி அடுத்து வரும் பிறவிகளில் பயன் தரும். இறை யுணர்வு பெறுவதன் மூலம் சஞ்சித கர்மமும்,

ஆகாமியும் அழிந்து போகும். பிராரப்த கர்மத்தை இப்பிறவியில் அதன் பயன்களை அனுபவிப்பதின் மூலம் முடித்து விடலாம். பிராரப்த கர்மத்தின் விளைவாக ஒரு குழந்தை, குருடு, செவிடு அல்லது ஊமையாகப் பிறக்கிறது. நல்லவன் ஒருவன் துன்பப்படும் போது, கொடியவன் நல்ல வளமான நிலையிலிருக்கிறான். ஒரு வயதான பெண்மணி தனக்கு ஆதரவாக இருந்த ஒரே மகனை இழக்கிறாள். இவைகளுக்கெல்லாம் காரணம், ஒரு சிறிதும் தவறாமலும், மிகவும் துல்லியமாகவும், கணக்காகவும் செயல்படும் பிராரப்தம் தான்.

நீங்கள் அனைவரும் அறத்தோடு கூடிய தெய்வீக வாழ்க்கையை நடத்தி அதன் பயனாக முடிவில்லாத அமைதியையும் பேரானந்தத்தையும் அனுபவிப்பீர்களாக! பிறப்பு, இறப்பு என்னும் துன்பங்களிலிருந்து நீங்கள் அனைவரும் விடுதலை பெறுவீர்களாக!



## ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அருளிய தமிழ் நூல்கள்

| நூல் | விலை ரூ. |
|---|---|
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் | 7-00 |
| * ஞானயோகம் ... ... | 6-00 |
| தர்ம உபதேசம் ... ... | 5-00 |
| யோக சாரம் ... ... | 5-00 |
| குண்டலினி யோகம் ... ... | 5-00 |
| சிறுவர் சிறுமியர்களுக்கு தெய்வீக வாழ்க்கை | 5-00 |
| சிவானந்தரின் சத்சங்க உபதேசங்கள் | 5-00 |
| பிரம்மசர்யத்தின் ரகஸ்யம் ... | 4-00 |
| எண்ணத்தின் ஆற்றல் ... ... | 4-00 |
| பக்தியோகம் ... ... | 4-00 |
| நன்னெறிக் கதைகள் ... ... | 4-00 |
| குரு தத்துவம் ... ... | 3-00 |
| * ஸ்ரீமத் பகவத் கீதை ... ... | 3-00 |
| * வீட்டு வைத்தியம் ... ... | 2-50 |
| * கோபத்தைக் கட்டுப்படுத்தல் ... | 2-00 |
| * உபதேச மஞ்சரி ... ... | 2-00 |
| சிவானந்த வாணி ... ... | 2-00 |
| தெய்வீக குணங்கள் ... ... | 1-50 |
| கவலையிலாப் பெருவாழ்வு (சுவாமி சிதானந்தா) | 5-00 |
| தெய்வீக வாழ்க்கை ,, ,, | 5-00 |
| இராஜயோகச் சொற்பொழிவுகள் ,, | 5-00 |
| சீரிய வாழ்க்கைக்குச் சிறந்த வழிகாட்டி | 3-00 |
| * சிதானந்தரின் அருட் செய்தி ,, | 3-00 |
| சிதானந்தரின் சத்சங்கஉபதேசங்கள் ,, | 2-00 |
| நித்திய நெறிகள் ,, ,, | 2-00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 4-00 |

புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணமும் சேர்த்து அனுப்புங்கள். V. P. யில் அனுப்புவதில்லை.

---

ஆஸ்ரமத்தின் மாதாந்திர வெளியீடு :

''சிவானந்தர் அருள்வாக்கு'' வருட சந்தா ரூ. 5-00

காரியதரிசி, தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,
இராசிபுரம்-637408, சேலம் Dt.

---

* 1980 ஆம் ஆண்டு புதிய வெளியீடுகள்

